# அல்லி விஜயம்

முதலிய

சிறு கதைகள்



டி. எஸ். சொக்கலிங்கம்



பழனியப்பா பிரதர்ஸ்

சேப்பாக்கம் :: தெப்பக்குளம்
சென்னை-5 :: திருச்சிராப்பள்ளி

## உள்ளுறை

# அல்லி விஜயம்

"நாம் பிறந்த தமிழ்நாட்டைப் பார்க்க வேண்டுமென்று வெகு காலமாய்ச் சொல்லிக்கொண்டிருக்கிறீர்களே, இப்பொழுது போய்ப் பார்த்து வரலாமா?" என்று தேவலோகத்தில் ஒரு நாள் தோழி செங்கமலம் அல்லி ராணியைப் பார்த்துக் கேட்டாள்.

தமிழ்நாடு என்ற பெயரைக் கேட்டதும் அல்லி ராணியின் கண்கள் அகன்று விரிந்தன; முகம் மலர்ந்தது; தமிழ்நாட்டைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் தோன்றி அதிகரித்தது. "செங்கமலம், என்ன அற்புதமான யோசனை சொல்கிருய்! புறப்படலாம், வா" என்று கூறினுள்.

பழங்காலத்தில் இருந்த மாதிரி இல்லாமல் பெண்கள் ரொம்ப முன்னேறி யிருப்பதாகவும், டாக்டர்களாகவும், அதிகாரிகளாகவும், மந்திரிகளாகவும் கூடப் பெண்கள் தமிழ் நாட்டில் இருப்பதாகவும் அல்லி ராணி கேள்விப்பட்டிருந்தாள். அந்தக் காட்சிகளைக் காண வேண்டுமென்று வெகு நாட்களாகவே ஆசை கொண்டிருந்தாள். அவளும் செங்கமலமும் பழங் காலத்து முறையில் ஆடையாபரணங்கள் அணிந்துகொண்டு சென்னை மவுண்ட்ரோடுக்கு வந்து சேர்ந்தார்கள்.

காலையில் பத்து மணிக்கு மவுண்ட்ரோட்டில் மோட்டார்கள் இடைவெளி யில்லாமல் ஓடிக்கொண்டிருந்தன. இவற்றைப் பார்த்ததும் அல்லியும் செங்கமலமும் திகைத்துப் போய் அப்படியே நின்றுவிட்டார்கள். மோட்டார்கள் ரதங்கள் மாதிரியுமில்லை; அவைகளை இழுக்கக் குதிரைகளையும் காணவில்லை. எப்படி இந்த வண்டிகள் ஓடுகின்றன என்பது அவர்களுக்கு ஒரு புதிராய் இருந்தது. சில வண்டிகளைப் பெண்கள் ஓட்டிக்கொண்டு

போவதையும் சில பெண்கள் சைக்கிள்களில் போவதையும் பார்த்த அல்லி ராணிக்கு ஆச்சரியமும் சந்தோஷமும் அபரிமிதமாய் ஏற்பட்டன. இந்த ஆச்சரியத்தில் மூழ்கிப்போய் நிற்கும்போது, தங்கள் பின்னுல் ஒரு மோட்டார் ஓட்டி 'ஹார்ன்' அடித்துக் கொண்டிருந்தது அவர்களுக்குப் புரியவில்லை. 'ஹார்ன்' அடிப்பது எதற்காக என்பதே தெரியாதவர்களுக்கு, அந்தச் சப்தத்தைக் கேட்டு என்ன புரியப்போகிறது ?

நடை பாதை ஓரமாக இவர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். அப்பக்கமாக மோட்டாரை நிறுத்த வேண்டும் என்பதற்காகத்தான் அதை ஓட்டி வந்த பெண் 'ஹாரன்' அடித்துக்கொண்டிருந்தாள். எவ்வளவு 'ஹார்ன்' அடித்தாலும் நபர்கள் விலகாமல் நின்று கொண்டிருப்பதைப் பார்த்த பிறகு அவளுக்குக் கோபம் வந்தது. மோட்டாரை விட்டுக் கீழே இறங்கி அவர்கள் பக்கம் வந்தாள். நபர்களைப் பார்த்தாள். கோபம் இன்னும் அதிகமாயிற்று.

முன்னுல் கொசுவம் வைத்து, தற்கால நாகரிகப்படி அவர்கள் புடவையைக் கட்டியிருக்கவில்லை. பழங்கால முறையில் பதினெட்டு முழப் புடவை கட்டியிருந்தார்கள். உடம்பில் ரவிக்கையோ ஜாக்கெட்டோ இல்லை. வன ராணிகள் போல மார்க்கச்சு கட்டியிருந்தார்கள். தலைமயிரை ஜடை பின்னிப்போடவில்லை; கொண்டை போட்டிருந்தார்கள். காலில் நாகரிகக் குதிகளுடன் உயர்ந்த பூட்ஸைக் காணவில்லை. முகத்தில் பவுடரோ கிரீமோ இல்லை. இதழில் சாயப் பூச்சும் இல்லை. இவற்றையெல்லாம் பார்த்ததும் கார் ஓட்டிக்கொண்டு வந்த பெண்ணுக்கு இவர்கள் 'பட்டிக்காட்டுப் பிரகிருதி'கள் என்பது ஒரு விநாடியில் புரிந்து போயிற்று.

உடனே அவர்களைப் பார்த்து, "ஏ, பட்டிக்காடுகளே! உங்களுக் கென்ன காது செவிடா ? எவ்வளவு நேரமாக ஹார்ன் அடித்துக்கொண்டிருக்கிறேன், உங்களுக்குக் கொஞ்சமாவது உணர்ச்சி கிடையாதா ?" என்று பொரிந்து தள்ளினுள்.

அல்லியும் செங்கமலமும் திரும்பிப் பார்த்தார்கள். ஒரு நவ நாகரிக மங்கை தங்களைக் கோபிப்பதைப் பார்த்ததும் ஆச்சரியமாய்ப் போயிற்று! பெண்களின் முன்னேற்றத்தைக் கண்டு களிக்க வந்த தங்களிடம், ஒரு பெண்ணே இப்படி நடப்பது ஆச்சரியமாகவும் இருந்தது. அல்லிக்குக் கண் சிவந்தது. "பட்டிக்காடு! பட்டிக்காடு! அதென்ன அவ்வளவு கேவலமா?" என்று அதட்டினாள். செங்கமலம் அல்லியின் கையைப் பற்றினாள். அப்பொழுதுதான் அல்லிக்கு, தான் தர்பாரில் இல்லையென்பதும், தாங்கள் வந்த வேலை என்ன என்பதும் ஞாபகத்திற்கு வந்தன. உடனே சாந்தமானாள்.

அல்லியின் கோபத்தைப் பார்த்ததும் நாகரிக நங்கை அசந்து போனாள். அவள் முகத்தை எங்கோ பார்த்த மாதிரி இருந்தது. ஆனால் எங்கே என்பதுதான் தெரியவில்லை. பதறிப்போய், "மன்னிக்க வேண்டும்" என்று சொல்லிக்கொண்டு வேகமாய்த் தன் மோட்டாருக்குப் பின் வாங்கி விட்டாள்.

இப்படிப் பயந்து ஓடுவதைப் பார்த்து அல்லி பலமாய்ச் சிரித்தாள். "இவ்வளவுதானா பட்டணத்துப் பெண்களின் வீரம்?" என்று உரக்கச் சொன்னாள்.

இதற்குள் இவர்களின் ஆடையாபரண விசித்திரத்தைப் பார்க்க ஒரு சிறு கூட்டமே கூடிவிட்டது. போக்குவரத்து தடைப்பட ஆரம்பிக்கவே ஒரு போலீஸ்காரன் அங்கே வந்தான். "இதென்னம்மா இப்படி இடைஞ்சல் பண்றீங்க?" என்று சொல்லி, தன் ஜேபியிலிருந்து ஒரு குறிப்புப் புத்தகத்தை எடுத்து, "உங்கள் பெயர் என்ன, சொல்லுங்கம்மா!" என்றான்.

அல்லி செங்கமலத்தைப் பார்த்தாள். 'ஒரு ஆண் இவ்வளவு தைரியமாக வந்து தன் பெயரைக் கேட்பதாவது!' என்ற பாவம் அந்தப் பார்வையில் இருந்தது. செங்கமலம் போலீஸ்காரனைப் பார்த்து, "எதற்காக எங்கள் பெயரை உங்களிடம் இப்போது சொல்ல வேண்டும்?" என்று கேட்டாள்.

போலீஸ்காரன், "அடே, கோபத்தைப் பார்க்கலையா! சரி, பெயர் சொல்ல வேண்டாம், இங்கே நிற்க வேண் டாம், போங்கள்" என்றான்.

இதற்குள் கூட்டம் அதிகமாயிற்று. போக்கு வரத்து அடியோடு நின்றுபோயிற்று. நின்றுபோன மோட்டார் ஒன்றிலிருந்து சினிமா முதலாளி மிஸ்டர் நாதன் இவர் களைப் பார்த்தார். நடையுடை பட்டிக்காடாய் இருந்தா லும், சினிமாப் படத்திற்குப் பொருத்தமான முகவெட்டு இருப்பதாக அவருக்குத் தோன்றியது. மோட்டாரை விட்டு இறங்கி வந்து, தகராறு என்ன என்பதை அறிந்து கொண்டார். அல்லியிடம் சென்று, "நமது மோட்டாரில் போகலாம், வாருங்கள். உங்களுக்கு எங்கே போக வேண்டுமோ அங்கு போகலாம்!" என அழைத்தார்.

அல்லி செங்கமலத்தைப் பார்த்தாள். செங்கமலம், "நல்லது, போகலாம்!" என்றாள். இருவரும் மோட்டா ரில் ஏறிக்கொண்டார்கள். மிஸ்டர் நாதன் அவர்களைத் தமது ஸ்டுடியோவுக்குக் கூட்டிக்கொண்டு போனார்.

அங்கே போய்ப் பார்த்ததும் அல்லிக்கு ஒரே பிரமிப் பாய் விட்டது. ஒரு பக்கத்தில் கோட்டைச் சுவர்கள் மாதிரி வர்ணம் அடித்த காட்சி, மற்றொரு புறத்தில் துணியாலும் பலகைகளாலும் செய்யப்பட்ட அரண் மனைக் காட்சி, வேறொரு பக்கத்தில் தேவலோகப் பெண் கள் மாதிரி வேஷம் போட்டுக் கொண்டிருந்தவர்கள் காட்சி! இப்படியாக அவளுக்குப் புரியாத காட்சிகளாய் விளங்கின. நாதனின் அறையில் அல்லியும் செங்கமல மும் அமர்ந்தவுடன் அவர், விருந்தினர்களுக்குக் குளிர்ந்த பானம் கொண்டுவர உத்தரவிட்டார். பின்னால் அவர்களைப் பார்த்து, "உங்களுக்கு எந்த ஊர்?" என்று கேட்டார்.

கொஞ்சங்கூடத் தயக்கமில்லாமல் "மதுரை" என்று அல்லி சொன்னாள். மேலே பெயரையும் சொல்லிவிடக் கூடாதே என்பதற்காக அல்லியின் கையைச் செங்கமலம் நிமிட்டினாள்.

நர்தன் :-நீங்கள் சென்னைக்குப் புதிதுபோல் இருக்கிறது. உங்கள் பெயர் ?

செங்கமலம் :-என் பெயர் செந்தாமரை. அவர்கள் பெயர் வல்லிக்கொடி.

நாதன் :-இங்கே யார் வீட்டில் தங்கியிருக்கிறீர்களோ ?

செங்கமலம் :-ஒருவர் வீட்டிலுமில்லை. இன்று காலையில்தான் நாங்கள் பட்டணம் பார்க்கலாமென்று வந்தோம்.

நாதன் :- (ஆச்சரியப்பட்டு) அப்படியா ? இரண்டு அழகான இளம் பெண்கள் இப்படித் துணையில்லாமல் வரலாமா ? ரொம்ப ஆபத்தாயிற்றே !

அல்லி :-ஆபத்தா ? அதென்ன ஆபத்து ? அதற்கெல்லாம் நாங்கள் பயப்பட்டவர்களில்லை.

[இச்சமயத்தில் டைரெக்டர் வந்தார்.]

டைரெக்டர் :-ஓ. ... ஸாரி ! அப்புறம் வருகிறேன்.

[சொல்லிவிட்டுத் திரும்பினார்.]

நாதன் :-சும்மா இருங்கள். இவர்கள் இருவரும் இந்த ஊருக்குப் புதிது; மதுரையிலிருந்து வந்திருக்கிறார்கள். இவர்கள் வல்லிக்கொடி; அவர்கள் செந்தாமரை.(அல்லி பக்கம் திரும்பி) அவர்தான் எங்கள் சினிமா படத்தை டைரெக்ட் செய்கிறார் !

அல்லி :-சினிமா. . . .அப்படியென்றால் ? நான் இதுவரை பார்த்ததே இல்லை !

நாதன்:-அதற்கென்ன காட்டுகிறேன். நாடகந்தான் சினிமா. நாடகத்தில் பிரத்தியட்சமாய் நடிகர்கள் நடிப்பார்கள். சினிமா என்றால் நடிகர் நடிப்பதைப் படம் பிடித்துக் காட்டுவார்கள். தற்சமயம் 'அல்லி ராணி' என்ற படம் எடுக்கத் தயார் செய்துகொண்டிருக்கிறோம்.

இதைக் கேட்டதும் அல்லிக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. செங்கமலம் கையை நிமிட்டினாள். இந்த மாறுதலைக்

கவனித்த நாதனும் டைரெக்டரும் திகைத்தார்கள். ஆனால் அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

நாதன் :-ஏன், நீங்கள் அல்லி நாடகம் பார்த்த தில்லையா ?

அல்லி பதில் சொல்லவில்லை. "நாங்கள் நாடகங் களுக்கு அதிகமாகப் போவதில்லை. எங்கள் காலத்தில் அல்லி நாடகமே..." என்று பேசிய செங்கமலம், திடீ ரென்று நிறுத்திக் கொண்டாள்.

டை :-என்னம்மா 'எங்கள் காலம்', 'உங்கள் காலம்' என்கிறீர்கள் ? நீங்கள் வாலிபப் பெண்களாய் இருந்து கொண்டு பாட்டிகள் பேசுகிற மாதிரி பேசுகிறீர்களே?

[இச்சமயம் திடீரென்று டைரெக்டரின் பார்வை அல்லி அணிந்திருந்த காரை என்ற நகை மீது விழுந்தது.]

டை :-ஹா, 'ஒண்டர்புல்'! இந்த மாதிரி அழகான நகையை நான் பார்த்ததே இல்லையே! என்ன மிஸ்டர் நாதன், நமது சினிமா அல்லிககு இந்த மாதிரி ஒரு நகை போட்டுவிட வேண்டும், ஸார் !

நாதன் :-அருமை! அருமை! என்ன அழகாய் இருக்கிறது? அதுமட்டுமா, செந்தாமரை காலில் போட் டிருக்கிற நகை...அதன் பெயர் என்ன ?

செ :-பாடகம்.

நாதன் :-பாடகம் ? பாடகம் ! இதுவரை இம்மாதிரி அழகான காலணியை நான் பார்த்ததே இல்லை, ஸார். பாஷன் பாஷன் என்று கத்துகிருன்களே, ஒருவனுக்கா வது இந்தப் பாகடம்...பாகடம்தானே ?...

செ :-அல்ல, பாடகம்.

நாதன் :-பாடகம், பாடகம். இந்தப் பாடகம் மாதிரி ஒருவனுக்காவது 'டிசைன்' போடத் தோன்றியதா ? அடே, யாரங்கே, நமது ஆடை ஆபரண டைரெக்டரைக் கூப்பிடடா !

ஆடை ஆபரண டைரெக்டர் வந்தார். அவர் அறி முகமான பின்பு, "என்ன ஆ-டைரெக்டர் ! இந்த அம்மா

போட்டிருக்கிற கழுத்தணி, காலணி மாதிரி நமது அல்லிக்குப் போட்டுவிடலாமென்று நினைக்கிறேன். உங்கள் அபிப்பிராயமென்ன ?'' என்று கேட்டார்.

சி - டை :—நான் உங்களைப் பூரணமாய் ஆதரிக்கிறேன்.

ஆ - டை:—(சிறிது நேரம் கூர்மையாகக் கவனித்து விட்டு) நாம் 'அல்லி ராணி' படமல்லவா எடுக்கப் போகிறோம் ? அதற்கு அக்காலத்து ஆடையாபரணங்கள்தான் பொருத்தமாய் இருக்கும். நீங்கள் சொல்லுகிற நகைகள் நவீன பாஷனாக இருக்கின்றன. நவீன அல்லி ராணி படம் எடுப்பதாய் இருந்தால் இவை பொருத்தமாய் இருக்கும்.

[அல்லி செங்கமலத்தைப் பார்த்துப் புன்முறுவல் செய்தாள்.]

நாதன்:—எனக்கென்னவோ நமது அல்லிக்கு இந்த வல்லிக்கொடி மாதிரி ஆடையாபரணங்கள் அணிந்தால் ரொம்பப் பொருத்தமாக இருக்குமென்று தோன்றுகிறது.

ஆ - டை :—ஆடையாபரண மெல்லாம் கதை நடந்த காலத்தை அநுசரித்ததாய் இருக்க வேண்டாமா? அவற்றை யெல்லாம் கண்டு பிடித்துத் தயார் செய்யத்தானே என்னைப் போன்றவர்களை ஏராளமாய்ச் சம்பளம் கொடுத்து அமர்த்தி யிருக்கிறீர்கள் ? இந்தப் பெண்கள் நல்லா யிருக்கிறார்கள் என்பதற்காக இவர்கள் ஆடையாபரணங்களைச் சரித்திர சம்மதமானவை என்று ஒப்புக்கொள்ள முடியுமா, ஸார் ?

[அல்லியின் முகம் சிவந்தது.]

நாதன் :—சரி, சரி ! விட்டுத்தள்ளுங்கள் !

ஆ - டைரெக்டர் :—நான் போகலாமா ?

நாதன் :—ஆஹா !

[ஆ-டைரெக்டர் விடை பெற்றுக் கொண்டு போனார்.]

டைரெக்டர்:- நமது ஸ்டுடியோவைப் பார்த்து வரலாமா ?

இச்சமயம் அர்ச்சுனன் வேஷம் போட்டவர் வந்து டைரெக்டரைப் பார்த்து, "என்ன ஸார், அல்லியைக் காண வில்லை" என்று சொல்லும் போது அர்ச்சுனனைப் பார்த்த அல்லி முகம் சிவந்து திடீரென்று எழுந்தாள். அல்லியின் கோபமான முகத்தைப் பார்த்ததும் அர்ச்சுன வேஷதாரி பேச்சை அப்படியே நிறுத்தி, திகைப் படைந்தார். செங்கமலம் அல்லியின் கையை நிமிட்டினுள். அல்லி மறுபடியும் ஆசனத்தில் அமர்ந்தாள்.

டை :-இன்று அல்லி வேஷதாரிக்கு உடம்புக்குச் சரியில்லையாம். இப்பொழுதுதான் டெலிபோன் வந்தது. ஷூட்டிங்கை ஒரு வாரம் தள்ளிவைத்துக் கொள்ளலாம்.

அர்ச்சுனன் :—அதெப்படி, ஸார், முடியும்? அடுத்த வாரம் எனக்கு வேறு வேலை இருக்கிறது.

டை :—சரி, மாலையில் யோசித்து முடிவு செய்வோம்.

[அர்ச்சுனன் போகிருர்.]

செங்கமலத்தோடு அல்லி புறப்பட்டாள். ஸ்டுடியோவின் பற்பல பகுதிகளைப் பார்த்து வரும்போது 'மேக்கப்' அறைக்குப் போனர்கள். அப்போது அங்கே ஒரு பெண் முகத்தில் ஒரு நிபுணர் சாயம் அடித்துக் கொண்டிருந்தார். இன்னொரு பெண்ணின் நெற்றித் தோலைக் கொஞ்சம் மேலே இழுத்து, ஒரு நிபுணர் ஒரு பசைத் தாளை ஒட்டி, அதன் மேல் சாயம் பூசினர்.

"நெற்றித் தோலை ஏன் மேலே இழுத்து ஒட்டு கிறீர்கள் ?" என்று அல்லி கேட்டாள்.

"அந்த அம்மாள் 30 வயதானவள். 14 வயதுப் பெண்மாதிரி வேஷம் போடவேண்டும். நெற்றித் தோலைக் கொஞ்சம் மேலே இழுத்தால் புருவம் மேலே வரும். அப்படி வந்தால் வாலிபப்பெண் மாதிரி தோன்றும். அதனல் அப்படிச் செய்கிருர்கள்" என்று டைரெக்டர் பதில் சொன்னர்.

அல்லி :—(ஆச்சரியப்பட்டு) வேறு வழியில்லையா ?

டை :- இருக்கிறது. புருவம் மாதிரி கறுப்பு வர்ணத்தால் எழுத வேண்டும். அதைவிட இது சௌகரியம்.

எதைப் பார்த்தாலும் அல்லிக்கும் செங்கமலத்திற்கும் ஆச்சரியமாய் இருந்தது. இந்தக் குறிப்பை உணர்ந்த மிஸ்டர் நாதன், "எங்களுக்கு ஆசை இருக்கிறது. உங்களுக்குச் சம்மதமானல் எங்களுக்கு ரொம்ப மகிழ்ச்சியாய் இருக்கும்..." என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தார்.

"என்ன சொல்லுகிறீர்கள்? எனக்குப் புரியவில்லையே!" என்ருள் அல்லி.

"நமது ஆபீஸ் அறைக்குப் போய்ப் பேசிக் கொள்ளலாம்" என்று சொல்லி அவர்களை அழைத்துப் போனர். போகிற வழியில் துண்டுப் பிரசுரங்களை விநியோகித்துக் கொண்டிருந்த ஒருவர் அல்லி கையிலும் ஒரு பிரசுரத்தைக் கொடுத்தார்.

அதை அல்லி வாசித்தபோது, "ஸ்ரீ அனந்தராமனின் பரத நாட்டியம்" என்று போட்டிருந்தது. அதுவும் ஒரு ஆச்சரியமாய் அல்லிக்குத் தோன்றி, செங்கமலத்தைப் பார்த்தாள். "நாம் போய்ப் பார்க்கலாமே!" என்று செங்கமலம் சொன்னுள்.

இதைக் கேட்ட நாதன், "ஆஹா, கண்டிப்பாய்ப் போவோம்!" என்ருர்.

நாதனின் அறைக்குப் போய்ச் சேர்ந்ததும் மறுபடியும் குளிர்ந்த பானங்களைக் கொண்டுவரச் சொல்லி எல்லாரும் குடித்தார்கள். நாதன் மெதுவாக முன்னல் ஆரம்பித்த பேச்சைத் தொடர்வதற்காகத் தொண்டையைக் கனைத்தார். 'என்ன?' என்று கேட்கும் பாவனையாக அல்லி அவரைப் பார்த்துப் புருவத்தை உயர்த்தினுள்.

நாதன்:-நாங்கள் அல்லிராணி படம் எடுக்கப் போகிருேம். அதில் அல்லியாக நடிப்பவரை எங்களுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. உங்களைப் பார்த்த பிறகு அந்த நடிகையை அறவே பிடிக்கவில்லை. நீங்கள் மட்டும் நடிக்கச் சம்மதித்தால் எங்களுக்குப் பரம திருப்தியாய்

இருக்கும். உங்களுக்கு ஒரு லட்சம் ரூபாய் கொடுக்கிறோம்.

அல்லி :-ரூபாய் இருக்கட்டும். பணத்தைக் கொண்டு நாங்கள் என்ன செய்யப்போகிறோம்? பணம் எங்களுக்குப் பிரயோசனமே இல்லை.

நாதன் :-அதென்ன, அப்படிச் சொல்லுகிறீர்கள்? பணம்தானே இப்பொழுது பிரதானம்? பணம் இருந்தால் எல்லாம் இருந்த மாதிரி யல்லவா? பாருங்கள், இப்பொழுது ஒரு மோட்டார் உங்களுக்கு வாங்க வேண்டுமானாலும் கால் லட்சம் ரூபாய் வேண்டுமே!

அல்லி :-கார் இருக்கட்டும். ரதங்கள் இப்பொழுது கிடையாதா?

நாதன் :-படம் பிடிப்பதற்காக ரதங்கள் வைத்திருக்கிறோம்.

அல்லி :-அவற்றை உபயோகிக்க முடியாதா?

நாதன் :-பிரயாணம் செய்யவா? சரிதான்! முதலில் 'லைசென்ஸ்' கிடைக்காது. இரண்டாவது அதில் ஏறிப் போனால் ஒரு இடத்திற்கும் போக முடியாது. கூட்டம் நம்மைச் சூழ்ந்து கொள்ளும்.

அல்லி :-நடிப்பதைப் பற்றி அப்புறம் பேசிக் கொள்வோம். அந்த அர்ச்சுனனைப் பார்ப்பதற்கே எனக்குப் பிடிக்கவில்லை.

நாதன் :-இந்த அர்ச்சுன நடிகர் உங்களுக்குப் பிடிக்கவில்லை யென்றால் வேறொரு நடிகரை ஏற்பாடு செய்து கொள்ளுவோம்.

அல்லி :-யாரா யிருந்தாலென்ன?

[ இச் சமயம் செங்கமலம் அல்லியின் கையை கிமிட்டி, மேலே பேசாமல் தடுத்தாள். ]

நாதன் :-மற்றொரு விஷயம்...தாங்கள் தங்குவதற்கு ஹோட்டலில் ஏற்பாடு செய்கிறேன். அதற்கு மத்தியில் இந்த ஊர் பாஷன்படி நீங்கள் இருவரும் ஆடை

யணிந்துகொள்ள வேண்டும். இல்லாவிடில் தெருவில் கூட்டம் கூடி வேடிக்கை பார்ப்பார்கள்.

அல்லிக்கும் செங்கமலத்திற்கும் இந்த யோசனை சரி என்று பட்டது. மிஸ்டர் நாதனுடன் ஆடைகள் வாங்கப் புறப்பட்டார்கள். 'மூங்கிலால் கம்பெனி'யில் சீமாட்டிகள் இலாகாவிற்குப் போனதும் அங்குள்ள பெண் அவர்களை வரவேற்றாள். வெங்காயச் சருகு போன்ற புடவைகளும், ஜாக்கெட்டுகளும், மார்க்கச்சுகளும், உள்ளாடைகளும் விதம் விதமாக அங்கே இருந்தன. சில பொம்மைகளுக்கு இந்த ஆடைகளை அணிவித்து, மாதிரிக்காக ஒரு பக்கத்தில் வைத்திருந்தார்கள். இவற்றை யெல்லாம் பார்த்த அல்லிக்கு ஆனந்தம் தாங்க முடியாது போயிற்று. ஆறாயிரம் வருஷங்களில் பெண் உலகம் ரொம்ப அபார மாய்த்தான் முன்னேறி யிருக்கிறது என்று நினைத்துத் திருப்தி யடைந்தாள்.

இச் சமயம் அங்கே சில நவ நாகரிகப் பெண்கள் வந்தார்கள். அல்லியையும் செங்கமலத்தையும் அருவருப்போடு பார்த்து முகத்தைத் திருப்பிக் கொண் டார்கள். இந்த நாகரிக உடைகள் கடையில் இந்தக் கர்நாடகங்களுக்கு என்ன வேலை என்று நினைப்பது போலிருந்தது. மிஸ்டர் நாதன் போன்ற ஆண்கள் தன்னிடம் பிரியமாய் மரியாதையாய் நடக்கும்போது, இந்தப் பெண்கள் மட்டும் ஏன் இப்படி நடக்கிறார்கள் என்று அல்லி வியப்புற்றாள். வந்த பெண் கள் தங்களுக்கு வேண்டிய அழகு சாதனங்களை வெகு அக்கறையுடன் பொறுக்கிக் கொண்டிருந்தார்கள். இவர் கள் இத்தனை சிரமம் ஏன் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று அந்தக் கடையிலிருந்த ஒரு பெண்ணிடம் மெது வாய்க் கேட்டாள்.

அவள் சிரித்துக் கொண்டு, "பார்ப்பதற்கு ரம்மிய மாய் இருக்க வேண்டுமென்று யாரும் விரும்புவது இயற்கைதானே, அம்மா? இப்பொழுது வருகிற அலங் காராதிகளைக்கொண்டு 50 வயதுப் பெண்ணை 15 வயதுக் குமரியாகத் தோன்றும்படி செய்து விடலாமே!" என்றாள்.

அல்லி :—எனக்கென்னவோ அப்படி யெல்லாம் செய்வது ஒரு அபிவிருத்தி என்று தோன்றவில்லை.

பெண் :—என்னம்மா, இப்படிச் சொல்றீங்க? இந்தச் சாதனங்களெல்லாம் வந்த பின்னுல்தான் பெண்களின் அதிகாரம் ஓங்கி ஆண்களின் ஆதிக்கம் குறைந்திருக்கிறது! முன் மாதிரி வீட்டுக்குள்ளே பெண்ணை அடைத்து வைத்து அடிமையைப் போல நடத்தி வந்த காலம் போய்விட்டது! இந்த அலங்கார சாதனங்களால் யாரைப் பார்த்தாலும் ரம்பைகள் போல இருக்கிருர்கள். இதனுல் இந்த ரம்பைகள் ஆண்களைப் பார்த்து, 'போடு தோப்புக்கரணம்' என்று சொன்னுல் என்ன செய்கிருர்கள் தெரியுமா? சொல்லி முடிப்பதற்குள் போட ஆரம்பித்து விடுகிருர்கள்.

அல்லி இதைப் பற்றிச் சிந்தித்தாள். ஆண்களைப் பெண்கள் ஆளுகிருர்கள் என்பது அவளுக்குத் திருப்தியாய்த்தான் இருந்தது. ஆனுல், எதைக் கொண்டு ஆளுகிருர்கள் என்பதை யோசிக்கும் போதுதான் அவளுக்குத் திருப்தி ஏற்படவில்லை. 'அழகைக் கொண்டுதானே ஆண்களை ஆளமுடிகிறது? அதில் என்ன பெரிய வெற்றி இருக்கிறது என்று நினைத்தாள். அர்ச்சுனன் கூடத் தன் அழகைக் கண்டு மயங்கித் தனக்கு அடிமையாகத் தயாராய் இருந்தான். என்ருலும் அந்த ஆதிக்கத்தைத் தான் விரும்பாமல் அவனை விவாகம் செய்ய மறுத்ததை நினைத்துப் பார்த்தாள். தான் தூங்கும் போது தன்னை அர்ச்சுனன் விவாகம் செய்யாமலிருந்தால்—ஒரு நாளுமே செய்திருக்க முடியாது என்பதையும் எண்ணிப் பார்த்தாள். ஆகவே, அழகால் ஆண்களை அடிமைப் படுத்தல் என்பது புதிய வெற்றி யல்ல என்பதும், உலகம் தோன்றிய காலத்திலிருந்தே அது இருந்து வருகிறதென்பதும் அவளுக்குப் பளீரென்று தோன்றியது.

முன்னுல் நூற்றுக்குப் பத்துப் பெண்கள் இயற்கை அழகால் வெற்றி பெற்று வந்தால் தற்சமயம் செயற்கை அழகால் நூற்றுக்கு நூறு பேரும் வெற்றி பெறுகிருர்கள்

என்று சொல்லலாம். சத வீதாச்சாரம் அதிகமா யிருக் கிறதே யொழிய, தத்துவம் எதுவும் மாறிவிடவில்லை. அல்லி விரும்பியது வேறு. எப்படி அழகில்லாத ஆண் களும் பெண்களை ஆதிக்கம் செய்கிறார்களோ, அம் மாதிரியே அழகில்லாத பெண்களும் ஆண்களை அடக்கி ஆளவேண்டும். அம்மாதிரி எதுவும் நடக்கவில்லையே என்று சிந்தித்தாள்.

அல்லி பதில் பேசாமல் சிந்தித்துக் கொண்டிருப் பதைப் பார்த்த அந்த விற்பனைப் பெண், “அம்மா ரொம்ப யோசிக்கிறாப்போல இருக்கே! இந்தச் செயற்கை முறை களைப் பெண்கள் மட்டும் செய்கிறார்கள் என்று நினைக் காதீர்கள். ஆண்களும் செய்கிறார்கள்: நரைத்துப் போனால் கேசத்திற்கு வர்ணம் பூசுகிறார்கள். உடம்பு அழகாய்த் தெரியவேண்டும் என்பதற்காக, கோட்டு களில் பஞ்சு வைத்துத் தைக்கிறார்கள். தொந்தியை மறைப்பதற்காக ஆறு அங்குலம் அகலமுள்ள ரப்பர் பெல்ட் போட்டுக் கொள்ளுகிறார்கள். அவர்களும் முகத் தில் பவுடர் போடுகிறார்கள். அவர்கள் செய்யலாமென் றால் பெண்கள் மட்டும் செய்யக் கூடாதா?” என்று கேட்டாள்.

அல்லி தலையை அசைத்தாளே ஒழிய பதில் பேச வில்லை.

இதற்குள் இவர்களுக்கு வேண்டிய ஆடைகளைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு நாதனோடு செங்கமலம் அங்கே வந்தாள். எல்லாருமாகக் கடையை விட்டுப் புறப்பட்டு மோட்டாருக்குப் போனார்கள்.

போகிற வழியில் கொஞ்சம் சிற்றுண்டி அருந்திவிட் டுப் போகலாமே என்று அல்லியைக் கேட்டதும், அவள் சம்மதிக்கவே, அருகிலிருந்த ‘கபேடேரியா’வுக்குக் காரை விடும்படி டிரைவருக்கு நாதன் உத்தரவிட்டார்.

மோட்டாரிலிருந்து இறங்கியதும் வாசலில் சிலர் வர்ணம் புரியாத சாயம்போன கொடிகளைக் கைகளில் வைத்துக்கொண்டு கோஷம் போட்டுக்கொண்டிருந்தார்

கள். 'ஒழியுங்கள், வடநாட்டு ஆதிக்கத்தை!' என்ற ஒலி பலமாய் இருந்தது.

அல்லியையும் செங்கமலத்தையும் அவர்களுடைய பழங்கால ஆடைகளில் கண்டதும் அவர்கள் இவர்களைப் பார்த்து, "என்னம்மா, பட்டிக்காட்டுக்காரர்கள்கூட இம் மாதிரி வடநாட்டை ஆதரிக்கக் கிளம்பி விட்டீர்கள் ?" என்று கேட்டார்கள்.

'பட்டிக்காடு' என்று சொன்னது அல்லிக்குக் கோப மாய் இருந்தாலும் வடநாட்டு ஆதிக்கத்தைப்பற்றி அவர் கள் சொன்னதை ரஸித்தாள். இந்த இயக்கம் அந்தக் காலத்திலே தோன்றியிருந்தால் அர்ச்சுனன் தன்னை விவாகம் செய்ய முடியாமல் போயிருக்கலாமல்லவா ?— என்று யோசித்தாள்.

அல்லி திகைப்பதைப் பார்த்ததும் கோஷக்காரர்கள் தைரியமடைந்து தங்கள் பிரசார கோஷத்தைப் பலமாக் கினர்கள். "உங்களைப் பார்த்தால் அசல் தமிழ் நாட்டுப் பண்பாடு உள்ளவர்களாய்த் தோன்றுகிறதே! நீங்கள் இப்படிச் செய்யலாமா ?" என்று கேட்டார்கள்.

அல்லி:—ஒஹோ, பட்டிக்காடுகள்தான் அசல் தமிழ் நாட்டுப் பண்போ ?

இந்தக் கேள்விக்குக் கோஷக்காரர்களால் பதில் சொல்ல முடியாமற் போகவே, திகைத்தார்கள்.

இச்சமயத்தில் அல்லியும் மற்ற இருவரும் 'கபே டேரியா'வுக்குள் நுழைந்தார்கள். அங்கே எல்லாம் பெண் மயமாய் இருந்ததைப் பார்த்து அல்லி ஆச்சரிய மடைந்தாள். பணம் வாங்குகிறவர் பெண்; சிற்றுண்டி கொடுப்பவர்கள் பெண்கள்; மேல் பார்வை செய்பவர் பெண். எல்லாரும் பெண்கள். ஆனால், உணவருந்து கிறவர்களில் மிகப் பெரும்பான்மையோர் ஆண்களாக இருந்தார்கள். இதைப் பார்த்ததும் அல்லியின் சந்தோஷம் குறைந்தது. இந்த ஆண்களுக்காகப் பெண்கள் ஏன் இப்படி வேலை செய்கிறார்கள் என்பது தான் அல்லி மனத்தில் தோன்றிய கேள்வி.

இதை அங்கே மானேஜராய் இருந்த பெண்ணிடம் கேட்டும் விட்டாள். அந்த மானேஜருக்கு இது ஒரு விசித்திரமாய் இருந்தது.

" என்னம்மா இப்படிக் கேட்கிறீர்கள் ? நம் வீடு களில் விருந்தாளிகள் வந்தால் வீட்டுப் பெண்கள் பரிமாறுவதில்லையா ? இதில் என்ன தவறு இருக்கிறது?'' என்று 'மானேஜர்' பதிலுக்குக் கேட்டார்.

அல்லி :—உபசரிப்பதைப் பற்றி நான் சொல்ல வில்லை. ஆண்களுக்கு எதற்காகப் பெண்கள் வேலை செய்ய வேண்டும் என்றுதான் கேட்கிறேன். இது உங்கள் சொந்த வீடா உபசரிப்பதற்கு ?

மானேஜர் :—ஓஹோ ! அதைக் கேட்கிறீர்களா ? நமது நாட்டு அரசியல் சட்டத்தில் ஆணுக்கும் பெண் ணுக்கும் சமத்துவம் கொடுத்திருக்கும்போது உயர்வு தாழ்வு எங்கிருக்கிறது, அம்மா ?

அல்லி :—நாமே அடிமைகளாய் இருக்கத் தயாராய் இருக்கும்போது சட்டம் எப்படி இருந்தால்தான் என்ன ?

இதற்கு மேல் பேச்சை வளர்த்த மானேஜருக்கு இஷ்டமில்லை. அல்லியும் அந்த இடத்தைவிட்டுப் புறப் பட்டு மேஜை முன்னால் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித் தாள்.

இவர்கள் சாப்பிடும்போது சட்டசபை இடைவேளை உணவிற்குக் கலைந்தபடியால், சிற்றுண்டி உண்ண விரும் பிய அங்கத்தினர்கள் பலர் கூட்டமாக உள்ளே நுழைந் தார்கள். கூட்டமாகப் பலர் திடீரென்று வந்த காரணத்தை விசாரித்த அல்லி, சட்ட சபையும் பக்கத்தில் தான் இருக்கிறதென்பதைத் தெரிந்துகொண்டாள். சட்ட சபையில் பெண்கள் அங்கத்தினர்களாகவும் மந்திரி களாகவும்கூட இருப்பதைக் கேள்வியுற்று, சட்ட சபையைப் பார்க்க விரும்பினாள்.

" அப்படியானால் நீங்கள் சட்ட சபையைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருங்கள். அரை மணி நேரத்தில்

நான் திரும்பி வந்துவிடுகிறேன்" என்று சொல்லி நாதன் தனியே புறப்பட்டார்.

அல்லியும் செங்கமலமும் சட்ட சபையை நோக்கிப் போனார்கள்.

சட்டசபை எது என்பதை விசாரித்துக் கொண்டு அல்லி முன்னேயும் செங்கமலம் பின்னேயுமாகக் கட்டிட வாயிலை அடைந்தார்கள். ராணி மாதிரி அல்லி வந்த வேகத்தைப் பார்த்த வாசல்-சேவகன் கொஞ்சம் திகைத்தான். ஆனால், ஆடையாபரணங்கள் கர்நாடகமாய் இருப்பதைப் பார்த்ததும் தைரியம் கொண்டு, "பாஸ்' இருக்கிறதா ?" என்று கேட்டான்.

அல்லி:—பாஸ் ! பாஸ் என்றால்...

சேவகன்:—அநுமதிச் சீட்டம்மா !...

அல்லி:—அநுமதிச் சீட்டு என்னிடம் கேட்பதற்கு உனக்கு அவ்வளவு—

[இதற்குள் செங்கமலம் அல்லியின் கையை நிமிட்டினாள்.]

சேவகன்:—அடே, என்ன ரொம்பப் பேசுறீங்களே?

[அல்லிக்கு முகம் சிவந்தது.]

செங்கமலம்:—அநுமதிச் சீட்டு எங்கே வாங்க வேண்டும் ?

சேவகன்:—இதோ வெளியில் பேசிக்கொண்டு நிற்கிறார்களே, சட்டசபை அங்கத்தினர்கள் ; இவர்களில் யாரையாவது கேளுங்கள், வாங்கிக் கொடுப்பார்கள்.

செங்கமலம் அங்கத்தினர்களை நெருங்கினாள். அல்லி ஒரு பக்கமாக ஒதுங்கிக் கம்பீரமாய் நின்றாள். அங்கத்தினர்கள் பலர் ஊர் பெயர் விசாரித்துவிட்டு எங்களால் முடியாது என்று கை விரித்தார்கள். "உங்களை எங்களுக்கு முன்பின் தெரியாமல் இருக்கும்போது, நாங்கள் எப்படிப் பொறுப்பேற்க முடியும் ? உங்களுக்கு மதுரை என்று சொல்லுகிறீர்கள். மதுரை அங்கத்தினர்களைப் பார்த்துக் கேளுங்களேன் !" என்று யோசனை சொன்னார்கள்.

செங்கமலம்:—மதுரை அங்கத்தினர்களுக்குக்கூட எங்களை அடையாளம் தெரியாது. மீனாட்சி அம்மனுக்குக் கூட எங்களைத் தெரியாது என்றால், இவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது?

ஓர் அங்கத்தினர்:—அப்படியானால் வந்த வழியைப் பார்த்துக் கொண்டு திரும்புங்கள். கலாட்டாக்கள் பலமாய் நடந்துவருகிற இக்காலத்தில் உங்களுக்காக நாங்கள் எப்படிப் பொறுப்பேற்க முடியும்? உள்ளே வந்து ஏதாவது கோஷம்போட மாட்டீர்கள் என்பது என்ன நிச்சயம்?

மற்றோர் அங்கத்தினர்:—இவர்கள் கம்யூனிஸ்டுகளாய் இருந்தாலும் இருக்கலாம். பாட்டாளி மக்களைச் சட்ட சபைக்குள் கொண்டுவந்து கூச்சல் போட வைக்க வேண்டுமென்று ஒரு மூன்றுமாதத் திட்டம் அவர்கள் போட்டிருந்தார்கள். அந்த ஆசாமிகளாய் இருக்கலாம். 'பாஸ்' வாங்கிக்கொடுத்து அகப்பட்டுக் கொள்ளாதீர்கள்!

இதற்குள் தோழர் பம்பாவதி அங்கே வந்தார். "என்ன, கம்யூனிஸ்ட் கம்யூனிஸ்ட் என்கிறீர்களே, என்ன விஷயம்?" என்று கேட்டார் அவர்.

ஓர் அங்கத்தினர்:—இந்த இரண்டு பெண்களும் உங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்குப் 'பாஸ்' வேண்டுமாம். வாங்கிக் கொடுங்கள்.

பம்பாவதி:—ஓ! வாங்கிக் கொடுக்கத் தயார்.

செங்கமலம்:—நாங்கள் கம்யூனிஸ்டும் அல்ல, ஒன்றுமல்ல.

பம்பாவதி:—அப்படி யெல்லாம் ஒன்றும் சொல்ல வேண்டாம், அம்மா. ஒரு கட்சியிலும் சேராமல் இருப்பவர்கள் எல்லாருமே எங்களைச் சேர்ந்தவர்கள் என்றுதான் நாங்கள் கருதுகிறோம். இவர்கள் தொடை நடுங்கிகள். பழக்கமில்லாதவர்களுக்குப் 'பாஸ்' வாங்கிக் கொடுக்கமாட்டார்கள். நான் வாங்கித் தருகிறேன்.

உங்களைப் பற்றி எனக்குத் தெரியவேண்டியதில்லை. நீங்கள் நல்லவர்களாயிருந்து, சட்டசபைக்குள் வந்து ஆர்ப்பாட்டம் ஒன்றும் செய்யாமல் இருந்தால் அதனால் எங்களுக்கு நஷ்டமில்லை. சட்ட சபைக்குள் வந்து அங்கு நடக்கும் பணக்கார ஆதிக்கத்தைக் கண்டு உங்கள் மனம் குமுறி ஏதாவது ஆர்ப்பாட்டம் செய்தால் அதனால் எங்களுக்கு லாபம்தான் ஏற்படும். ஐந்து நிமிஷங்கள் நீங்கள் சட்ட சபைக் காட்சியைப் பார்த்தால் போதும். எத்தனை கிண்ணங்கள்தான் நீங்கள் ஐஸ்கிரீம் சாப்பிட்ட போதிலும் உங்கள் ரத்தம் கொதிக்காமல் இருக்காது. நாங்கள் தினம் நூற்றுக் கணக்கான கோப்பைகள் ஐஸ் வாட்டர் சாப்பிட்டுக்கொண்டுதான் இருக்கிறோம். என்றாலும், ரத்தக் கொதிப்பு அடங்குவதில்லை. அக்கிரமம், அக்கிரமம்! வாழ்க, பாட்டாளி மக்கள்!

இந்தத் தகராறுகளைப் பார்த்த பின்பு சட்ட சபைக்குள் போக அல்லிக்கு விருப்பமில்லை. இதற்குள் மிஸ்டர் நாதன் அங்கே வந்துவிட்டார். அவரைப் பார்த்துப் பம்பாவதி உள்பட பல அங்கத்தினர்கள் நமஸ்காரம் செய்தார்கள். "உங்களுக்கு வேண்டியவர்களா? எங்களுக்குத் தெரியாமல் போயிற்றே! அப்பொழுதே 'பாஸ்' வாங்கிக் கொடுத்திருப்போமே!" என்று எல்லாரும் ஏகோபித்துக் கூறினார்கள்.

அல்லி, "வேண்டாம், வேண்டாம், 'பாஸ்' வேண்டாம்! இன்னொரு தடவை பார்த்துக் கொள்ளலாம்" என்று சொல்லி, செங்கமலத்தோடு மோட்டாரில் ஏறினாள்.

'இரு பெரிய சினிமா நட்சத்திரங்களுக்கு நம்முடைய துணிச்சலையும் கட்சிக் கொள்கையையும் காட்டி விட்டோம்' என்ற பெருமையோடு மீசையை முறுக்கிக் கொண்டு தோழர் பம்பாவதி சட்டசபைக்குள் நுழைந்தார்.

அல்லி ஏறிய மோட்டார் சட்டசபைக் காம்பவுண்டை விட்டு வெளியே வந்ததும் 'பெண்-தீபிகை, பெண்

தீபிகை!' என்று பத்திரிகை விற்கிற பையன்கள் கத்திக் கொண்டிருந்ததைக் கவனித்தாள். காரை நிறுத்தச் சொல்லி, கார் நின்றதும், 'சென்னையில் மாயப் பெண்கள்—ஒரு அணு - பெண் தீபிகை' என்ற கூச்சலோடு பையன்கள் காரைச் சூழ்ந்தார்கள். மாயப் பெண்கள் என்பதைக் கேட்டதும் நாதனுக்கும் ஆச்சரியமாய் இருந்தது. மூன்று பிரதிகளை வாங்கி, ஆளுக்கு ஒன்று கொடுத்துவிட்டு, காரை பத்ம விலாஸ் ஹோட்டலுக்கு விடச் சொன்னார். போகிற வழியில் பத்திரிகையைப் பற்றி அல்லி கேட்டாள். பெண்களின் முன்னேற்றத்திற்காக ஒரு பெண்ணால் நடத்தப்படும் பத்திரிகை என்று நாதன் விளக்கினார். அதில் பின்வரும் விஷயம் அல்லியின் கவனத்தை இழுத்தது:—

**"சென்னையில் இரண்டு விசித்திரப் பெண்கள்**
**அரை நிர்வாணமாய்த் திரியும் கோலம்**
போலீஸுக்குக் கண் இல்லையா?

சென்னை மவுண்ட் ரோடில் இரண்டு பெண்கள் இன்று காணப்பட்டார்கள். அவர்களுடைய ஆடை அலங்கோலங்களைப் பார்க்கச் சகிக்கவில்லை! ரவிக்கையோ சட்டையோ இல்லாமல் மார்க்கச்சு மட்டும் கட்டிக்கொண்டு அரை நிர்வாணமாய்க் காட்சியளிக்கிறார்கள். கூட்டத்திற்குக் கேட்கவா வேண்டும்? அவர்கள் நிற்கிற இடங்களிலெல்லாம் சோம்பேறி ஆண்கள் ஏராளமாய்க் கூடி விடுகிறார்கள். பெண் சமூகத்திற்கே இது ரொம்பக் கேவலமான விஷயம். போலீஸார் என்ன செய்கிறார்கள்? அவர்களும் ஆண்களாகவே இருப்பதால் வேடிக்கை பார்க்கிறார்கள் போலும். மேலும், இந்தப் பெண்கள் விஷயம் பெரிய மர்மமாய் இருக்கிறது. அவர்களுக்குச் சொந்த ஊர் மதுரை என்று சொல்லுகிறார்கள். நமக்கு அதில் நம்பிக்கையில்லை. எந்த ராஜீயக்கட்சியோ, ஏதோ தந்திர வேலைகளுக்காக இந்தப் பெண்களை எங்கிருந்தோ வரவழைத்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. போலீஸார் உடனே நடவடிக்கை எடுக்காவிட்டால் அவர்களும் அந்த ராஜீயக் கட்சிக்கு உடந்தையாய் இருப்பதாகவே நினைக்கவேண்டி யிருக்கும்."

—இவ்வாறு வெளியாகி யிருந்த ஒரு செய்தியைப் பார்த்ததும் அல்லிக்குக் கோபம் வந்தது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. "செங்கமலம், இது என்ன உளறல் ?" என்று கர்ஜித்தாள் அவள். மிஸ்டர் நாதன் சமாதானப்படுத்திஞர்.

பத்ம விலாஸ் ஹோட்டலில் போய் அவர்கள் இறங்கிஞர்கள். வசதியான அறைகளாகப் பார்த்து நாதன் ஏற்பாடு செய்தார். அறையில் சோபாக்கள், கட்டில்கள், மின்சார விசிறிகள் முதலிய தற்கால சௌகரியங்களெல்லாம் அமைக்கப்பட்டிருந்தன. மேஜையில் பொருத்தப்பட்டிருந்த பொத்தானை அழுத்தியவுடன் ஒருசேவகன் வந்தான். அவனிடம் எல்லாருக்கும் காப்பி கொண்டு வருமாறு நாதன் உத்தரவிட்டார். பின்பு மெதுவாக அல்லியின் பக்கம் திரும்பி, "இந்தப் பத்திரிகையில் எழுதியிருப்பதைப் பார்த்தெல்லாம் நீங்கள் மன வருத்தப்படக் கூடாது. ரொம்பக் கடைத்தரமாக எழுதக் கூடிய பத்திரிகைகள் கூட இங்கே இருக்கின்றன. அவற்றை யெல்லாம் படிக்கச் சகிக்க முடியாது ?" என்ருர்.

அல்லி :-இவற்றை யெல்லாம் சர்க்கார் அடக்குவதில்லையா ?

நாதன் :-எப்படியம்மா அடக்குவார்கள் ? 'பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திர மெல்லாம் எல்லாருக்கும் உண்டு' என்று அரசியல் சட்டம் சொல்லுகிறதே ! யார் வேண்டுமாஞலும் என்ன வேண்டுமாஞலும் பேசலாம்; எழுதலாம்.

அல்லி :-இந்தப் பத்திரிகையைப் படித்த பின்பு நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன் ! இன்று எடுத்த ஆடைகளை நான் அணியப் போவதில்லை. இப்பொழுது எந்த ஆடைகளில் இருக்கிறேமோ அவற்றை மாற்றப் போவதில்லை.

அல்லியின் பிடிவாதமான குரலைக் கேட்ட நாதன் அப்பொழுது வற்புறுத்துவதில் பிரயோசனம் இருக்காது என்பதைப் புரிந்து கொண்டார். அதஞல் அதைப்

பற்றிப் பேசாமல், " நீங்கள் கொஞ்சம் இளைப்பாறுங்கள். அப்புறம் வந்து பரதநாட்டியக் கச்சேரிக்கு அழைத்துப் போகிறேன் " என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு போனார்.

ஸ்டூடியோவுக்கு அவர் போனதும் டைரெக்டர் பரபரப்போடு அவரிடம் ஓடி வந்தார். " போலீஸ் கமிஷனர் ஆபீஸிலிருந்து மூன்று தடவை உங்களுக்கு டெலிபோன் வந்தது. காரணம் தெரியவில்லை. நீங்கள் வந்ததும் டெலிபோன் செய்யச் சொன்னார்கள் " என்று வேகமாய்ப் பேசினார்.

நாதன் தலையைச் சொறிந்தார். " என்ன சங்கடமோ தெரியவில்லையே ?" என்றார்.

" எனக்கும்தான் புரியவில்லை " என்று கவலையோடு டைரெக்டரும் ஒத்தூதினார்.

" பெண் நட்சத்திரங்கள், ஆண் நட்சத்திரங்கள் யார் மீதாவது புகார் கிகார் ஏதாவது இருக்குமோ ?" என்றார் நாதன்.

" எனக்கு மூளையே ஓடவில்லை, ஸார் !" என்றார் டைரெக்டர்.

" எதற்கும் அவர்களாக டெலிபோன் செய்யட்டும். வரப்போகிற சனியனை எதிர் கொண்டழைப்பானேன் ? நான் இப்பொழுது டெலிபோன் செய்யப்போவதில்லை " என்று நாதன் சொல்லி முடிப்பதற்குள்ளாக வெளியே ஒரு போலீஸ் அதிகாரி வந்திருப்பதாகச் சேவகன் வந்து அவரிடம் சொன்னான்.

டைரெக்டரும் நாதனும் ஒருவரையொருவர் பார்த்து விழித்தார்கள். " எப்படியும் பார்த்துத்தான் ஆக வேண்டும், வரச் சொல்லு !" என்றார் நாதன்.

போலீஸ் அதிகாரி உள்ளே வந்தார். அவரை வரவேற்று, " இப்பொழுதுதான் வந்தேன். டெலிபோன் செய்யலாமென்றிருக்கும் போது நீங்களே வந்து விட்டீர்கள் " என்றார் நாதன்.

" ஆமாம், உங்கள் கார் வருவதைப் பார்த்துத்தான் நானும் இங்கே வருகிறேன். நான் வந்த விஷயம், யாரோ இரண்டு பெண்கள் வந்திருக்கிறார்களென்றும் உங்கள் மோட்டாரில் சுற்றிக் கொண்டிருக்கிறார்களென்றும் கேள்விப்பட்டேன். இன்றைய 'பெண் தீபிகை' பத்திரிகையைப் பார்த்திருப்பீர்களே ? ஒரே கலாட்டாவாய் இருக்கிறது. அந்தப் பெண்களைப் பார்க்க வேண்டுமென்று கமிஷனர் சொல்லுகிறார்" என்று சொல்லி, போலீஸ் அதிகாரி நிறுத்தினார். இப்பொழுது தான் நாதனுக்குப் பீதி மறைந்து உயிர் வந்தது.

நாதன் :-ஓஹோ ! அதுதான் விஷயமா ? ஏன், ஏதாவது 'வெளியேற்ற உத்தரவு' போடலா மென்று உத்தேசமோ ?

அதிகாரி :-அது எனக்கென்ன தெரியும் ? வெளி யேற்ற உத்தரவெல்லாம் இந்தக் காலத்தில் அவ்வளவு சுலபமா ?

நாதன்:-அதைத்தான் நானும் சொல்லுகிறேன். அப்படி ஏதாவது உத்தரவு போட்டால் அந்தப் பெண்கள் எளிதில் ஒப்புக் கொள்ளப் போவதில்லை. ஹைக்கோர்ட் டில் ஒரு கை பார்த்துத்தான் விடுவார்கள் !

அதிகாரி:-அவர்கள் 'பட்டிக்காடு' என்கிறார்கள். நீங்கள் என்னவோ ஹைக்கோர்ட் என்று பேசு கிறீர்களே !

நாதன் :-ஆடைகளைப் பார்த்தால் பட்டிக்காடு மாதிரி இருந்தாலும், பேசுவது என்னவோ ரொம்ப கம்பீரமாய் இருக்கிறது. அந்த வல்லிக்கொடி பேச ஆரம்பித்து விட்டால் யாரும் எதிரே நிற்க முடியாது. அழகுதான் என்ன அழகு என்கிறீர்கள் ? மேக்-அப் இல்லாமலே தேவலோகப் பெண்கள் மாதிரி இருக்கிறார்கள். மேக்-அப் எல்லாம் அங்கே நெருங்க முடியாது ! யாராவது ஆண்கள் ஏறிட்டுப் பார்த்தால் போதும். அந்த வல்லிக்கொடிக்கு வருகிற கோபம் இருக்கிறதே, அப்படியே எரித்து விடுவது போலப் பார்க்கிறாள் !

அதிகாரி:—அப்படியானல் உங்கள் சினிமாவுக்கு நல்ல நட்சத்திரங்களாக இரண்டு பேர் கிடைத்திருக்கிருர்கள் என்று சொல்லுங்கள்.

நாதன்:-அப்படிக் கிடைத்தால்தான் பலே அதிர்ஷ்டமாச்சே! அவர்கள் கிடைத்தால் லட்சக் கணக்கில் குவித்துவிட மாட்டேனு? நானும் கேட்டுப் பார்த்தேன். அவர்கள் இணங்குவதாய்த் தெரியவில்லை. 'எங்களுக்குப் பணம் எதற்கு?' என்று கேட்கிருர்கள். இப்படியும் உண்டா?

அதிகாரி:—அப்படியா? பணத்தில் அவ்வளவு அலட்சியம் காட்டினல் ஏதாவது ராஜீயக் கட்சி பண உதவி செய்வதாய் இருக்குமோ?

நாதன்:—எனக்கு எப்படித் தெரியும்? இந்த ஊரில் முன்பின் பழக்கமில்லாதவர்களாய் இருக்கிருர்களே என்பதற்காக நான் உதவி செய்கிறேன். அவ்வளவு தான்!

அதிகாரி:—அப்போ நாளைக் காலையில் பத்து மணிக்கு அந்தப் பெண்களைக் கமிஷனர் ஆபீஸுக்குக் கூட்டி வருகிறீர்களா?

நாதன்:—நான் அவர்களிடம் கேட்டுவிட்டு உங்களுக்கு டெலிபோன் செய்கிறேன்.

போலீஸ் அதிகாரி விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்.

பத்ம விலாஸ் ஹோட்டலில் தனது அறையில் கட்டிலில் சாய்ந்துகொண்டு அல்லி இளைப்பாறினுள். வெண் சாமரம் வீசுவதற்குச் சேடிகள் அவசியமில்லாமல் மின் சார விசிறி சுழன்று கொண்டிருந்தது. ஒருவரை அழைக்கவேண்டுமானல் ஆள்விட்டுக் கூப்பிடவேண்டிய அவசியமில்லாமல் டெலிபோன் கருவி மேஜை மீது காத்திருந்தது. 'யாரங்கே?' என்று சேவகனை அழைப்பதற்கு வாய் திறந்து பேசுவதற்கு அவசியமில்லாமல் மின்சாரப் பொத்தான் பக்கத்திலுள்ள மேஜை மீது பொருத்தப்பட்டிருந்தது.

செங்கமலம் அல்லியின் கால்களை வருடியவாறு, 'பெண் தீபிகை'யிலுள்ள ஒரு விவாக ரத்துச் செய்தியை வாசித்துக் கொண்டிருந்தாள். அதைக் கேட்ட அல்லி, "ஓஹோ! விவாக ரத்து என்று ஒன்று ஏற்பட்டிருக்கிறதா? அது ரொம்ப விசேஷம்தான். ஆனால், நீ வாசிப்பதைப் பார்த்தால் ஆண்களுக்கும் விவாக ரத்து செய்ய உரிமை இருப்பதாகவல்லவா தோன்றுகிறது? அது கூடாது! பெண்களுக்கு மட்டும்தான் அந்த உரிமை இருக்கவேண்டும். ஆண்களுக்கு எதற்காக அந்த உரிமை? அவர்கள்தானே விவாகம் செய்கிறார்கள்?" என்று கூறினாள்.

செங்கமலம் வாய்க்குள் சிரித்துக் கொண்டாள். ஒன்றும் பதில் சொல்லவில்லை.

அல்லி:—செங்கமலம்!

செங்:—மகாராணி...

அல்லி:—இந்தப் பெண்கள் ஏன் விவாகம் செய்கிறார்கள்?

செங்:—பருவகால அபேட்சைதான்.

அல்லி:—விவாகம் செய்யாமலிருந்து அதை அடக்க முடியாதோ? நான் வெகு காலம் வரையில் விவாகத்தைப் பற்றி நினைக்காமலே இருக்கவில்லையா? அர்ச்சுனன் என்னை யறியாமல் என்னைக் கல்யாணம் செய்து கொண்டிராவிட்டால் நான் விவாகமே செய்திருக்கமாட்டேனே!

செங்:—மகாராணி, எல்லாராலும் அப்படி இருக்க முடியுமா? எல்லாருக்கும் அந்த சக்தி வந்துவிட முடியுமா?

அல்லி:—ஏன் வராது? கொள்கையில் உறுதி யிருந்தால் முடியாத காரியம் என்பது ஒன்று உண்டா?

செங்:—அங்கேதான் மகாராணி, கருத்து வேற்றுமை இருக்கிறது.

அல்லி:—அதென்ன வேற்றுமை ?

செங்:—பெண்களில் 100-க்கு 99-பேர் பருவ காலத்தில் இல்லற வாழ்க்கையை விரும்புகிறார்கள். இல்லறத்தை விரும்புகிறவர்களுக்கு ஆண்களை அடக்கி ஆள வேண்டுமென்ற கொள்கையோ அதில் உறுதியோ எப்படி ஏற்பட முடியும் ?

அல்லி:—நன்று சொன்னாய் ! கேவலம், இந்த இல்லற ஆசைக்காக அடிமைகளாய் வாழத் தயாராய் இருக்கிறார்கள் ! ஆறாயிரம் வருஷங்களுக்கு முன்னாலும் அப்படித்தான் இருந்தார்கள். இப்பொழுதும் அதே நிலைமையில்தான் இருக்கிறார்கள். சே, சே ! இது என்ன உலகம் !

செங்:—அதுவும் தவிர, மகாராணி ! எல்லாருமே விவாகம் செய்யாமல் இருந்துவிட்டால் குடும்ப விருத்தி என்ன ஆவது ? மனிதப் பூண்டு அற்றுப் போய் விடாதா ?

அல்லி:—அதைப் பற்றி நமக்கு என்ன கவலை ? எல்லாவற்றையும் படைக்கிற கடவுள் இருக்கிறாரே, அவர் அதைப் பற்றி யோசித்துக் கொள்ளட்டும்.

செங்:-அதையும் கடவுள் யோசித்திருக்கிறார் என்று தான் மகாராணி தோன்றுகிறது.

அல்லி:—எப்படி ?

செங்:—ஆணும் பெண்ணும் குடும்பம் நடத்தாமல் போனால் மனிதப் பூண்டு அற்றுவிடுமே என்பதற்காகத் தான் பருவ கால இச்சைகளைக் கடவுள் படைத்திருக்கிறார்.

அல்லி:—இச்சை, என்ன இச்சை ? எனக்கு அது ஏற்பட்டதே இல்லையே ! நீ என்ன கதை செய்கிறாய் !

செங்:—இச்சையில்லாமல் இருப்பவர்கள் மகாராணியைப் போல கோடியில் ஒருவர் இருக்கலாம். எல்லாருமே அப்படி இருக்க முடியாது.

அல்லி:—அப்படியானல் உனக்கு அந்த இச்சை உண்டா?

இதைக் கேட்டுச் செங்கமலம் நாணித் தலை கவிழ்ந் தாள்.

இச்சமயம் கதவைத் தட்டுகிற சப்தம் கேட்டது. மிஸ்டர் நாதன் வந்தார். போலீஸ் விஷயத்தை அவர் பிரஸ்தாபிக்கவில்லை. அல்லி ராணி கட்டிலில் ஒய்யார மாகப் படுத்திருப்பதைப் பார்த்ததும் அவருடைய ரத்த வேகம் அதிகரித்தது. 'அடடா என்ன அழகு! இவ ளைக் கல்யாணம் செய்து கொள்கிறவன் பெரிய பாக்கிய சாலியாய் இருக்கவேண்டும்!' என்று மனத்திற்குள் ளேயே சொல்லிப் பெருமூச்சு விட்டார். அல்லியைப் பார்த்து, "அம்மா, நீங்கள் படுத்திருக்கும் அழகே தனி அழகு! இம்மாதிரி அல்லி படுத்து உறங்கும்போது அர்ச் சுனன் பார்த்து மயங்கினன் என்ருல் அதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? அர்ச்சுனன் என்ன, அந்தச் சுகப்பிரம்மரே வந்தாலும் உங்களைப் பார்த்த பின்பு அயர்ந்து போவாரே?" என்ருர்.

அல்லி:—அர்ச்சுனனைப் பற்றி எதற்காக என்னிடம் அடிக்கடி பேசுகிறீர்கள்?

நாதன்:—நான் உங்களைப் பார்க்கும் போதெல்லாம் நான் எடுக்கப்போகும் படத்திலுள்ள அல்லியாக நினைத்தே சிந்திக்கிறேன்.

அல்லி:—நான் உங்கள் படத்தில் நடிக்கச் சம்மதிக்க வில்லையே!

நாதன்:—எப்படியாவது நீங்கள் சம்மதிப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்குப் போகவில்லை. இப்பொழுது நீங்கள் படுத்திருக்கிறீர்களே, இந்த ஒரு காட்சியைப் படம் பிடித்தாலே போதும்! இதைப் பார்க்கவே லட்சக் கணக்கான பேர்கள் வருவார்கள். ஆஹா! என்ன ஒயில், எவ்வளவு 'ஸெக்ஸ் அப்பீல்'!—கவர்ச்சி.

[இச்சமயம் ஸ்நான அறைக்குள் செங்கமலம் போனுள்.]

நாதன்:—இப்பொழுது படுத்திருக்கிற 'போஸ்' இருக்கிறதே, அவ்வளவும் 'ஸெக்ஸ் அப்பீல்'தான்! ஒரே ஒரு சின்ன மாறுதல் வேண்டும்.

அல்லி:—என்ன மாறுதல்?

நாதன்:—மேல் ஆடை இருக்கிறதே, அது கொஞ்சம் ஒரு பக்கம் ஒதுங்கி இருக்கவேண்டும். அவ்வளவு தான். கொஞ்சம் ஒதுங்கி யிருந்தால் போதும்.

அல்லி:—(தன் மேலாடையைப் பார்த்தாள்.) ஒதுங்குவதா? ஒதுங்கினால் மார்க்கச்சு தெரியாதா?

[அல்லிக்குக் கோபம் குமுறிக்கொண்டு வந்தது. உடனே துள்ளிக் குதித்து எழுந்துவிட்டாள்.]

"ஹா, பதரே! எவ்வளவு துணிச்சல்? செங்கமலம், எங்கே என் வில்?" என்று அல்லி கர்ஜித்தாள்.

ஸ்நான அறைக்குள்ளிருந்து செங்கமலம் வெளியே ஓடி வந்தாள். அவ்வளவுதான். இருவரையும் காணவில்லை.

பதறிப் போன நாதன் கண்ணைக் சசக்கிக் கசக்கி விழித்துப் பார்த்தார். வல்லிக் கொடியையோ செந்தாமரையையோ காணவில்லை. வெளியே வந்து சேவகனை விசாரித்தார். அந்த அறையிலிருந்து யாரும் வெளியே வரவில்லையே என்று சேவகன் பதில் சொன்னான்.

# உதயராணியின் விவாக ரத்து

உதயராணி நல்ல அழகி. நல்ல படிப்பும்கூட. கார் ஓட்டவும் தெரியும். நாகரிகமான நடை உடைகள். இருந்தாலும் ஹிந்துப் பெண்களுக்கு இயற்கையாய் உள்ள கூச்சம் உள்ளவள். பிரகாசமும் அழகுள்ளவன் தான். நல்ல படிப்பு. நல்ல உத்தியோகம். நிறையச் சம்பளம். எனவே, உதயராணி - பிரகாசம் விவாகம் முடிந்ததும் அவர்களுடைய இல்லற வாழ்க்கை குதூகலமாய் ஆரம்பமாயிற்று.

ஆபீஸுக்குப் போகிற பிரகாசம் வீட்டுக்குத் திரும்புகிறவரையில் 'எப்பொழுது போய் உதயராணியைப் பார்க்கப்போகிறேன்' என்றே நினைத்துக் கொண்டிருப்பான். அதே மாதிரி பிரகாசம் வீட்டை விட்டுக் கிளம்பிய விநாடியிலிருந்து அடிக்கடி கடிகாரத்தைப் பார்ப்பதே உதயராணியின் வழக்கமாய் இருக்கும்.

வீட்டில் வேலை செய்ய வேலைக்காரர்கள் இருந்தபடியால் எப்பொழுதும் புத்தகங்களைப் படித்தே நேரத்தைப் போக்கிவந்தாள் உதயராணி. இதனால் மாலையில் பிரகாசம் வீட்டிற்கு வந்ததும் டிபன் சாப்பிட்டுவிட்டு இருவரும் வெளியில் உலாவவோ சினிமாவுக்கோ போவார்கள்.

வெளியில் சந்திக்கிற நண்பர்களுக் கெல்லாம் உதயராணியை அறிமுகப்படுத்தி வைப்பான் பிரகாசம். அந்த நண்பர்களில் சிலர், "ஏன் ஸார், மிஸ்ஸைக் கிளப்பிற்குக் கூட்டி வாருங்களேன்" என்பார்கள். அதைக் கேட்கும்போது பிரகாசம் முகம் மலரும்; உதயராணியின் முகம் சுருங்கும். இயற்கையாக உள்ள நாணத்தினால் உதயராணியின் முகம் சுருங்குகிறதென்று பிரகாசம் நினைத்துக்கொள்ளுவான். தனது மனைவி உதயராணியின் அழகை எல்லாரும் பார்க்கவேண்டும் என்றும், தான்

பெரிய பாக்கியசாலி என்று எல்லாரும் நினைத்துக் கொள்ள வேண்டுமென்றும் அவன் நினைத்தான்.

ஆகவே, உதயராணியை எப்படியாவது கிளப்பிற்குக் கூட்டிப் போகிற வழக்கத்தை ஏற்படுத்திவிட வேண்டு மென்று தீர்மானித்தான். இதைப்பற்றி உதயராணி யிடம் பலமுறை பிரகாசம் பிரஸ்தாபித்தும் அவள் அசை வதாகத் தெரியவில்லை.

என்னதான் அழகோ படிப்போ இருந்தும் நாகரிக மாய்ப் பலரோடு பழகும் குணம் உதயராணிக்கு ஏற்பட வில்லையே என்று பிரகாசம் வருந்திக் கொண்டிருந்தான்.

பிரகாசம் தனது வீட்டில் அடிக்கடி நண்பர்களுக்கு விருந்து வைப்பான். அச்சமயங்களில் பெண்களுடன் தனியாக இருந்து பேசுவதே உதயராணிக்கு வழக்கமாய் இருந்தது. இதைச் சில நண்பர்கள் கேலி செய்தார்கள். "என்ன உங்கள் மனைவியார் ரொம்பக் கூச்சமுள்ளவர் கள் போலிருக்கிறதே" என்று ஒருவர் சொன்னார்.

"அரசியல் சட்டத்தில் கூட ஆணுக்கும் பெண்ணுக் கும் சம உரிமை கொடுத்திருக்கும்போது இப்படிக் கூச்சப் படுகிறார்கள்" என்று மற்றொருவர் சொன்னார். வந்திருந்த ஆண்களும் பெண்களும் - உதயராணியைத் தவிர - ஒரே யடியாகச் சிரித்தார்கள்.

உதயராணிக்கு வெட்கம் அதிகமாயிற்று. இருந் தாலும் சிரிப்பதாகப் பாசாங்கு செய்து கொண்டாள்.

அன்றிரவு விருந்தினர்கள் போன பின்பு உதய ராணி கண்ணீர் விட்டுக் கொண்டிருப்பதைப் பிரகாசம் பார்த்தான். அவனுக்குக் காரணம் புரிந்துவிட்டது. இருந்தாலும் தெரியாதது போல, "உதயா! என்ன சமா சாரம்?" என்று கேட்டான். உதயா பதில் பேசவில்லை. பக்கத்தில் போய் உட்கார்ந்து தன் கைக்குட்டையால் கண்ணீரைத் துடைத்து, "ஏன் இப்படி அழுகிறாய்?" என்று கொஞ்சும் பாவனையில் கேட்டான்.

ஏங்கிக் கொண்டே, "உங்கள் நண்பர்கள் என்னைப் பார்த்துச் சிரிக்கும்படி வைத்துவிட்டீர்களே" என்றாள்.

“இதற்குத்தானு இந்த அழுகை? சரி, சரி. சமர்த்தாய் இரு” என்று சொல்லிவிட்டு, “நீ இந்தக் காலத்துப் பெண் மாதிரியே இல்லேயே” என்ருன்.

உதயராணி, “எனக்குப் புரியவில்லே. இந்தக் காலத்துப் பெண் என்ருல் எப்படி இருக்க வேண்டும்?” என்று கொஞ்சம் கடுமையாகக் கேட்டாள்.

பிரகாசம் :-உனக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? காலத்திற்குத் தக்கபடி நண்பர்களோடு கலந்து பழகவேண்டாமா?

உதய :-மானம், வெட்கத்தைவிட்டு கண்ட ஆண்களோடு சிரித்து விளேயாட வேண்டுமாக்கும்! அது என்ஞல் முடியாது. இனி உங்கள் நண்பர்களே விருந்துக்கு அழைக்கும் வழக்கத்தையும் இன்றேடு விட்டுவிடுங்கள்.

இதற்குமேல் பேச்சை வளர்ப்பதில் பிரயோசனமில்லே என்று நினேத்த பிரகாசம், “உன் இஷ்டம்போலச் செய்கிறேன்” என்று சொல்லிச் சமாதானப்படுத்தினுன்

அன்று இரவு வெகு நேரம்வரை உதயாவுக்குத் தூக்கம் வரவில்லே. ‘இது என்ன நாகரிகம், இது என்ன நாகரிகம், எனக்குப் புரியவில்லேயே’ என்று சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

மாலே வேளேகளில் வெளியே உலாவப் போகும்போது நண்பர்களிடம் அதிகமாகப் பிரகாசம் பேச்சு வைத்துக் கொள்வதில்லே. பார்த்தாலும் பார்க்காதது போலப் போகவும்கூடப் பழகிக் கொண்டான். நண்பர்களே விருந்துக்கு அழைப்பதுமில்லே.

இப்படி நடந்து வரும்போது உதயாவுக்குப் பிறந்த நாள் வந்தது. அவள் தகப்பனுர் பட்டாடைகள் அனுப்பியிருந்தார். பிறந்த நாளே விமரிசையாகக் கொண்டாட வேண்டுமென்பது பிரகாசத்தின் விருப்பம். உதயா மறுத்துவிட்டாள். விருந்துக் கூட்டங்களே அவள் விரும்பவில்லே என்பதே அதற்குக் காரணம். இதைப் பிரகாசமும் உணர்ந்துகொண்டு வற்புறுத்தவில்லே.

இவ்வளவு அழகும் படிப்புமுள்ள மனைவி தனக்குக் கிடைத்தும் தற்கால நாகரிகப்படி நடக்கப் பிரியப்படவில்லையே என்பது அவனுக்கு மாற்றமுடியாத கவலையாய் இருந்தது.

பிரகாசமும் தனது பிறந்த நாளன்று விருந்து ஒன்றும் வேண்டாம் என்றுதான் சொன்னான். இருந்தாலும் கணவனுக்குப் பிரியமான வழியில் அவர் பிறந்த நாளைக் கொண்டாட வேண்டுமென்று உதயராணி ஆசை கொண்டாள். எடுத்ததற்கெல்லாம் புருஷனின் விருப்பத்திற்கு மாறுகச்சொல்லிக்கொண்டிருப்பது தவறு என்று நினைத்தாள். அதிலும் புருஷனின் பிறந்த நாளை அவர் இஷ்டப்படி நடத்த வேண்டியது தனது கடமை என்றும் நினைத்தாள். அதனால் பிரகாசத்தைப் பார்த்து, " நீங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. நான் சொல்லுகிறபடிதான் செய்ய வேண்டும். உங்கள் நண்பர்களுக் கெல்லாம் முதல் தரமான விருந்து செய்து வைத்தால்தான் எனக்குத் திருப்தியாய் இருக்கும் " என்றாள்.

பிறந்த நாள் விருந்து தடபுடலாய் நடந்தது. உதயராணி முன்போல அவ்வளவு கூச்சமாக இல்லாமல் சாதாரணமாகப் பேசி, கலகலப்பாய் நடந்துகொண்டாள். விருந்தினர்களுக்குக் கோப்பைகளைத் தானே எடுத்து ஒவ்வொருவருக்காகக் கொடுத்து வந்தாள். கிளப் காரியதரிசி பஞ்சநதத்திற்குக் கொடுக்கும்போது அவர் விரல்கள் உதயத்தின் விரல்களை அமுத்தின. அவர் விரல்கள் அவள் விரல்களில் படாமலே அவர் கோப்பையை வாங்கியிருக்க முடியும். என்றாலும் வேண்டுமென்ற எண்ணத்துடனேயே அப்படிச் செய்தார் என்று நினைக்கும்படியாய் இருந்தது.விரல்களை அமுக்கிவிட்டு,"ஓஹோ! மன்னிக்க வேண்டும்" என்று ராணியின் முகத்தைப் பார்த்தார். அவள் முகம் பளீரென்று மாறியது. கையில் தேள் கொட்டியதைப்போல அவளுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. இருந்தாலும் சாமர்த்தியமாகச் சமாளித்துக் கொண்டாள்.

விருந்து முடிந்து எல்லோரும், புறப்பட்டுப்போன பிறகு உதயராணி இதைப்பற்றிப் பிரகாசத்திடம் பிரஸ்தா

பித்தாள். பிரகாசம் அமைதியாகக் கேட்டிருந்து விட்டு, "ஏதோ தெரியாமல் பட்டிருக்கும். இதைப்பற்றி என்ன? இக் காலத்தில் ஆண்களும், பெண்களும் கை குலுக்குவ தில்லையா? இதிலெல்லாம் என்ன தப்பு இருக்கிறது?" என்றான்.

கை குலுக்குகிறார்கள் என்பதைக் கேட்டதும் உதய ராணிக்கு அதிர்ச்சி அடித்தது போலிருந்தது. "கை குலுக்குகிறார்களா? வெள்ளைக்காரர்கள்தானே அப்படிச் செய்வார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்!" என்று உதயராணி கேட்டாள்.

பிரகாசம்:-இதில் என்ன தப்பு? வெள்ளைக்காரப் பெண்கள் மட்டும் பெண்கள் அல்லவா? கை குலுக்குவ தில் அவர்கள் ஒழுக்கக் குறைவானவர்கள் என்று சொல்லிவிட முடியுமா? மனம்தானே உறுதியாய் இருக்க வேண்டும்? மன உறுதியுள்ளவர்களை, இந்தக் கைகுலுக்குவதால் என்ன செய்துவிட முடியும்?

அன்று இரவு வெகு நேரம்வரை உதயராணி தூங்க வில்லை. "மன உறுதியிருந்தால் கை குலுக்குவ தால் ஒன்றும் பாதகமில்லையாமே! அப்படியானால் நமது முன்னோர்கள் ஏன் ஸ்பர்சமே கூடாதென்றார்கள்? அவர்கள் முட்டாள்களா, அல்லது இக் காலத்து நாகரிக ஆண்கள் முட்டாள்களா, என்பது புரியவில்லையே" என்று சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

மறு நாள் காலையில் வீட்டிலுள்ள நாயை உலாவ விடுவதற்காக—அதைக் கட்டவிழ்த்து விடுவதற்காகப் போனாள். அதுவரை கட்டுக்குள் அடங்கி இருந்த நாய் அவிழ்த்து விடப்போவது தெரிந்த உடன் பலமாய்ச் சங்கிலியை இழுத்தது. அவிழ்த்து விடுவது, ரொம்ப கஷ்டமாயிற்று. கடைசியில் அவிழ்த்து விட்டவுடன் சங்கிலியை இழுத்துக் கொண்டிருந்த வேகத்தில் ஒரே மூச்சில் பத்தடிக்கு அப்புறம் போய் எழுந்து விழுந்து ஓடிற்று. கட்டறுபட்டால் என்ன நடக்கும் என்பதைக் காட்டிய அந்தச் சம்பவம் உதயராணியின் மனத்தில் பதிந்தது.

உதயராணியின் சகோதரன் குமரப்பா உதயராணியைப் பார்த்துப்போக வந்தான். இந்திரபுரிக்கு அவன் இதற்கு முன்னால் வந்தது இல்லை. அங்குள்ள காட்சிகளை எல்லாம் சகோதரனுக்குக் காட்ட வேண்டும் என்று உதயராணி விரும்பினாள். ஆகவே அன்று மாலை பிரகாசத்தைக் கிளப்பில் கொண்டுவிட்ட பிறகு சகோதரனை அழைத்துப்போய் ஊர் சுற்றிக் காட்ட வேண்டுமென்று உதயராணி திட்டம் போட்டாள். தானே மோட்டாரை ஓட்டிக்கொண்டு கிளப்பிற்குப் போனாள்.

கிளப்பின் வாசலில் பிரகாசம் இறங்குவதற்காகக் காரை நிறுத்தினாள். அங்கே வாசலிலேயே கிளப்பின் காரியதரிசி பஞ்சநதம் நின்று கொண்டிருந்தார். இவர்களைப் பார்த்ததும் ரொம்ப உபசாரமாக வரவேற்றார்.

"இவர்தான் என் மைத்துனர் குமரப்பா" என்று பிரகாசம் அறிமுகப்படுத்தினான். உதயராணியும், குமரப்பாவும் மோட்டாரிலேயே இருப்பதைப் பார்த்ததும், "இறங்கவில்லையா ?" என்று கேட்டார் பஞ்சநதம். அவர்கள் வேறு வேலையாகப் போவதாகப் பிரகாசம் சொன்னான். "அதனால் என்ன ? இறங்கி ஒரு கப் காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம்" என்றார் பஞ்சநதம்.

அதற்கு மேல் கிராக்கி செய்வது சரியாய் இருக்காது என்று நினைத்து இருவரும் இறங்கினார்கள். அங்கே ஆண்களும், பெண்களும் கலந்து உட்கார்ந்து டிபன் சாப்பிட்டுக்கொண்டு பேசிக்கொண்டிருப்பதை உதயராணி பார்த்தாள். உதயராணியைப் பார்த்ததும் அவளை அறிந்தவர்களுக்கு அவள் கிளப்பிற்கு வந்தது ஆச்சரியமாக இருந்தது. "ஹல்லோ ! ஹல்லோ !" என்று சொல்லிக் கையைத் தூக்கி ஆட்டினார்கள். உதயராணி எல்லாருக்கும் நமஸ்காரம் செய்தாள்.

உதயராணி வீட்டிற்கு முன்பு விருந்து சாப்பிட வந்திருந்த சிலர் அவளை வரவேற்று, கைகுலுக்குவதற்காகக் கையை நீட்டினார்கள். உதயராணி தனது கையைக் கொடுக்காமல் நமஸ்காரம் செய்தாள்.

இச் சமயம் சுந்தரம் என்ற ராணுவ தளபதி வந்தான். எல்லோரும் எழுந்து நின்று வரவேற்ருர்கள். உதயராணியைக் காரியதரிசி அறிமுகப்படுத்திஞன். உதராணியின் முகத்தைப் பார்த்ததும் அவள் அழகைக் கண்டு ஒரு விஞடி திகைத்து, கை குலுக்கக் கையை நீட்டிஞன். உதயராணி நமஸ்காரம் செய்தாள். தன் கையைக் குலுக்க உதயராணியின் கை நீளவில்லை என்பதை அறியாமல் உதயராணியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தபடியால், சில விநாடிகள் ஜெனரலின் கை நீட்டியது நீட்டியபடியே இருந்தது. இதைப் பார்த்த கிளப்வாலாக்கள் திடுக்கிட்டார்கள். இப்படியும் உலகம் தெரியாத பெண் உண்டா என்று திகைத்தார்கள். ஜெனரலின் கையைக் குலுக்க எத்தனையோ பெண்கள் காத்திருக்கும்போது இந்தப் பெண் இப்படிச் செய்கிருளே என்று அவர்கள் பரிதாபப்பட்டார்கள். தனது கை நீட்டியது நீட்டியபடி இருக்கிறது என்பதைச் சில விநாடிகளுக்கப்புறம் உணர்ந்த ஜெனரல் சுந்தரத்தின் முகத்தில் சட்டென்று ஒரு மாறுதல் ஏற்படவும், அப்படியே வேறு ஒன்றும் பேசாமல் இடத்தை விட்டுப் போய்விட்டான். உதயராணியைக் கோபத்தோடு பிரகாசம் பார்த்தான். சுற்றுணர்ச்சி சரியாக இல்லையென்பதை உணர்ந்த உதயராணி காப்பிகூடச் சாப்பிடாமல் சகோதரனுடன் காரில் ஏறிப் புறப்பட்டுவிட்டாள்.

எதிரே தனக்குப் பழக்கமான பங்கஜம் கார் ஓட்டிக்கொண்டு வந்தாள். அவள் பக்கத்தில் யாரோ ஒருவன் உட்கார்ந்து சிரித்துப் பேசிக்கொண்டிருந்தான். பின் ஆசனத்தில் அவள் கணவன் இருந்தான். இதுவும் அவளுக்கு ஆச்சரியமாய்த் தோன்றியது. தனது சகோதரனைப் பார்த்து, "என்ன அண்ணு, புருஷனைப் பின் ஆசனத்தில் உட்கார வைத்து, தன்னேடு மற்ருெருவனை வைத்துப் பேசிக்கொண்டு போவது நாகரிகமா?" என்று கேட்டாள்.

குமரப்பா, "இது பெரிய விஷயம் அம்மா. ஒரு வார்த்தையில் இப்படியோ அப்படியோ சொல்லிவிடக் கூடியதல்ல" என்ருன்.

உதயராணி:- என்ன அண்ணு, இப்படிப் பேசுகிருய்? கறுப்பைக் கறுப்பு, வெளுப்பை வெளுப்பு என்று சொல்லு வது கூடவா பெரிய விஷயம் ?

குமரப்பா :—எது கறுப்பு, எது வெளுப்பு என்பதில் தான் விஷயம் இருக்கிறது. ஆண் பெண் என்பதில் மட்டும் உலகம் பூராவாக ஒரேவிதமாய் இருக்கின்றது. ஆனுல் நாட்டிற்கு நாடு பாஷை வேறுபாட்டைப்போல, உடை வேறுபாடுகளும் பழக்க வழக்க வேறுபாடுகளும் இருக்கின்றன. எது சரி, எது தப்பு என்று தீர்ப்புக் கூறு வது அவ்வளவு சுலப மல்ல.

உதய :—நீ சொல்லுவதை நானும் ஒப்புக் கொள்ளு கிறேன். இன்னெரு நாட்டைப்பற்றி நான் குறைகூற வில்லே. நமது நாட்டில் நமது ஆட்கள் பரம்பரையான பழக்க வழக்கங்களே விட்டு விட்டு பிற நாடுகளேக் காப்பி யடிப்பது அவசியமா என்றுதான் கேட்கிறேன்.

குமரப்பா :—நமது நாட்டையே எடுத்துக் கொள் வோமே. பழக்க வழக்கங்கள் எல்லாம் ஆதிகாலம் முதல் மாறுபடாமல் அப்படியேவா இருக்கின்றன? நாம் அறிந்தோ, அறியாமலோ அவை மாறிக் கொண்டே இருக்கின்றன. ஆங்கிலப் பள்ளியில் நீ சேர்ந்து படித்த தைக் கிராமப் பெண்கள் ஒப்புக் கொள்ளுவார்கள் என்று நினைக்கிருயா? அல்லது நீ கார் ஓட்டுவதைத்தான் பெண் களுக்கு உகந்தது என்பதை அவர்கள் ஒப்புக்கொள்வார் களா?

உதய :—பட்டிக்காட்டு ஜனங்கள் பேசுவதை நாம் லட்சியம் செய்ய முடியுமா ?

குமரப்பா :—நீ எப்படிக் கிராமப் பெண்களேப் பற்றி நினைக்கிருயோ அதே மாதிரிதான் உன்னேப் பற்றி இங் குள்ள நாகரிகப் பெண்கள் நினைப்பார்கள்.

உதய:—அப்படியானுல் ஆணும் பெண்ணும் வெட்க மில்லாமல் கலந்து உறவாடுவதைச் சரியென்று நீயும் ஒப்புக்கொள்ளுகிருய் என்று சொல்லு.

குமரப்பா :-நான் ஒன்றும் சொல்லவில்லை. விஷயங்களை விளக்கினேன்; அவ்வளவுதான்.

உதய :—நன்ருய் இருக்கிறது உன் விளக்கம்.

இந்திரபுரியில் பார்க்க வேண்டிய சில காட்சிகளைக் குமரப்பாவுக்குக் காட்டிவிட்டு அந்த ஊரிலுள்ள உயர்தரமான காப்பி ஹோட்டலான போஜன பவனுக்குக் காரை ஓட்டிக்கொண்டு போனுள். அன்று ஸ்பெஷலாகப் போட்டிருந்த பலகார வகைகளை ருசி பார்த்துக் கொண்டிருக்கும்போது மற்ளெரு மேஜை முன்னுலிருந்த கௌசல்யாவைக் கண்டாள்.

கௌசல்யா விமான மூலம் உலக யாத்திரை போய்விட்டு இரண்டு தினங்களுக்கு முன்னுல்தான் இந்திரபுரிக்குத் திரும்பி வந்தாள். பிரகாசத்தோடு காலேஜில் ஒன்ருகப் படித்தவள். இன்னும் கல்யாணமாகவில்லை. பிரகாசத்தை விவாகம் செய்து கொள்ள வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தாள். அது நடைபெறவில்லை. நடைபெருமல் போனதற்குப் பிரகாசம் காரணமல்ல. கௌசல்யா தன்னைக் காதலிக்கிருள் என்பதே பிரகாசத்திற்குத் தெரியாது.

காலேஜில் படிக்கிற எத்தனையோ பெண்களைப்போல அவளும் ஒருத்தி என்று பிரகாசம் நினைத்தான். எல்லாப் பெண்களிடமும் சுமுகமாக அவன் பழகுவான். அம்மாதிரியே கௌசல்யாவையும் நினைத்தான். மேலும் சினிமாக் கம்பெனி முதலாளி ஒருவரின் மகனை கண்ணன் என்பவனேடு அடிக்கடி சினிமாப் பார்க்க கௌசல்யா போய்க் கொண்டிருந்தபடியால் அவனையே கௌசல்யா விவாகம் செய்துகொள்ளப் போகிருள் என்று நினைத்துக் கொண்டிருந்தான். எனவே, உதயராணியை விவாகம் செய்யப் பிரகாசத்தின் பெற்ரேர்கள் தீர்மானித்ததும் ஆட்சேபணை இல்லாமல் ஒப்புக் கொண்டான்.

கண்டதும் காதலோ, பழகியபின் காதலோ ஏற்பட்டு, பிரகாசத்தின் மனத்தை அலட்டாமல் தனது பங்கமற்ற காதலை அர்ப்பணித்தாள் உதயா. விவாகம் நிச்சயமான

பின்புதான் கௌசல்யாவுக்கு விஷயம் தெரியும். அப்புறம் செய்யக் கூடியது எதுவுமில்லை. ஆகவே, தன் மன வேதனையைத் தனக்குள்ளேயே அடக்கி வைத்துக் கொண்டிருந்தாள். இம்மாதிரிக் குறிப்பறியாத ஒரு ஜென்மம்கூட உலகில் உண்டா என்று பிரகாசத்தைப் பற்றி அவள் அடிக்கடி நினைத்து ஆச்சரியப்படுவதுண்டு. இந்த விஷயங்களெல்லாம் உதயராணிக்குத் தெரியாது. பிரகாசத்திற்கே தெரியாதென்றால் உதயராணிக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?

கௌசல்யாவைப் பார்த்த அதே சமயத்தில் கௌசல்யாவும் அப்பக்கம் திரும்பியவள் உதயராணியைப் பார்த்துக்கொண்டாள். சந்தோஷத்தோடு உதயராணி பக்கம் வந்து உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள். குமரப்பாவை அறிமுகப்படுத்தியதும், "நாளை கிளப்பில் எனக்கு நடக்கப்போகும் விருந்திற்கு இவர்களையும் கண்டிப்பாய் அழைத்து வரவேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள். பின்னால் அங்கிருந்து புறப்பட்டு உதயராணியும் குமரப்பாவும் வீடுவந்து சேர்ந்தார்கள். "கிளப்பையே நீ வெறுக்கிறவளாயிற்றே! கிளப்பிற்குப் போகப் போகிறாயா?" என்று குமரப்பா கேட்டான். ஒரு நிமிஷம் உதயா திகைத்தாள். அதைப் பற்றி அவள் யோசிக்கவே இல்லை. கௌசல்யாவுக்காக நடக்கும் விருந்துக்குப் போக வேண்டுமென்று அவள் ஆசை கொண்டாளே ஒழிய அதற்காகக் கிளப்பிற்குப் போக வேண்டியிருக்கும் என்பதை அவள் யோசிக்கவே இல்லை. போய்த்தான் ஆகவேண்டி யிருக்கிறது. "என்ன செய்வது? போக வேண்டியதுதான்" என்று உதயா பதில் சொன்னாள்.

அன்றிரவு கிளப்பிலிருந்து திரும்பிய பிரகாசம் அவ்வளவு குஷியாய் இல்லை. உதயராணி காரணத்தை அறிந்து கொண்டாள். அதைப்பற்றிப் பேசாமல், "உங்கள் சிநேகிதி கௌசல்யாவுக்கு, நாளை கிளப்பில் விருந்தாமே!" என்று கேட்டாள். "ஆமாம்" என்று சொல்லி விட்டு மேல் பேசாமல் பிரகாசம் நிறுத்திக் கொண்டான்.

உதயா:—ஆமாம் என்று சொல்லிவிட்டுச் சும்மா இருக்கிறீர்களே, நான் வரவேண்டாமா?

பிர :—அவசியம் வரவேண்டும். ஆனால் கிளப்பா யிற்றே, உனக்குப் பிடிக்காதே என்று யோசிக்கிறேன்.

உதயா :—பிடிக்காமல் என்ன? நீங்கள் போகிற இடத்திற்கு நான் ஏன் வரக்கூடாது?

பிர :—ரொம்ப மகிழ்ச்சி. அன்று ஜெனரல் சுந்தரத் திடம் நீ நடந்துகொண்டதைப் பார்த்த பின்பு அந்தக் கிளப் வாசனையே உனக்கு ஒத்து வராது என்று நினைத் தேன். நீ கிளப்பிற்கு வருவதா யிருந்தால் அதைவிட அதிசயமாய் மகிழ்ச்சி தரக்கூடியது எனக்கு வேறு என்ன இருக்கிறது ?

உதயா :—கிளப்பிற்கு வந்தால் ஆணும் பெண்ணும் கை குலுக்க வேண்டும் என்று உங்கள் கிளப் விதியில் இருப்பதாய்த் தெரியவில்லையே!

இச்சமயத்தில் டெலிபோன், மணி அடித்தது. குமாரி சிங்காரியைப் பரத நாட்டியத்திற்கு மறுநாள் ஏற்பாடு செய்திருப்பதாய் கிளப் காரியதரிசி சொன்னான். உதய ராணி உள்பட அனைவருக்கும் இதைக் கேட்டுக் களிப் பேற்பட்டது. குமாரி சிங்காரி என்றால் பஞ்சநதத்திற்கு ஒரு தனிப் பிரியம்.

'நீங்கள்தான் எப்படியாவது என் குமாரியைப் பிர பலமாக்கிவிட வேண்டும்' என்று சிங்காரியின் தந்தை பஞ்சநதத்திடம் எப்பொழுதோ சொன்னாராம். அதி லிருந்து சிங்காரிக்கு நாட்டியக் கச்சேரிகள் பிடித்துக் கொடுப்பது, அவற்றிற்கான மேடை அலங்கார வகைய ராக்களைக் கவனிப்பது முதலிய வேலைகளைப் பஞ்சநதம் விடாமல் கவனித்து வந்தான்.

சிங்காரியின் பரத நாட்டியக் கச்சேரியை யாராவது வைக்க விரும்பினால் பஞ்சநதத்தைக் கேட்பார்களே ஒழிய, சிங்காரியின் தந்தையைக் கேட்க மாட்டார்கள். பரத நாட்டியம் என்றால் உதயராணிக்குக் கொஞ்சம் பிரியம் உண்டு. அவளே அதில் கொஞ்சம் பயிற்சி பெற்றிருந்தாள். ஆனால் அவளுடைய காலேஜ் படிப்பை அதற்காக அவள் தியாகம் செய்யத் தயாராய்

இல்லாததால் பரத நாட்டியப் படிப்பை அரைகுறையாக நிறுத்திவிட்டாள். தனக்குப் பிரியமான பரதநாட்டியத்தைப் பார்க்கக் கூடிய சந்தர்ப்பம் மறுநாள் ஏற்படுவதை அறிந்ததும் கிளப்பின் மீதுள்ள வெறுப்பு மறுநாளைப் பொறுத்தவரை அடியோடு மறைந்துவிட்டது.

கௌசல்யாவுக்கு விருந்து பிரமாதமாய் நடைபெற்றது. கௌசல்யாவுக்கு ஒரு பக்கத்தில் மேஜர் சுந்தரம் வீற்றிருந்தான். மறுபக்கத்தில் வந்து உட்காரும்படி பிரகாசத்தை அவள் அழைத்தாள். அப்படியே பிரகாசம் வந்து உட்கார்ந்தான். உதயராணியும் குமரப்பாவும் ஒருபுறம் உட்கார்ந்தார்கள். உதயராணிக்கு மற்ருெரு பக்கத்தில் பஞ்சநதம் அமர்ந்தார்.

உதயராணிக்குத் தன் பக்கத்தில் அவன் உட்கார்ந்தது வெறுப்பாகத்தான் இருந்தது. என்ருலும் வேறு வழியில்லாமல் பொறுத்துக் கொண்டிருந்தாள். கௌசல்யா ரொம்பக் கனிவோடு பிரகாசத்திடம் பேசிக் கொண்டிருந்தாள். உதயராணி அதையும் கவனித்துத் தான் வந்தாள்.

அதை விட்டு சிந்தனையை மாற்றுவதற்காக பஞ்சநதத்திடம் சிங்காரியைப் பற்றி வலுவில் பேச ஆரம்பித்தாள். "சிங்காரியின் பரதநாட்டியத்தைப் பற்றிப் பிரமாதமாகக் கேள்விப் பட்டிருக்கிறேனே ஒழிய, இதுவரை பார்த்ததில்லை. அவள் பிரபலமானதற்குக் காரணம் அவளுடைய நாட்டியச் சிறப்பா அல்லது பஞ்சநதத்தின் விளம்பரச் சிறப்பா?" என்று கேட்டாள்.

பஞ்சநதம் தன் சாமர்த்தியத்தை உதயராணி பாராட்டுவதாக நினைத்து உச்சி குளிர்ந்து "என்னுடைய சாமர்த்தியம் என்ன பிரமாதம்? செட்டியார் மட்டும் முடுக்காய் இருந்தால் போதுமா? சரக்கு முடுக்காய் இருக்க வேண்டுமல்லவா?" என்று உதயராணியைப் பார்த்துப் புன்சிரிப்போடு சொன்ஞன். "சிங்காரியின் பரதநாட்டியம் அசல் பரதநாட்டியமாய் இருக்குமே ஒழிய, அதில் அவியல் எதுவும் கிடையாது. நீங்களே இப்போது பார்க்கப்போகிறீர்களே; நீங்களே நான் சொல்வதை

ஒப்புக் கொள்வீர்கள். உங்களுக்குப் பரத நாட்டியத்தைப் பார்ப்பதில் பிரியம் உண்டு என்று நினைக்கிறேன்'' என்ருன் உதயராணியைப் பார்த்து.

அவள் லேசாகச் சிரித்துவிட்டு, "நானே கொஞ்சம் பயிற்சி பெற்றேன்'' என்ருள். பஞ்சநதத்திற்கு ஆச்சரியமாய் இருந்தது. "அப்படியா? உங்கள் உடல் அமைப்புக்கு நீங்கள் மட்டும் பரதநாட்டியம் செய்வதாய் இருந்தால் எப்படி இருக்கும் தெரியுமா?'' என்று கேட்டான்.

தன் அழகைப் புகழுவதைக் கேட்டு உதயராணி சந்தோஷமடைந்தாள். பஞ்சநதம் மேலும் தொடர்ந்து, "வெறும் அபிநயம் பிடிப்பது மட்டும் போதாதம்மா. அபிநயத்தோடு உடலழகும் சேர்ந்தால்தான் அபிநயம் சோபிக்கும். அபிநயத்தோடு அநுபவ பாவமும் முகத்தில் பிரகாசித்தால்தான் அபிநயத்திற்கு உயிர் கொடுக்கும். அநுபவ மில்லாத, எலிக்குஞ்சுகளைப் போல சிறுமிகளும், உடலழகில்லாத யானைக் குட்டிகளைப் போன்ற பெண்களும் பரதநாட்டியம் செய்யக் கிளம்புவதால்தான் பரதநாட்டியத்திற்குப் புகழ் ஓங்குவதில்லை'' என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தான்.

விருந்து முடிந்தது. ஆனல், பஞ்சநதத்தின் பேச்சு மட்டும் ஓயவில்லை. விருந்தாளிகள் எல்லோரும் தோட்டத்தில் நடக்கப்போகும் பரத நாட்டியத்தைப் பார்ப்பதற்காகக் கட்டிடத்தை விட்டு வெளியே வந்தார்கள். ஒரு பக்கம் மேடை போட்டுக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்தபடியால் அவரவர்களுக்கு இஷ்டமான இடத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டே நாட்டியத்தைப் பார்த்தார்கள். ஜோடி ஜோடியாக அமர்ந்தார்கள்.

விருந்து முடிந்த பின்பு பிரகாசம் தன் பக்கம் வருவாரென்று உதயராணி எதிர்பார்த்தாள்; வரவில்லை. பஞ்சநதமும் உதயராணியும் தனியாக உட்கார்ந்தார்கள். குமரப்பா வேறிடத்துக்குப் போய்விட்டான்.

மறுபடியும் பேச்சை ஆரம்பித்த பஞ்சநதம் பரதநாட்டியம் கற்றுக் கொடுக்க ஒரு நல்ல நட்டுவர் வந்திருப்ப

தாகவும் அவரை மறுநாள் உதயராணியிடம் கூட்டி வருவதாகவும் சொன்ஞன். தான் யோசனை செய்து தெரிவிப்பதாகவும் அப்புறம் கூட்டி வந்தால் போதும் என்றும் உதயராணி சொன்ஞள்.

இச்சமயம் குளிர்ந்த பானங்கள் கொடுப்பவன் வந்தான். அவனிடம், "பிரகாசம் எங்கே இருக்கிருர், தெரியுமா?" என்று உதயராணி கேட்டாள். "தெரியும் அம்மா, அந்தப் பக்கம் கௌசல்யா அம்மாவும் அவரும் பேசிக் கொண்டிருக்கிருர்கள்" என்ருன்.

இதைக் கேட்டதும் உதயராணிக்கு உள்ளம் 'பக்' என்றது. "இன்னமுமா பேசிக் கொண்டிருக்கிருர்கள்?" என்று தன்னையறியாமலேயே உதயராணி சொல்லி விட்டாள். "வரச் சொல்லட்டுமா அம்மா" என்று அந்தப் பையன் கேட்டான். உதயராணியின் பதிலுக்குக் காத்திருக்காமல், "ஒன்றும் அவசரமில்லை, நீ போ" என்று காரியதரிசி பஞ்சநதம் சொன்ஞர். பையன் போய்விட்டான். உதயராணி பஞ்சநதத்தைப் பார்த்தாள். பஞ்சநதம் அசட்டுச் சிரிப்பு சிரித்துக்கொண்டு, "அவர்கள் காலேஜ் தோழர்கள்; சந்தித்து வெகு காலம் ஆயிற்று. ஆசை தீரப் பேசட்டுமே" என்ருன். உதயராணி பதில் சொல்லவில்லை.

பிரகாசமும் கௌசல்யாவும், பழங்காலக் கதைகளைப் பேசிக் கொண்டிருந்தார்கள். இருவர் நாற்காலிகளும் ஒன்ருய் ஒட்டினுற்போல இருந்தபடியால் இருவரும் ஒருவரை ஒருவர் உரசிக் கொண்டிருந்தார்கள். இந்த உரசல் வரவர அதிகமாவது போல பிரகாசத்திற்குத் தோன்றியது. கடைசியாகக் கௌசல்யா தன் பக்கவாட்டில் அவளுடைய முழு பாரத்தையும் தன்மீது சாய்ப்பது போலப் பிரகாசம் உணர்ந்தான்.

இதை அவன் எதிர்பார்க்கவில்லை. கொஞ்சம் விலகியிருக்க விரும்பினுன். அப்படி விலகினுல் அவள் கீழே சாயும்படி நேரிடும். அந்த அதிருப்தியைக் கௌசல்யாவிற்குக் கொடுக்க பிரகாசத்திற்குத் தைரியமில்லை. அவன் இருதய ஓட்டம் அதிகரித்து ரத்தம் சூடேறிற்று.

அச் சமயம் உதயராணியை நினைத்தான். எதிரே நாட்டியமாடிக் கொண்டிருந்த குமாரி, "திரும்பியே ஒரு முத்தம்" என்ற பைரவி ராகப் பாட்டிற்கு அபிநயம் ஆரம்பித்தாள்.

ஏதாவது பேசினால்தான் தன் மனதைப் பிடித்த நெருக்கடி தளரும் என்று எண்ணினான். பேசுவது என்ன என்பதுதான் அவனுக்குப் புரியவில்லை. வாயைத் திறந்தான். "பாட்டு அருமையான பாட்டு அல்லவா?" என்று கேட்டான்.

எந்த நெருக்கடியைத் தீர்ப்பதற்காகப் பேச நினைத்தானோ அந்த நெருக்கடியை அவன் பேச்சு அதிகரித்து விட்டது. தன் உடலைப் பிரகாசத்தின் பக்கவாட்டில் நெருக்குவதோடு நில்லாமல் தன் தலையையும் அவன் தோள்மீது இச் சமயம் கௌசல்யா சாய்த்தாள். சாய்ந்து கொண்டு அரைக் கண் பார்வையாகப் பிரகாசத்தைப் பார்த்து, "சந்தேகம் என்ன பிரகாஷ்" என்று ஒரு பெருமூச்சு விட்டாள்.

பிரகாசத்திற்குத் தர்ம சங்கடமாய் விட்டது. தன் தோள்மீது சாய்ந்திருக்கும் கௌசல்யாவைப் பார்க்கத் தைரியமும் இல்லை; பேச்சை மேலே இழுத்துக்கொண்டு போகவும் தைரியமில்லை.

அவன் முகவாய்க் கட்டையைத் தன் பக்கமாய்த் தன் மெல்லிய கரத்தால் திருப்பிக் கொண்டே கௌசல்யா, "பிரகாஷ், இந்தப் பாட்டை நான் எங்கு கேட்டாலும் நான் உன்னையே நினைப்பேன். இதற்குக் காரணம் உனக்கு ஞாபகம் இருக்கிறதா?" என்று கேட்டாள்.

"ஞாபகம் இல்லை" என்று சொன்னான். மறுபடியும் ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, "உனக்கு எப்படி ஞாபகமிருக்கும்? அவ்வளவுதான் என்மீது உனக்குள்ள அன்பு" என்று பேசினாள்.

பிரகாசம்:—என்ன கௌசல்யா இப்படிச் சொல்கிறாய்? உன்மீது எனக்குள்ள அன்பு வேறு யார்மீதும் கிடையாதே!

கௌசல்யா:—அடடா! அன்றே உன் அன்பைப் பார்த்துவிட்டேனே. உனக்கு ரொம்பப் பிரியமான தேங்காய் ஹல்வாவை என் அறையில் ஒரு நாள் செய்து உன்னை டிபனுக்கு அழைத்தேனே, ஞாபகம் இருக்கிறதா?

பிர:—அதை நான் எப்படி மறக்க முடியும்? இன்றும் அந்த ருசி ஞாபகம் இருக்கிறதே; இன்றும் அதை நினைத்தால் நாக்கில் ஜலம் ஊறுகிறதே!

கௌசல்யா:—டிபன் சாப்பிட்ட பின்பு ரேடியோவைத் திருப்பியபோது இதே பைரவி ராகப் பாட்டைக் கேட்டோமல்லவா? அதற்கு நான் அபிநயம் பிடித்துக் காட்டினேன் அல்லவா? அபிநயம் மிக அபூர்வமாய் இருக்கிறதென்று நீ சொன்னாயல்லவா? ஆடிக் கொண்டே உன் பக்கம் வரும்போதெல்லாம் நீ என்னை முத்தமிடுவாய் என்று நினைத்துக்கொண்டே வந்தேன். கடைசியில் ஏமாந்தேன். உணர்ச்சியில்லாத ஒரு கட்டை மாதிரி நீ உட்கார்ந்திருந்தாய். கடைசியில் என்னை ஏமாற்றிவிட்டாய்.

பிரகாசத்திற்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அப்பொழுதுதான் கௌசல்யா சொல்லுவதன் உண்மை புரிந்தது.

பிரகாசம்:—நான் அப்படி நினைக்கவில்லையே. நீ என்மீது அம்மாதிரி பிரியம் கொண்டிருந்தாய் என்பது எனக்குத் தெரியாமல் போயிற்றே. ஏன் என்னிடம் நீ சொல்லவில்லை?

கௌ:—எந்தப் பெண்ணாவது அப்படிச் சொல்லுவாளா? சொல்லாமல் தெரியக்கூடிய விஷயங்கள் இல்லையா? முட்டாள்கூட முகபாவத்திலிருந்து அறிந்து கொள்வான். ஆனால், நீயோ வெறும் மரக்கட்டை. உன்னால் என் வாழ்வே போயிற்று. நான் யாரையும் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை.

பிரகாசம் இதற்குப் பதில் சொல்ல முடியாமல் திணறினான். கௌசல்யாவின் வாழ்க்கை பாழாவதற்குத்

தானே காரணமாய் இருக்குமோ என்று பயந்தான். அதற்குப் பரிகாரம் தேடுவதற்கு இப்பொழுது ஒன்றும் வழியில்லையே என்று திகைத்தான். இந்தத் திகைப்பு களுக்கிடையில்தான் அவள் அவன்மீது சாய்ந்திருந் தாள். அவனுக்கு ஏற்பட்டிருந்த கலக்கம் மாறி அநுதா பம் ஏற்பட்டது. அவளது கையை மெதுவாகத் தடவிக் கொடுத்துக்கொண்டு, "கௌசல்யா, நான் பெரிய முட் டாள். எனக்கு ஒன்றும் புரியவில்லை" என்று குளறினன். அச்சமயம் கௌசல்யாவின் கண்ணீர்த் துளிகள் பிரகா சத்தின் கையில் விழுந்தன. ஒரு பெரு மூச்சு விட்டுக் கொண்டு பிரகாசத்தின் கைகளை இறுக்க அமுக்கினள்.

உதயராணியும் பஞ்சநதமும் பேசிக்கொண்டிருந்த போது நட்டுவர் ராஜப்பா தற்செயலாக அப்பக்கம் வந் தான். "வாருங்க, வாருங்க. உங்களைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறோம்" என்று பஞ்சநதம் வரவேற் ருன். உதயராணியை அறிமுகப் படுத்தினன். உதய ராணிக்கு நாட்டியம் கற்றுக்கொள்ள விருப்பம் இருப்ப தாகவும் தெரிவித்தான்.

ராஜப்பா :—காத்திருக்கிறேன். உங்களைப் போன் றவர்கள் பரத நாட்டியம் கற்றுக் கொள்ளுவதுதான் பரத நாட்டியத்திற்கே சிறப்பாய் இருக்கும். கௌசல்யா அம்மாவுக்கு நான்தான் சொல்லி வைத்தேன். ரொம்ப அற்புதமாய் ஆடுவார்கள்.

உதயராணி :—அப்படியா! எனக்குத் தெரியாதே?

பஞ்சநதம் :—எனக்கும் தெரியாது.

ராஜப்பா :—ஒருவருக்குமே தெரிந்திருக்க முடியாது. அவ்வளவு ரகசியமாகக் கற்றுக் கொண்டார்கள். இதோ அபிநயம் நடக்கிறதே 'திரும்பியே ஒரு முத்தம்' என்ற பைரவி பாட்டுக்கு. இதை அவர்கள் அபிநயம் பிடிக்க வேண்டும். அடடா, என்ன அற்புதம்! என்ன அற்புதம்! இந்தப் பாட்டுக்கு அபிநயம் பிடிப்பதற்கே அவர்கள் பிறந்திருக்கிருர்களோ என்று தோன்றும். அவர்கள் மாதிரி அற்புதமாக இந்தப் பாட்டுக்கு அபிநயம் பிடிப்ப வர்களை இதுவரை நான் பார்த்ததே இல்லை.

உதயராணி:—எனக்கு இதுவரையில் தெரியாமல் போயிற்றே! தெரிந்திருந்தால் நமது வீட்டில் ஒருநாள் அந்த அம்மாவின் ஆட்டத்தைப் பார்க்க எப்படியாவது ஏற்பாடு செய்திருப்பேனே!

ராஜப்பா:—நீங்கள் கேட்டால் மறுப்பார்களா என்ன! அந்தப் பைரவி ராகப்பாட்டுக்கு அபிநயம் கற்றுக் கொண்டதே உங்கள் கணவருக்காகத்தான்.

உதயராணியின் மனம் 'திக்' என்றது. 'அப் படியா' என்று கேட்டாள். ராஜப்பாவுக்கு, தான் அதைச் சொல்லியிருக்கக் கூடாதென்று தோன்றிற்று. அதைச் சமாளிப்பதற்காக, "நீங்கள் ஒன்றும் தவருக நினைத்துக் கொள்ளக்கூடாது. காலேஜுகளில் படிக்கும்போது மாணவர்கள் ஒருவருக்குப் பிரியமானதை மற்ருெருவர் செய்வது சகஜந்தானே! இந்தப் பைரவி ராகப் பாட்டு உங்கள் கணவருக்குப் பிடித்தமான பாட்டுகளில் ஒன்று. அதனுல் அதற்கு அபிநயம் பிடித்து திடீரென்று அதைக் காட்டி பிரமிக்க வைக்கவேண்டு மென்று நினைத்தாள். அவ்வளவுதான்" என்ருள்.

உதயராணி:—இதைப் பற்றி நான் இதுவரை கேள்விப்பட்டதே இல்லை.

ராஜப்பா:—கௌசல்யாவின் நினைப்பு அது. ஆனுல் உங்கள் கணவரிடம் அதை நடித்துக் காட்டியிருந்தால் தானே அவருக்குத் தெரிந்திருக்கமுடியும்? நடித்துக் காட்டினுர்களா காட்டவில்லையா என்பது எனக்குத் தெரி யாது. தாங்கள் நாட்டியம் கற்றுக் கொள்ளுவதாய் இருந்தால் ரொம்பப் பிரமாதமாய் இருக்கும்.

பஞ்சநதம்:—அதைத்தான் நானும் சொல்லிக் கொண்டிருந்தேன். இவர்கள் அழகிற்குப் பரத நாட் டியம் ரொம்ப ரொம்ப எடுப்பாய் இருக்கும்.

உதயராணி:—நான் யோசித்து, என் கணவரிடமும் கலந்து கொண்டு உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

பஞ்சநதம் "நான் கேட்டு வந்து சொல்லுகிறேன்" என்று ராஜப்பாவைப் பார்த்துக் கூறினுன்.

இச்சமயம் அங்கே குளிர்ந்த பானங்கள் கொண்டு போனவனை அழைத்து ஆளுக்கு ஒரு டம்ளர் பானத்தை வாங்கிக் கொடுத்தான்.

கிளப்பை விட்டு வீடு திரும்பி வரும்போது உதயராணியும் பிரகாசமும் அதிகமாகப் பேசவில்லை. இருவர் உள்ளங்களிலும் உணர்ச்சி நிரம்பித் ததும்பிக் கொண்டிருந்தது. கௌசல்யாவுக்குத் தான் தவறு செய்து விட்டதாகப் பிரகாசம் சந்தேகப்பட்டுக் கொண்டு வந்தான். கௌசல்யா அவ்வளவு பிரியமாய்ப் பிரகாசத்திடம் இருந்தும் அவனைக் கல்யாணம் செய்து கொள்ளாமல் தன்னையே செய்து கொண்டதால் தனக்கு ரொம்பப் பெருமை கொடுத்திருப்பதாக உதயராணி நினைத்தாள். இவ்வளவு பெருமைகொடுத்த புருஷனுக்குத் திருப்தியாக ஆண்களோடு கலந்து பழகுவதால் என்ன குறைந்து விடும் என்று சிந்தித்தாள்.

இந்திரபுரிக்கு ஒரு பிரபல ஜாலவித்தைக்காரர் வந்து தமது சாமர்த்தியங்களைக் காட்டினார். புதுப் புது வித்தைகளை அவர் காட்டியபடியால் ஜனங்கள் ஏராளமாய்ப் போய்ப் பார்த்து வந்தார்கள். அவர் காட்டிய வித்தைகளில் அந்தரத்தில் பிசாசுகள் நடமாடுவதைக் காட்டுவதும் ஒரு வித்தை. திடீரென்று விளக்கை அணைத்தவுடன் எலும்புக் கூடுகள் பிரகாசமாக அந்தரங்கத்தில் தலைக்கு மேலாகப் போவதைப் பார்க்கலாம். இதைப் பார்க்கும்போது பயந்து சிலர் மூர்ச்சை போடுவார்கள். அம் மாதிரி பயப்படுகிறவர்கள் முன்பாகவே எழுந்து போய் விடலாமென்று அந்தக் காட்சியைக் காட்டுமுன் எச்சரிக்கை செய்துவிட்டே மந்திரவாதி ஆரம்பிப்பார்.

அந்த ஜாலவித்தைகளைப் பார்ப்பதற்கு அன்று உதயராணி போயிருந்தாள். வேறு வேலையாகப் பிரகாசம் போகவேண்டி யிருந்தபடியால் பஞ்சநதத்தோடு உதயராணியை அனுப்பிவைத்தான். இருவரும் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பஞ்சநதத்திற்கு அடுத்தாற்போல மேஜர் சுந்தரமும் உட்கார்ந்திருந்தார்.

மூவரும் காட்சிகளைப் பற்றிக் குண தோஷம் கூறிக் கொண்டிருந்தார்கள். கடைசியாக அந்தரத்தில் பேய் கள் நடமாடும் காட்சி வந்தது. திடீரென்று ஒரு வெடிப்பு சப்தம் கேட்டதும் அந்த விநாடியே விளக்குகள் அணைக் கப்பட்டன. அந்தத் திகைப்பு தீருவதற்குள் ஆகாசத் தில் எலும்புக் கூடுகள் தோன்றியபடியால் உதயராணி பயந்தே போனாள். 'ம்ம்ம்' என்று ஒரு சப்தம் போட் டுக் கொண்டே பஞ்சநதத்தின் கைகளைப் பிடித்துக் கொண்டாள். பஞ்சநதம் இதைக் கண்டு ஆச்சரியப்பட வில்லை. அவள் கைகளைத் தன்னுடைய மற்றொரு கையால் தடவிக் கொடுத்தான்.

"பயப்படாதீர்கள். உண்மையில், அபூர்வமான காட்சிதான்" என்றும் சொன்னான். உதயா பதில் பேசவில்லை; தன் கையை விடுவித்துக் கொள்ளவுமில்லை. இந்நிலைமையில் விளக்குகள் மீண்டும் போடப்பட்டன. உதயாவின் கை பஞ்சநதத்தின் கைகளுக்குள் அடக்கமா யிருப்பதைச் சுந்தரம் பார்த்துவிட்டான். சுந்தரத்தின் கண்களும் பஞ்சநதத்தின் கண்களும் சந்தித்தன. அதை உதயா பார்க்கவில்லை. அதோடு வித்தைகள் முடிந்து விட்டபடியால் எல்லாரும் புறப்பட்டார்கள்.

உதயத்திற்கு ஏற்பட்ட திகில் முற்றிலும் போக வில்லை. அவள் கையைப் பிடித்து பஞ்சநதம் கொட்ட கைக்கு வெளியே கூட்டிக்கொண்டு வந்தான். சுந்தர மும் பின்னால் வந்தான். "எனது வீடு இதோ பக்கத் தில்தான் இருக்கிறது. அங்கே போய் ஒரு கப் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்றான் சுந்தரம். உதயா ஒன்றும் சொல்லவில்லை. "அப்படியே செய் வோம்" என்றான் பஞ்சநதம். எல்லோரும் அங்கே போனார்கள்.

உதயா ஒரு சோபாவில் அமர்ந்துகொண்டு கண்ணை மூடிக் கொண்டிருந்தாள். பஞ்சநதம் டெலிபோன் பேசு வதற்காக அடுத்த அறைக்குப் போனான். உதயத்தின் நெற்றியில் வியர்வை துளிர்த்து நின்றது.

"பாவம், ரொம்பப் பயந்துவிட்டீர்கள்" என்று சொல்லிக்கொண்டே தன் கைக்குட்டையை எடுத்து உதயராணியின் நெற்றியில் இருந்த வியர்வையைத் துடைத்தான் சுந்தரம். யாரோ துடைப்பதை உணர்ந்த உதயா திடீரென்று கண் விழித்தாள். அச் சமயம் கௌசல்யா அந்த அறைக்குள் வந்தாள். அங்கிருந்த நிலைமையைப் பார்த்து அப்படியே திகைப்படைந்து ஒரு விநாடி நின்றாள். அடுத்த விநாடி தன்னைச் சமாளித்துக் கொண்டு, "யார் உதயராணியா? ஏது இவ்வளவு நேரத்தில் இங்கு வந்திருக்கிறாய்?" என்றாள்.

உதயராணி பதில் சொல்லும் முன்பு சுந்தரம் முந்திக் கொண்டான். "ஜால வித்தைக்குப் போயிருந்தோம். அங்கே கடைசியில் காட்டிய பேய்கள் நடமாட்டத்தைக் கண்டு பயந்து போனார்கள். காபி சாப்பிட்டு விட்டு கொஞ்சம் இளைப்பாறட்டும் என்று இங்கே கூட்டி வந்தேன்" என்றான். இதற்குள் பஞ்சநதமும் அங்கே வந்தான்.

"என்னிடம் சொல்லி யிருந்தால், நானும் வந்திருப்பேனே, உதயா" என்று கௌசல்யா சொன்னாள்.

மேஜர்சுந்தரம் தன் நெற்றியைத் துடைத்த செய்கை உதயாவை உறுத்திக் கொண்டிருந்தது. உதயாவும், பஞ்சநதமும் போன பின்பு, "உதயாவுக்கும் உங்களுக்கும் இவ்வளவு நட்பு என்று எனக்கு இதுவரை தெரியாதே" என்றாள் கௌசல்யா.

மேஜர் சுந்தரம் கொஞ்சம் வருத்தத்தோடு, "இப்படிப் பேசாதே கௌசல்யா. இதற்கு முன்னால் கிளப்பில் ஒரு தடவை பார்த்ததைத் தவிர நான் அவளிடம் பேசியதே இல்லை" என்றார்.

கௌ:—ஒரு தடவை பார்த்திருந்துமா நட்பு அவ்வளவு தூரம் முற்றி, அவள் நெற்றியை உங்கள் கைக்குட்டையால் துடைக்கக் கூடிய அளவுக்கு வந்திருக்கிறது? பிரகாசத்திடம் நான் இதைப் பற்றிப் பேசுகிறேன்.

சுந்தரம்:—வீணைக் குடும்பக் கலகத்தில்தான் அது வந்து முடியும். அப்படி ஒன்றும் செய்யாதே. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்.

கௌ:—இதே மாதிரி பிரகாசம் நடந்து கொண்டால் நமக்குள் விவாகமான பிறகு நீங்கள் சும்மா இருப்பீர்களா ?

சுந்தரம்:—இதில் என்ன தவறு இருக்கிறது ?

கௌ:—தவறில்லை யென்றால் அன்று நாட்டியத்தன்று நான் பிரகாசத்திடம் பேசிக் கொண்டிருந்ததற்குப் பெரிதாய்க் கோபித்துக் கொண்டீர்களே !

சுந்தரம்:—ஏதோ திடீரென்று கோபம் வந்தது. அன்று நான் கோபித்திருக்கக் கூடாது.

கௌ:—அப்படி வாருங்கள் வழிக்கு. ஒவ்வொரு ஆணும் தன்னுடைய காதலி பிறருடன் நெருங்கிப் பழகக் கூடாதென்று விரும்புகிறான். ஆனால் தான் மட்டும் எல்லாப் பெண்களுடனும் நெருங்கிப் பழகுவது தவறில்லையா ? தவறில்லை என்று நினைக்கிறான்.

சுந்தரம்:—அப்படியானால் ஒவ்வொரு பெண்ணும் தன் காதலன் மட்டும் வேறொரு பெண்ணோடு பழகக் கூடாது என்று நினைக்கிறாள். தான் மட்டும் எந்த ஆணுடன் பழகினாலும் தவறில்லை என்றுதான் நினைக்கிறாள்.

கௌ:—பெண்களைப்பற்றி எப்படி நீங்கள் இம்மாதிரி சொல்லலாம் ?

சுந்தரம்:—ஏன் சொல்லக் கூடாது ? இரண்டு கைகள் சேர்ந்தால்தான் ஓசை செய்ய முடியும். ஆணில்லாமல் பெண் தவறு செய்ய முடியாதென்றால் பெண்ணில்லாமல் ஆண் தவறு செய்ய முடியுமா என்று கேட்கிறேன்.

கௌ:—அப்படியானால் நீங்கள் சற்று முன்பு செய்த தவறுக்கு உதயராணியும் உடந்தை என்கிறீர்கள்.

சுந்தரம்:—நீ சொல்லுகிறபடி நான் தவறு எதுவும் செய்யவில்லை. செய்திருந்தால் அல்லவா உன் வியாக்கியானம் சரியா, இல்லையா என்பதை யோசிக்க வேண்டும்.

கௌ:—ஒருவிதத்தில் எனக்கு மகிழ்ச்சி. அதாவது நீங்கள் ரொம்ப சாமர்த்தியமாகப் பேசுகிறீர்கள்.

உதயராணியின் நெற்றியைச் சுந்தரம் துடைத்ததைப்பற்றி கௌசல்யாவுக்குக் கோபம் ஏதும் இல்லை. நாட்டிய தினத்தன்று பிரகாசத்தோடு தான் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்ததையும் அவன் மீது சாய்ந்து கொண்டிருந்ததையும், பார்த்து மேஜர் சுந்தரம் அதிருப்தியாகப் பேசினார். அதற்குப் பதிலாகப் பேச ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததே என்றுதான் கௌசல்யாவுக்கு சந்தோஷம். அந்தச் சந்தோஷத்தை வெளியில் காட்டாமல் கோபப்படுவதுபோல பாசாங்கு செய்தாள்.

பிரகாசத்துக்கு விவாகமாகி விட்டபடியால் அவனைத் தான் விவாகம் செய்துகொள்ள முடியாது. என்றாலும் பிரகாசத்தை அவளால் மறக்க முடியவில்லை. அவனுடைய களங்கமற்ற மிருதுவான உள்ளம் அவளை ரொம்பவும் கவர்ந்திருந்தது. மேஜர் சுந்தரத்தோடு அவள் பழகி வந்தாலும், மேஜர் சுந்தரத்தை அவள் விவாகம் செய்துகொள்ளப் போவதாக ஊரில் வதந்தி இருந்தாலும் அவளுக்கு என்னவோ, கல்யாணம் செய்துகொள்வதில் இஷ்டமே இல்லை.

உதயராணி அன்றிரவு மீண்டும் மேஜர் சுந்தரத்தின் செய்கையைப் பற்றி பிரகாசத்தினிடம் பிரஸ்தாபித்தாள். அதைப் பற்றித் தவருக நினைக்கவேண்டாம் என்று சமாதானம் சொன்னான் பிரகாசம். இவ்வளவு நல்லவராய் இருக்கிறாரே என்று தனக்குள் பெருமைப்பட்டாள். "நல்ல விதமாக அவர் எதையும் நினைக்கிறார். நான் ஏன் எடுத்ததற்கெல்லாம் பிறர் மேல் சந்தேகப்பட வேண்டும்? என் உள்ளத்திலே உறுதி இருந்தால் யார் என்ன செய்ய முடியும்? அவர் நினைக்கிறபடியே நானும் ஏன் நினைக்கக் கூடாது?" என்று எண்ணினாள்.

இப்படி யோசித்து யோசித்து கடைசியில் இவ்வளவு பிரியமாய் இருக்கிற கணவனின் இஷ்டப்படி நடக்க வேண்டியதுதான் என்று தீர்மானித்து, பரத நாட்டியப் பயிற்சிக்கு ஏற்பாடு செய்தாள்.

உதயராணியின் தீர்மானத்தைக் கேட்ட பஞ்சநதத்திற்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவில்லை. ஊரில் முக்கியமானவர்களிடம் வீட்டில் நடக்கும் காரியங்கள் எல்லாம் தானே நடத்துவதாகப் பெயர் வரவேண்டும் என்பது ஒன்றுதான் பஞ்சநதத்தின் வாழ்க்கை லட்சியம். பிரமுகர்களை அறிமுகப்படுத்தி வைத்தல், அந்த லட்சியத்திற்குள் அடங்கிய ஒரு கிளைப் பகுதி. பஞ்சநதம் ராஜப்பாவைப் பார்த்துப் பேசி, ஒரு நல்ல தினத்தில் பயிற்சியை ஆரம்பித்து வைத்தார்.

மாலை நேரங்களில் இந்தப் பயிற்சி நடந்தபடியால் பிரகாசம் தனியாகக் கிளப்பிற்குப் போய் நேரம் போக்க வேண்டியது அவசியமாகிவிட்டது. கௌசல்யாவும் சுந்தரமும் தினமும் கிளப்பிற்கு வரத் தவறுவதில்லை. ஒரு நாள் கௌசல்யாவும் பிரகாசமும் தனியாக உட்கார்ந்து கொண்டிருந்தபோது, 'பிரகாசம்! உன்னைக் கல்யாணம் செய்துகொள்ளும் பாக்கியம்தான் எனக்குக் கிடைக்கவில்லை. தினம் மாலையில் என்னைத் தனியாகச் சந்தித்துக் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிரு. போதும். இதையாவது செய்வாயா?'' என்று கௌசல்யா கேட்டாள்.

பிரகாசம் சிரித்துக் கொண்டு "அவசியம் செய்கிறேன். ஆனால் ஒரு கஷ்டம். உதயராணியும் என்னோடு கிளப்பிற்கு வருவதாக இருந்தால் சுலபமாய் இருக்கும். இல்லாவிடில் தினம் சந்திப்பது கஷ்டமாய் இருக்குமே" என்றான்.

கௌசல்யா:—உதயராணி கிளப்பிற்கு வருவதாவது ஒன்றுவது. அவள் ஒருநாளும் வரமாட்டாள். அப்படியானால் நீயும் நான் கேட்பதைக் கொடுக்கமாட்டாய்?

பிர:—அப்படிச் சொல்லிவிடாதே கௌசல்யா. உதயராணி வரவர மாறிக்கொண்டு வருகிறாள். நாட்டியம் கூடப் பயிற்சி செய்கிறாளே தெரியுமா?

கௌ:—நிஜமாகவா? இது ஒரு பெரிய ஆச்சரியம்.

இச்சமயம் பஞ்சநதம் அங்கே வந்தான்.

அவனைப் பார்த்து, "நீ பலே ஆளப்பா. உதயராணி நாட்டியம் கற்றுக் கொள்ளுவதை என்னிடம்கூட மறைத்துவிட்டாயே!" என்றாள் கௌசல்யா.

பஞ்ச:—அன்றே உங்களிடம் சொல்ல வேண்டுமென்று நினைத்தேன். இரண்டு தடவை உங்கள் வீட்டுக்கு டெலிபோன் கூடச் செய்தேன். நீங்கள் அகப்படவில்லை.

அதற்குக் கௌசல்யா, "நான் வீட்டில் இல்லாத சமயமாகப் பார்த்து டெலிபோன் செய்திருப்பாய். அது கிடக்கட்டும். இந்தக் கவரை ஒருவருக்கும் தெரியாமல் உன்னிடம் கொடுக்க வேண்டுமென்று மேஜர் சொன்னார். பிரகாசம் மட்டும்தான் இருப்பதால் பாதகமில்லை" என்று சொல்லித் தன் பையிலிருந்து ஒரு கவரை எடுத்துக் கொடுத்தாள்.

பஞ்சநதம் "ரொம்ப வந்தனம்" என்று சொல்லி அந்தக் கவரை வாங்கிக் கொண்டு "நாளை வீட்டுக்கு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு இடத்தைவிட்டு அகன்றான்.

உதயராணியின் நாட்டியப் பயிற்சி திருப்திகரமாய் முன்னேறிக்கொண்டு வந்தது. முகவெட்டு, அபிநயப் பிடிப்புகள் இவற்றைச் சரியாகச் செய்வதற்கு அடிக்கடி முகத்தையும் கைகளையும் ராஜப்பா, தொட்டுச் சொல்லிக் காட்ட வேண்டி இருந்தது. இம்மாதிரி தன்னைத் தொடுவது உதயராணிக்கு வெறுப்பாக இருந்தது. என்றாலும் வேறு வழியில்லை. அந்த வெறுப்பு கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து மறைந்தே போயிற்று.

பயிற்சி முடிந்தபின்பு அரங்கேற்றம் நடத்த வேண்டுமா என்பதைப் பற்றி ஒரு நாள் பிரகாசத்தின் வீட்டில் ஒரு விவாதம் ஆரம்பமாயிற்று. மேஜர் சுந்தரம், கௌசல்யா, பஞ்சநதம், பிரகாசம், உதயராணி ஆகியோர் அச்சமயம் அங்கே இருந்தார்கள்.

மேஜர் சுந்தரம், "அரங்கேற்றம் அவசியமென்று தான் நான் நினைக்கிறேன்" என்றார்.

கௌசல்யா:—ஏன் என்று காரணம் சொல்லுங்கள்.

மேஜர்:—உதயராணியின் கலைத் திறமை எல்லாருக்கும் தெரியவேண்டாமா?

கௌ:—கலைக்காகக் கலையைக் கற்றுக் கொள்ளுகிறோமே யொழிய விளம்பரத்திற்காக அல்லவே!

மேஜர்:—கற்ற கலைகளை ஒவ்வொருவரும் ரகசியமாய் வைத்துக்கொண்டால் அது எப்படி வளர்ச்சியடையும்?

பஞ்சநதம்:—அந்த இடத்தில் நமக்குள் பூர்ணமான கருத்து உடன்பாடு நிலவுகிறது.

பிரகாசம்:—கலை என்றால் விளம்பரம் என்று சொல்லுகிறீர்களா?

கௌ:—அதைத்தான் நானும் கேட்கிறேன்.

மேஜர்:—விளம்பரம் என்ற வார்த்தை அங்கே கௌரவமான அர்த்தத்தைக் கொடுக்கவில்லை. சிற்பக் கலை கற்றவர்கள் தங்கள் கைத்திறமைகளைக் காட்டிக் கோயில்களில் சிலைகளை நிறுவவில்லை என்றால் அவற்றின் மேன்மையை நாம் இன்று உணர முடியுமா? கோவில்களில் தங்கள் கைத் திறமைகளைக் காட்டியிருக்கிறார்கள் என்பதற்காக அதை விளம்பரம் என்று சுலபமாகச் சொல்லிவிட முடியுமா?

கௌ:—அந்த இடத்தில் நீங்கள் சொல்வதை நான் அங்கீகரிக்கிறேன். சிற்பங்களெல்லாம் நிரந்தரமானவை. ஆனால் நாட்டியம் அப்படியல்லவே?

மேஜர்:—கலைகள் எல்லாமே, நிரந்தரந்தான். அவற்றைச் சிற்பம் வேறு, நாட்டியம் வேறு என்று பிரிக்க முடியாது. 'சித்திரமும் கைப் பழக்கம், செந்தமிழும் நாப் பழக்கம்' என்று சொல்லுவதில்லையா? எந்தக் கலையானாலும் அதற்குப் பயிற்சி இருந்துகொண்டே இருக்க வேண்டும். அப்பொழுதுதான் மெருகிட்டது போலச்

சோபிக்கும். அதற்காகத்தான் பாடசாலைகளோ, சிற்பிகளோ, நாட்டியக்காரர்களோ தங்கள் கலைகளை வளர்ப்பதற்காகப் பயிற்சி செய்துகொண்டே இருக்க வேண்டும்.

கௌ :—நீங்கள் அழகாய்த்தான் பேசுகிறீர்கள்.

மேஜர், ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு "நிஜமாகவா?" என்றான்.

பிரகாசம் :—உங்கள் வியாக்கியானம் அழகாய் இருக்கிறது. இல்லையா உதயம்?

உதயராணி "ஆமாம்" என்று சொல்லி, தலையசைத்தாள்.

பஞ்ச :-எடுத்துக்கொண்ட விஷயம் விடுபட்டுப் போயிற்றே. கடைசியில் உதயராணி அம்மா அரங்கேற்றத்தைப் பற்றி ஒன்றும் சொல்லாமல் கலையைப் பற்றி வெளுத்து வாங்கிவிட்டீர்கள்.

மேஜர் :-அட என்னப்பா உனக்கு, 'மேலே' வேலை செய்யவில்லையா? நான் சொல்லுகிற வியாக்கியானத்தை எல்லாரும் ஒப்புக்கொள்ளுவதென்றால் அரங்கேற்றத்தை அங்கீகரிப்பதாகத்தானே அர்த்தம். இது கூடப் புரியவில்லையா?

எல்லாரும் சிரித்தார்கள். பஞ்சநதம் "ஆமாம் ஆமாம். இப்பொழுதுதான் புரிந்தது" என்று சொல்லிக் கொண்டு அவனும் மற்றவர்களுடன் சேர்ந்து சிரித்தான்.

அரங்கேற்ற விழாவை உதயராணி விரும்பினாளா இல்லையா என்பது அவளுக்கே தெரியாது. புருஷனைத் திருப்தி செய்ய நாட்டியம் கற்றாள். நாட்டியக் கலையை எல்லாரும் பார்த்துக் களிக்கும்படி செய்ய வேண்டுமென்றும் உதயராணியின் நாட்டியம் ரொம்ப அபூர்வமாய் இருக்கிறதென்றும் நண்பர்கள் செல்லிவந்தபடியால் புகழ் வேண்டுமென்ற ஆசை ஒரு பக்கம் உதயராணிக்கு ஏற்பட்டது. ஆகவே அரங்கேற்றத்தை ஒரு பக்கம் வெறுப்போடும், மற்றொரு பக்கம் விருப்போடும் நோக்கினாள்.

அரங்கேற்றத்திற்காக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தபோது திடீரென்று ஒரு தடங்கல் எதிர்பாராமல் ஏற்பட்டது. பிரகாசத்தின் சகோதரி சித்திரலேகா இந்திர புரிக்கு வருவதாகக் கடிதம் போட்டிருந்தாள். இதைப் பார்த்ததும் பிரகாசத்திற்கும் உதயராணிக்கும் இருந்த உற்சாகமெல்லாம் அடங்கிப் போயிற்று. நாட்டியம், அரங்கேற்றம் இந்த விஷயங்களெல்லாம் சித்திரலேகாவிற்குப் பிடிக்காது. ஆகவே வேறு வழியில்லாமல் அரங்கேற்றத்தை ஒத்திவைக்க வேண்டியதாயிற்று. ஒத்தி வைத்த விஷயத்தைக் கேள்விப்பட்ட மேஜர் சுந்தரம் ரொம்ப ஆத்திரத்தோடு பிரகாசத்திற்கு டெலிபோன் செய்தான். பிரகாசம் விஷயத்தைச் சொன்னான். சித்ர லேகா கிராமத்தில் இருப்பதால் இந்தப் பட்டண நாகரிகங்களைச் சுலபமாக ஒப்புக்கொள்ள மாட்டாளென்றும், அவள் மனத்தை வருத்த, தனக்கு விருப்பமில்லை யென்றும் சொன்னான்.

மேஜர் :-கிராமம் என்றால் அவ்வளவு மோசமாகவா இக்காலத்திலும் இருக்கிறது ?

பிரகாசம் :—எத்தனையோ கிராமங்கள் அந்த நிலைமையில் இருக்கின்றன. நாம் என்ன செய்ய முடியும் ? அதிலும் என் சகோதரி இருப்பது ரொம்ப வைதிக கிராமம்.

மேஜர் :—வைதிக கிராமமென்றால் அதன் பெயரென்ன, சொல்லுங்கள்.

பிர :—பார்வதிபுரம்.

மேஜர் "பார்வதிபுரமா ?" என்று திருப்பிக் கேட்ட போது மேஜரின் முகம் கொஞ்சம் கலங்கியது.

பிர :—ஏன் உங்களுக்குத் தெரியுமா ?

மேஜர் சமாளித்துக்கொண்டு "கேள்விப்பட்டிருக்கிறேன், ரொம்ப வைதிகமென்று" என்றான்.

பிர :—உங்களுக்கே தெரியுமென்றால் நான் சொல்ல வேண்டியதில்லையே ?

மேஜர் சுந்தரம் திடீரென்று ரஜாவில் வெளியூர் போய்விட்டான். பிரகாசத்தின் சகோதரி சித்திரலேகா இந்திரபுரிக்கு வந்து சேர்ந்தாள். அந்த ஊரில் பார்க்க வேண்டிய காட்சிகளையெல்லாம் உதயராணி அழைத்துப் போய், காட்டினாள். ஒரு நாள் காலை கிளப் பக்கமாக அவர்கள் மோட்டார் வரும்போது கிளப் மைதானத்தில் ஆண்களும் பெண்களும் கூடியிருந்து பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவளுக்கு ஆச்சரியமாய் இருந்தது. "இதென்னடி அம்மா கூத்து?" என்று கேட்டாள். உதயராணி சிரிப்பை அடக்கிக்கொண்டு, "மாலை வேளைகளில் நேரப் போக்கிற்காகக் கூடும் கிளப்" என்றாள்.

சித்திரலேகா, "என்ன நேரப் போக்கடி இது? இப்படியா ஆணும் பெண்ணும் சேர்ந்து கூத்தடிப்பது? எங்கள் ஊரிலெல்லாம் இப்படிக் கிளப் வைத்துக்கொண்டா நேரத்தைப் போக்குகிறோம்?" என்று கேட்டாள்.

உதயராணி இதற்குப் பதில் சொல்லவில்லை.

சித்திரலேகா:—இதனால்தான் பட்டணத்துப் பையன்களுக்கு நியாயம், ஒழுங்கு தெரியாமல் போய்விடுகிறது போலிருக்கிறது. எல்லாரும் தங்கள் பெண்டாட்டிகள் பதுமைகள் மாதிரி இருந்தால்தான் வெளியில் மதிப்பு என்று நினைக்கிறார்கள். இந்த மாதிரி கிளப்புகளில் கூத்தடிப்பதற்கு அழகில்லாத பெண்டாட்டிகளைக் கூட்டிக்கொண்டுபோக அவமானமாய் அவர்களுக்கு இருக்கிறது போலிருக்கிறது. வீட்டுக்குள் அடங்கிக் கிடந்தால் இந்தத் தொல்லையெல்லாம் இல்லை யல்லவா?

உதயராணி:—அழகோ அழகில்லையோ கட்டின பெண்டாட்டியை எப்படியம்மா தள்ளி வைப்பார்கள்?

சித்:—உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான் போ. எங்கள் பார்வதிபுரத்திலே வனஜா என்று ஒரு பெண் இருக்கிறாள். எலுமிச்சம் பழம் மாதிரி இருப்பாள். மூக்கும் விழியும் எப்படியிருக்கும் தெரியுமா? உன்னைப் பிரகாசத்திற்குப் பார்ப்பதற்கு முன்னால் அவளைக் கல்யாணம் செய்யலாமா என்றுகூட நான் நினைத்தேன்.

அவ்வளவு அழகு! உனக்குப் பிரகாசத்தைக் கொடுத்து வைத்திருக்கும்போது அவளுக்கு எங்கே கிடைக்கப் போகிறது. அவள் அதிருஷ்டம் அவ்வளவுதான்.

அதோடு சித்திரலேகா பேச்சை விட்டுவிட்டாள்.

உதய :—என்னம்மா, வனஜாவைப் பற்றி ஏதோ சொல்ல ஆரம்பித்தீர்கள். அதை முடிக்க வில்லையே ?

சித் :—பார்த்தாயா, அதற்குள் மறந்து போயிற்று. அவ்வளவு அழகான அந்தப் பெண்ணுக்கு கெட்ட காலம் பாரு, திடீரென்று வைசூரி போட்டு ஒரு கண் போயிற்று. வைசூரி போட்டால் அவள் என்ன பண்ணு வாள்? அல்லது கண் போனதற்குத்தான் அவளா பொறுப்பு? கண் போயிற்றென்று அவளைப் புருஷன் தள்ளி வைத்துவிட்டான்.

உதயா :—புருஷன் மனிதத் தன்மையே இல்லாத வன் போல் இருக்கிறதே. காட்டு மிராண்டியாய் இருப்பான்.

சித் :—காட்டு மிராண்டிகளெல்லாம் இந்த நாகரிக மனிதர்களைவிட அதிகமான பிரியத்தோடு வாழுகிறார்கள். இவர்களுக்குத்தான் அழகு, அந்தஸ்து எல்லாம் வந்து கண்ணை மறைக்கின்றன. அவள் புருஷன் படியாதவ னல்ல. நன்கு படித்தவன். பட்டாளத்தில் நல்ல உத்தி யோகத்திலும் இருக்கிறானும்.

இதற்குள் அவர்கள் வீடுவந்து சேர்ந்துவிட்டபடி யால் அந்தப் பேச்சு அதோடு நின்றுபோயிற்று.

பஞ்சநதம் கிளப் பணத்தை எடுத்து யாருக்கோ கடன் கொடுத்தான். கடன் வாங்கியவர் சொன்னபடி திரும்பக் கொடுக்க வில்லை. கணக்கை ஆடிட்டர் தணிக்கை செய்யும்போது இதைக் கண்டு பிடித்து விட்டார். இரவுக்குள் பணத்தைக் கொண்டு வந்து விடுவதாகவும், வீட்டில் வைத்திருப்பதாக வும் பஞ்சநதம் சொன்னான். அதற்குத்தான் மேஜர் சுந்தரத்திடம் பணம் கேட்டிருந்தான். அவர்

கொடுத்த பணத்தை, பஞ்சநதம் கிளப்பில் சேர்த்துவிட்டான். பணத்தைச் சேர்த்ததும் ஆடிட்டரைப் பார்த்து, "உமக்கு மனிதரின் தராதரமே தெரியவில்லை" என்ருன்.

ஆடிட்டார்:—நான் என்னய்யா, செய்வேன், என் வேலையைப் பார்க்கிறவன்தானே!

பஞ்:—சரிதானய்யா நிறுத்தும். அந்த இமாலய இன்ஷூரன்ஸ் கம்பெனியில் பத்தாயிரம் ரூபாயை அந்தக் காரியதரிசி ஒரு வருஷம் வரையில் கையில் வைத்துப் புழங்கிக் கொண்டிருந்தானே! அந்தக் கம்பெனிக்கும் நீர்தானே ஆடிட்டர், அங்கே என்ன கிழித்துவிட்டீர்?

ஆடிட்டர்:—கையிருப்பில் இருக்கிறதென்று காஷியர் வவுச்சர் கொடுத்தார். அதற்குமேல் நான் என்னய்யா பண்ணுகிறது?

பஞ்ச:—இங்கேயும் கையிருப்பில் இருக்கிறதென்றுதான் காஷியர் சொன்ஞரே, நீர் ஏனய்யா அதை எண்ணிப் பார்க்க வேண்டுமென்று சொன்னீர்?

ஆடிட்டர்:—இதோ பாரும். உம் நன்மைக்காகத்தான் செய்தேன்.

பஞ்ச:—ஓஹோ! அது வேறே பேச்சா? என்னுடைய நன்மைக்காகவா?

ஆடி:—கொஞ்சம் கவனமாய்க் கேளும். உமக்குக் கிளப்பில் இருக்கிற அபரிமிதமான செல்வாக்கை நான் அறிவேன். இப்படி நான் நெருக்கினல் யாரிடமாவது வாங்கிக் கொடுத்து விடுவீரென்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். அந்தப்படியே நீர் பணத்தைக் கட்டியும் விட்டீர். இப்போது உம்மீது யார் என்ன குற்றம் சொல்ல முடியும்? கால்மேல் கால் போட்டுக்கொண்டு ஜம்மென்று இருக்கலாம். நான் நெருக்காமல் இருந்தால் கடன் இருந்துகொண்டே இருக்கும். உமக்கும் மனசு எப்பொழுதும் திக்கு திக்கென்றிருக்கும். என்ன, இப்பொழுது சொல்லும், நான் செய்தது உமது நன்மைக்காகத்தானே?

பஞ்சநதத்தின் முகம் கோபமாக இருப்பதுமட்டும் மாறவில்லை; மனம் மட்டும் அவர் சொல்லுவது சரி யென்று சொல்லியது. இச் சமயம் அங்கே வந்த கிளப் பையனைப் பார்த்து, "ஆடிட்டருக்கு ஒரு குளிர்ந்த பானம் கொண்டுவந்து கொடப்பா" என்று சொல்லிவிட்டு அந்த இடத்தைவிட்டு அகன்றான்.

ஒரு நாள் மாலை கிளப் தோட்டத்தில் கௌசல்யா மட்டும் தனித்து உட்கார்ந்திருந்தாள். பஞ்சநதம் அவள் பக்கத்தில் தானும் ஒரு நாற்காலியைப்போட்டு உட்கார்ந்துகொண்டு, "என்னம்மா திடீரென்று மேஜர் போய்விட்டாரே, ரொம்ப அவசர வேலையா?" என்று கேட்டான்.

"எனக்குக்கூடத் தெரியாது. 'அவசரமான வேலை யாக மதுரைக்குப் போகிறேன்' என்று ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டுப் போய் இருக்கிறார். அவ்வளவு அவசர வேலை என்ன என்பது தெரியவில்லை" என்றாள் கௌசல்யா.

பஞ்ச:—இன்று எங்கே பிரகாசத்தைக் காணவில்லை?

கௌ:—அவரைத்தான் எதிர் பார்த்துக்கொண் டிருக்கிறேன்.

பஞ்ச:—கொஞ்சம் அப்படியும் இப்படியுமா இருந்து கொள்ளுங்கள். உங்களுக்குத் தெரியாததா?

கௌ:—நீ சொல்லுவது தெரிகிறது. என்றாலும் என்னால் சகிக்க முடியவில்லை. பிரகாசத்திடம் எவ்வளவு தூரம் என் உள்ளம் பதிந்துபோய் இருக்கிறதென்பது உனக்குத் தெரியாது.

பஞ்ச:—அதெல்லாம் சரிதான்; என்றாலும் அவருக் கும் விவாகமாய்விட்டது. உதயராணியும் நல்ல பெண்.

கௌ:—நல்ல பெண்தான். என்றாலும் எனக்குரிய வரைப் பறிப்பதற்கு அவளுக்கு உரிமை கிடையாது.

பஞ்ச:—கல்யாணம் ஆகி விட்டபின்பு இனி என்ன செய்ய முடியும்? மேலும் மேஜர் சுந்தரம் உங்களை

விவாகம் செய்துகொள்ள நினைத்துக்கொண்டிருக்கிருர். இவை எல்லாவற்றையும் கெடுக்கிற மாதிரி காரியங்கள் நடக்கக் கூடாதல்லவா ?

கௌ:—மேஜர் சுந்தரம் ! அவருக்கு, காதலாவது கீதலாவது ? அவருக்கு அந்தஸ்திற்காக ஒரு அழகான பெண் வேண்டும். அவ்வளவுதான். எனக்குத்தான் அவரை விவாகம் செய்துகொள்ளப் பிரியம் என்ரு நினைக்கிறீர்கள் ?

இதற்குள் அங்கே பிரகாசம் வந்துவிட்டபடியால் அவர்கள் பேச்சு அதோடு நின்று போயிற்று.

மேஜர் சுந்தரம் எப்படித் திடீரென்று போனுனே அதேமாதிரி திடீர் என்று திரும்பினுன். வந்ததும் பஞ்ச நதத்திற்கு டெலிபோன் செய்து சித்திரலேகாவைப் பற்றி விசாரித்தான். சித்திரலேகா தன் ஊருக்குத் திரும்பி விட்டதாகக் கேள்விப்பட்டதும் அவனுக்கு மன நிம்மதி ஏற்பட்டது. அப்படியானுல் உதயராணியின் அரங்கேற்றத்தை நடத்திவிடலாமே என்று கேட்டான்.

பஞ்ச:—நீங்கள்தான் வந்து விட்டீர்களே. அதைப் பற்றிக் கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொள்ளுங்களேன்!

மேஜர்:—சரிதான். பார்க்கிறேன்.

மேஜர் சுந்தரம் நேராக உதயராணியின் வீட்டிற்குப்போனுன். அச் சமயம் பிரகாசம் காரியாலயத்திற்குப் போயிருப்பான் என்பது தெரியும். அதைத்தான் அவன் விரும்பினுன். பிரகாசம் வீட்டு வேலைக்காரியிடம், "அம்மாவைப் பார்க்க வேண்டுமென்று சொல்லு" என்று கூறி விட்டு ஹாலில் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்து சிகரெட் பற்றவைத்தான். வேலைக்காரி மெத்தையிலிருந்த உதயராணியிடம் சென்று மேஜர் வந்திருப்பதைக் கூறினுள்.

உதயராணி ஒரு நிமிஷம் திகைத்தாள். உடனே டெலிபோனை எடுத்துக் கௌசல்யாவைக் கூப்பிட்டாள். "ரொம்ப அவசரமான காரியம் கௌசல்யா, உன்னை

உடனே பார்க்க வேண்டும், வர முடியுமா ?" என்று கேட்டாள்.

" இதோ இரண்டு நிமிஷத்தில் வருகிறேன் " என்று கௌசல்யா பதில் சொன்னாள். பிறகு உதயராணி டெலிபோனைக் கீழே வைத்தாள்.

வேலைக்காரியைப் பார்த்து, "நீ அவர் இருக்குமிடமே போகவேண்டாம். இரண்டு நிமிஷத்தில் கௌசல்யா வந்துவிடுவாள். அப்புறம் அவராக எழுந்து போய் விடுவார் " என்று கூறினாள். வேலைக்காரி லேசாகச் சிரித்துக் கொண்டு, " நல்லது " என்றாள்.

கீழே சிறிது நேரத்திற் கெல்லாம் கௌசல்யாவின் பேச்சுக் கேட்டது. உதயராணியின் வீட்டில் மேஜர் சுந்தரத்தைப் பார்த்ததும் கௌசல்யாவுக்கு ஆச்சரியமாயிற்று. " ஹல்லோ ! மேஜர் எப்போ வந்தீர்கள் ? நீங்கள் வந்தது கூடத் தெரியாதே !" என்றாள்.

திடீரென்று கௌசல்யா அங்கு வந்ததைப் பார்த்ததும் மேஜர் திணறிப்போனான். அங்கே அப்படி நேரும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. " ஹல்லோ கௌசல்யா, காலையில்தான் வந்தேன். இப்போ உன் வீட்டுக்கு வருவதாகத்தான் இருந்தேன்."

கௌ:—ஓஹோ! என் வீடு என்று நினைத்து இங்கே வந்துவிட்டீர்கள் போலிருக்கிறது. அதனால்தான் உதயராணி டெலிபோன் செய்தாள் என்று நினைக்கிறேன்.

மேஜர்:—டெலிபோன் செய்தாளா ? இப்பவா ? ஏன் ?

கௌ:—வீடு தவறி உள்ளே வந்துவிட்டீர்களே. உங்களை அழைத்துப் போகவேண்டுமே என்பதற்காக டெலிபோன் செய்திருக்கலாம்.

மேஜர்:—இதென்ன இது ? இப்படியா என்னை அவமானப்படுத்துவது ? உதயராணி இப்படிச் செய்வாளென்று எதிர்பார்க்கவே இல்லையே.

கௌ:—அவள் செய்ததில் தவறு என்ன இருக்கிறது? நீங்கள் திரும்பி வந்ததை, எனக்குக் கூடச் சொல்லாமல் ரொம்ப அவசரமாக இங்கே வந்தீர்களே எதற்காக?

மேஜர்:—உன் வீட்டிற்கு வருகிற வழிதானே! அரங்கேற்றத்தைப் பற்றி விசாரித்துவிட்டு உன்னைப் பார்க்க வரலாமென்று நினைத்தேன். இம்மாதிரி என்னை அவமானப்படுத்த வேண்டாம். நான் போகிறேன்.

கௌ:—ரொம்ப ஆத்திரப்பட வேண்டாம். ரத்தக் கொதிப்பு ஏற்பட்டுவிடும்.

ஒன்றும் பதில் சொல்லாமல் மேஜர் எழுந்து போனான். அவன் வெளியே போகிறவரையில் அவனையே பார்த்துக்கொண்டு நின்ற கௌசல்யா அவன் மறைந்ததும் உள் பக்கம் திரும்பினாள். அங்கே உதய ராணி இவளைச் சந்தோஷத்தோடு பார்த்துக் கொண்டு நின்றாள். "நான் அழைத்தவுடன் நீ வந்ததற்காக வந்தனம்" என்றாள்.

கௌ:—இப்பொழுதுதான் புரிந்தது, நீ எதற்காக அழைத்தாய் என்பது.

உதயா:—அவர் இல்லாத சமயத்தில் என்னுடன் இவருக்கு என்ன பேச வேண்டியிருக்கிறது?

கௌ:—இந்த மேஜரின் சுபாவமே அதுதான் இவ்வளவுக்கும் நீதான் காரணம்.

உதயா:—நானா? எப்படியம்மா?

கௌ:—எதற்காக இந்தப் பரத நாட்டியமெல்லாம்? உன்னுடைய சுபாவம் ஒதுங்கிய சுபாவம். நாட்டியம், பாட்டு என்றால் மேஜர் மாதிரி உள்ள ஆசாமிகள் அதைச் சாக்கு வைத்துக் கொண்டு அடிக்கடி பேச வருவார்கள். என்னைப் போன்ற சுபாவமுள்ளவர்கள்தான் இவர்களை யெல்லாம் சமாளிக்க முடியும். கூச்சமுள்ளவர்களால் முடியாது. இவர்களைச் சமாளிப்பதென்றால் எப்பொழுதும் உனக்குப் பக்கத்தில் ஒரு துணை இருக்க வேண்டும்.

உதயராணி :—எனக்கு இஷ்டமில்லை தான் கௌசல்யா. அவருக்குத் திருப்தியாய் இருக்குமே என்று தான் நாட்டியம் கற்றுக் கொண்டேன்.

கௌ:—எனக்குப் புரிகிறது என்றாலும் உன் சுபாவத்திற்கு விரோதமான காரியத்தைச் செய்ய ஆரம்பித்தால் அனாவசியமான கஷ்டங்கள்தானே வந்து சேரும். பிரகாசத்தை நாட்டியத்தில் திருப்தி செய்து வைக்க நான்தான் இருக்கிறேனே? என்மீது உனக்குக் கோபமில்லையே !

உதயா இதற்குப் பதில் கூறத் திகைத்தாள் ; கடைசியில் சமாளித்துக் கொண்டு, "உன் மீது எனக்கு ஏனம்மா கோபம் ? கொஞ்சம் கூட கோபம் கிடையாது. என்றாலும் நீ விவாகம் செய்த பின்பு வேறு ஊர்களுக்குப் போனாலும் போகலாம். நான்தானே என் கணவருடன் எப்பொழுதும் இருக்க வேண்டியவள்" என்றாள்.

கௌ:—உதயராணி, இன்று உனக்கு உண்மையைச் சொல்லுகிறேன். நான் இருக்க வேண்டிய இடத்தில் நீ இருக்கிறாய். அதனால் எனக்குக் கோபமோ பொறாமையோ கிடையாது. நான் இனி யாரையும் விவாகம் செய்யப்போவது கிடையாது. விவாகம் செய்யப் போவதாக, சும்மா சொல்லிக் கொண்டிருக்கிறேன். பிரகாசம் எந்த ஊரில் இருக்கிறாரோ அங்கேதான் நானும் இருப்பேன். எனக்கு நீ செய்யவேண்டிய உதவியெல்லாம் ஒன்றே ஒன்றுதான். என்னால் கூடிய சேவையைப் பிரகாசத்திற்குச் செய்ய அனுமதி கொடு ; அவ்வளவு தான். பிரகாசம் உனக்குத்தான் சொந்தம். நான் கேட்பது சேவை ஒன்றுதான். செய்வாயா ?

இச்சமயம் கௌசல்யாவின் கண்களிலிருந்து மாலை மாலையாகக் கண்ணீர் வடிந்தது. உதயராணியின் மனம் உருகியது. அவள் கைகளைப் பற்றிக்கொண்டு, "வருத்தப் படாதே அம்மா, உன் பிரியப்படியே செய்கிறேன்" என்று சொல்லி அவளது கண்ணீரைத் துடைத்தாள்.

மேஜர் சுந்தரம் பிரகாசம் வீட்டைவிட்டு வெளியேறியதும் நேராகத் தன் வீட்டிற்குச் சென்று பிரகாசத்

திற்கு டெலிபோன் செய்தான். தன்னை அவமானப் படுத்தி விட்டதாக வருத்தப்பட்டுக் கொண்டான். பிர காசம் உதயராணிக்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அன்று மாலை வீட்டுக்கு வரும்படி அவனைக் கேட்டுக் கொண்டான்.

காரியாலயத்திலிருந்து பிரகாசம் வீட்டுக்கு வந்த தும் காபி சாப்பிட்ட பின்பு மெதுவாக இந்தப் பேச்சைப் பிரஸ்தாபித்தான்: " உதயராணி, மேஜர் சுந்தரம் நல்ல மனிதர். கண்யமானவர். தமாஷாகப் பேசுகிறவர். எல்லோருடனும் கலகலப்பாகப் பேச வேண்டும் என்கிற ஒரே ஆசைதான் அவரிடம் முக்கியமாக இருக்கிறது. அவரைப்பற்றி வேறு எந்தவிதமான புகாரும் இதுவரை ஏற்பட்டதில்லை. அப்படிப்பட்ட ஒருவரை நீ அவமதிக் கக் கூடாது'' என்றான் பிரகாசம்.

உதயா:—தனியாக இருந்ததால் எனக்குத் திடீ ரென்று பயம் ஏற்பட்டது. அதனால்தான் கௌசல்யா விற்கு டெலிபோன் செய்தேன். அவரை அவமதிக்க வேண்டும் என்ற நினைப்பில்லை.

பிர:—அநாவசியமாக ஏன் பயப்படுகிறாய்? நீ என்ன சின்ன குழந்தையா? மேலும் மேஜர் சுந்தரம் போன்ற அந்தஸ்திலுள்ளவர்கள் தவறுதலாய் நடக்கத் துணிவு கொள்ளுவார்களா? பயப்படுவதற்கும் ஒரு வரையறை இருக்கவேண்டும். நிதானத்தை இழந்து பயப் பிராந்தி கொள்வது நல்லதல்ல.

உதயா:—நீங்கள் சொல்லுவது சரிதான் என்று எனக்குப் படுகிறது. சில சமயங்களில் காரணம் இல் லாத பயம் தோன்றுகிறது. காரணமில்லை என்று தெரிந் தாலும், அந்தப் பயத்தை அடக்க முடியவில்லை.

ஒரு நாள் காலையில் பஞ்சநதம் தன் வீட்டில் சோபா வில் சாய்ந்துகொண்டு ஒரு கையில் காப்பிக் கோப் பையை வைத்துக்கொண்டு மற்றொரு கையில் பத்திரி கையைப் பிரித்து ரஸமாக ஒரு சினிமா நட்சத்திரத்தைப் பற்றிய கதையைப் படித்துக் கொண்டிருந்தான்.

'வாழ்க்கை ரகசியம்' என்ற அந்தப் பத்திரிகையில் யாராவது சிலரைப் பற்றிய ரகசியங்கள் பிரசுரமாய்க் கொண்டிருக்கும். பத்திரிகை விலை இரண்டணுதான். ஆனால் நாலணுவுக்குக் குறைந்து பிளாக் மார்க்கெட்டில் பத்திரிகை கிடைக்காது. அவ்வளவு கிராக்கி.

பிரபலஸ்தர்கள் பலர் தங்களைப்பற்றி ஏதாவது எழுதி இருக்கிறதா என்று தெரிந்து கொள்ளுவதற்காக எப்படியாவது நாலணு விலை கொடுத்தாவது பத்திரிகையை வாங்கிப் படித்து விடுவார்கள். ஆனால் ஒருவராவது அதைப் படித்ததாக ஒப்புக்கொள்வது இல்லை. பிறரைப்பற்றி ஆபாசமாக எழுதி இருக்கும் விஷயங்களைப் படித்து ஆனந்தமடையாதவர் ஒருவரும் கிடையாது. மனதிற்குள் சந்தோஷப் பட்டுக்கொண்டு வெளியில், 'அடடா, என்ன அக்கிரமமாய் எழுதியிருக்கிறான்' என்று சொல்லத் தவறுவதுமில்லை. அந்த 'வாழ்க்கை ரகசிய'த்தைத்தான் பஞ்சநதம் ரொம்ப மகிழ்ச்சியுடன் படித்துக் கொண்டிருந்தான்.

பேர் பெற்ற சினிமா நட்சத்திரம் சந்திரபிம்பம் என்பவள் ஒரு நாள் இரவு கடலில் ஸ்நானம் செய்த போது அரை நிர்வாணமாய் உடை உடுத்தி இருந்தாளாம். இது உண்மையா இல்லையா என்று அப் பத்திரிகையில் கேள்வி போட்டிருந்தது. அன்று அமாவாசை இருட்டாய் இருந்ததால், அவள் அரை நிர்வாண ஆடை அணிந்திருந்தது வெளியில் யாருக்கும் தெரியாமல் போயிற்றும். அன்று பௌர்ணமியாக இருந்திருந்தால், நிலைமை எவ்வளவு மோசமாய் இருந்திருக்கும் என்ற கேள்வியையும் அப்பத்திரிகை கேட்டிருந்தது. இந்தக் கேள்வியைப் படித்ததும் பஞ்சநதத்திற்குச் சிரிப்பு தாங்கமுடியவில்லை. "ஹா...ஹா...ஹா" என்று சிரித்தான். அச்சமயம் அவன் நண்பன் ராஜப்பா அங்கே வந்தான். "என்ன பலமாகச் சிரிக்கிறீர்களே? அப்படிப்பட்ட விஷயம் என்ன?" என்று கேட்டான்.

"என்னப்பா இந்த வாரம் வந்த 'வாழ்க்கை ரகசி' யத்தைப் படிக்கவில்லையா?" என்றான் பஞ்சநதம்.

ராஜப்பா:—அதை யாருங்க படிப்பாங்க. ஆபாஸக் களஞ்சியம்.

பஞ்சநதம்:—சந்திர பிம்பத்தைப்பற்றி எழுதி இருக்கிருன்; இதைப் படி.

ராஜப்பா:-சந்திரபிம்பம் சமாசாரமா, அதைப் படித்து விட்டேன்.

பஞ்ச:—'அதைப் படிக்கவே மாட்டேன். ஆபாஸக் களஞ்சியம்' என்றெல்லாம் சொன்னுயே?

ராஜ:—நான் காசு கொடுத்து வாங்கிப் படிக்கிற வழக்கமில்லே. நம்ம வீட்டில் யாராவது வாங்கிவந்தால் படிக்கிறதுதான்.

பஞ்ச:—ஓஹோ! நீ வாங்கினுல் கேவலம் என்று நினைத்து வேறு ஆள்மூலம் வாங்கிவர ஏற்பாடு செய் திருக்கிருயாக்கும்? இந்தப் பித்தலாட்டம்தான் எனக்குப் பிடிக்காது. செய்கிறதைப் பகிரங்கமாகச் செய்யேன்?

ராஜ:—அதிருக்கட்டுங்க. சந்திரபிம்பம் சமுத்திர ஸ்நானம் செய்தது எப்படி இவனுக்குத் தெரிந்தது? இவன் ஒற்றர்கள் எப்படி இதையெல்லாம் கண்டுபிடித் தார்கள் என்பதுதான் ஆச்சரியமாக இருக்கிறது.

இந்தப் பேச்சைக் கேட்டுக்கொண்டே வந்த மேஜர் சுந்தரம், "இதென்னப்பா பெரிய ஆச்சர்யம்? மற்ரெரு வரைப்பற்றிக் கேவலமாகப் பேசுவதைக் கேட்க ஒவ் வொருவருக்குமே அந்தரங்கத்தில் ஆனந்தம். இது மனித சுபாவம்" என்ருன்.

ராஜ:—அது சரிதானுங்க. இந்தப் பத்திரிகையை எல்லாரும் வாங்கிப் படிக்கிறதற்கு நீங்கள் சொல்லு கிறதுதான் காரணமாய் இருக்கவேண்டும். ஆனுல் அவனுக்கு இந்த விஷயங்களெல்லாம் எப்படிக் கிடைக்கு துங்க?

மேஜர்:—பொறுடாப்பா பொறு. நான் சொன்னதை முடிப்பதற்குள் நீ பிரசங்கத்திற்குக் கிளம்பிவிட்டாயே. பிறரைப் பற்றித் தூஷணையாகச் சொல்லுவதைக் கேட்

கப் பிரியப்படுவதே மனித சுபாவம் என்று சொன்னேன் அல்லவா? ஒருவரிடம் வேலையில் இருப்பவர்கள் தங்கள் எஜமானர் எஜமானிகளைப்பற்றி யாராவது திட்டுவதைக் கேட்க இதே சுபாவம் தூண்டுகிறது. தெரிகிறதா? இந்தச் சுபாவம் அதிகமாய் வளர்ந்துவிட்டால் உடனே எஜமானர் எஜமானிகளைப்பற்றி மொட்டைக் கடிதமாக அந்தப் பத்திரிகைக்கு அனுப்பிவிடுகிறார்கள். அவன் பிரசுரித்து விடுகிறான்.

ராஜ:—பொய்யாக இருந்தாலும் பிரசுரிப்பானா?

மேஜர்:—அதைப்பற்றி அவனுக்கென்ன கவலை? இந்தச் சந்திர பிம்பத்தின் விஷயத்தை எடுத்துக்கொள்வோமே. அவன் குறிப்பிட்ட தினத்தில் அவள் சமுத்திரக் கரைக்கே போகாமல் இருந்தாலும் இருந்திருக்கலாம்.

ராஜ:—அட அநியாயமே! அப்படியும்கூட இருக்குமா?

மேஜர்:—இதில் என்னப்பா அநியாயம்? அதில் எழுதியிருப்பதைப் படிக்க உனக்குச் சந்தோஷமாய் இருக்கிறது. உனக்கு வேண்டியது அவ்வளவுதானே? அது பொய்யா மெய்யா என்று விசாரிக்க வேண்டுமே என்ற எண்ணம் எப்பொழுதாவது உனக்குத் தோன்றியது உண்டா?

ராஜ:—இல்லேங்க.

மேஜர்:—தோன்றாதப்பா, தோன்றாது. நல்ல விஷயமாக யாராவது சொன்னால் அதில் உனக்கு நம்பிக்கை இருக்காது. உண்மையா, பொய்யா என்று கண்டவர்களிடம் எல்லாம் விசாரிப்பாய். தூஷணையான விஷயம் என்றால் உடனே நம்பி விடுவாய். அது உண்மையா என்று விசாரிக்க வேண்டுமே என்ற நினைப்பே உனக்கு வராது.

ராஜ:—என்னங்க அவ்வளவு கேவலமாய் என்னைச் சொல்லுறீங்க.

மேஜர்:—உன்னைச் சொல்லவில்லையப்பா. மனித சுபாவம் அப்படிப்பட்டதென்று சொல்லுகிறேன்.

பஞ்சநதம்:—இந்தப் பத்திரிகை பதினயிரக் கணக்காகச் செலவழிகிறதாமே, ரொம்ப ஆச்சரியம்.

ராஜப்பா:—இவ்வளவு ஏராளமாகச் செலவழிகிறதே. இதற்கு என்ன சொல்லுறீங்க ?

மேஜர்:—மனித சுபாவம் எவ்வளவு கேவலமான நிலைக்குப் போயிருக்கிறது என்பதைத்தான் அது காட்டுகிறது.

ராஜப்பா:—நல்ல லாபமுங்க. வேறு எந்தத் தொழிலிலும் இவ்வளவு லாபமில்லீங்க. நான்கூட இந்த மாதிரி ஒரு பத்திரிகையை ஆரம்பிக்கலாம் என்று நினைக்கிறேன்......

மேஜர்:—இதில் லாபம் கிடைப்பதில் அதிசயம் ஒன்றுமில்லை. மனிதருக்குத் தேவை எது என்பதைக் கண்டுபிடித்து அதற்கு வேண்டியதைத் தயாரித்துக் கொடுப்பதுதான் தொழில் வெற்றியின் ரகசியம் அப்பா. பிறரைப் பற்றிக் கேவலமாக எழுதப்படுவதைப் படிக்க வேண்டும் என்ற ஆசை மனிதருக்கு இருக்கிறவரையில் அம்மாதிரிப் பத்திரிகைகளுக்குக் கிராக்கி இருந்து கொண்டுதான் இருக்கும்.

இச்சமயம் டெலிபோன் மணி அடித்தது. பஞ்சநதத்தின் மகன் டெலிபோனைக் கையில் எடுத்துவைத்துக் கொண்டு, "என்னப்பா, இருக்கிருய் என்று சொல்லவா இல்லையென்று சொல்லவா" என்று கேட்டான். "யார் என்று முதலில் கேளடா. ஆளைத் தெரிந்து கொண்டல்லவா இருக்கிருர், இல்லை என்று சொல்ல வேண்டும்" என்ருர் பஞ்சநதம். இவ்வளவு சம்பாஷணைகளும் டெலிபோனில் கூப்பிடுபவருக்கு நன்ருகக் கேட்டது. பையன் "ஹல்லோ ஹல்லோ, யார் பேசுகிறது?" என்று டெலிபோனில் பேசினன்.

பேசுகிறவர்:—நீங்கள் பேசிக்கொண்டிருந்த தெல் லாம் நல்லாக் கேட்டது. மிஸ்டர் பஞ்சநதத்தைக் கூப்பிடு.

பையன்:—உன்னைக் கூப்பிடுகிறார் அப்பா.

பஞ்சநதம்:—அட முட்டாப் பயலே, யார் என்று கேளடா.

பையன்:—'நீங்க அங்கே பேசிக்கிட்டதையல்லாம் நல்லாக் கேட்டுக்கிட்டேன்; மிஸ்டர் பஞ்சநதத்தைக் கூப்பிடு' என்று சொல்கிறார் அப்பா.

பஞ்சநதத்திற்குக் கோபம் பிரமாதமாக வந்தது. என்றாலும் அடக்கிக்கொண்டு டெலிபோன் பக்கத்தில் போய் அதை எடுத்துக்கொண்டு "ஹலோ" என்றார்.

பேசுகிறவர்:—யார், மிஸ்டர் பஞ்சநதமா? இங்கே 'வாழ்க்கை ரகசியம்' ஆசிரியர் பேசுகிறேன்.

பஞ்சநதம்: "யாரு? ஓஹோ, நமஸ்காரம், நமஸ் காரம், என்ன ஸார், ஏது இவ்வளவு தயவு என்மீது? உங்களைப் பார்க்க வரவேண்டுமென்று நினைத்துக் கொண்டே இருக்கிறேன் ஸார். உங்கள் பத்திரிகை ரொம்பப் பிரமாதம். எங்கு போனாலும் அதைபற்றித் தான் பேச்சாக இருக்கிறது. இப்பொழுதுதான் சந்திர பிம்பத்தின் கடற்கரை ஸ்நானத்தைப் பற்றி, படித்துக் கொண்டிருந்தேன். ஏன் ஸார், எப்படி ஸார் உங் களுக்கு இந்த விஷயங்களெல்லாம் கிடைக்கின்றன? ஸி. ஐ டி. டிபார்ட்மெண்டெல்லாம் உங்களிடம் பிச்சை வாங்கவேண்டும் போலிருக்கிறதே" என்று மூச்சுவிடா மல் — பதிலை எதிர்பாராமல் பேசிக்கொண்டே போனார்.

டெலிபோனில் பேசியவருக்கு பொறுமை கடந்து போய்விட்டபடியால் பேச்சின் குறுக்கே புகுந்து, "ரொம்ப சந்தோஷம் ஸார். உங்கள் கிளப்பிலே உங்களுக்கும் ஆடிட்டருக்கும் ஏதோ சண்டையாமே உண்மையா?" என்று கேட்டார். பஞ்சநதத்தின் முகபாவம் சட் டென்று மாறியது. அங்கு இருக்கிறவர்களுக்கும் விஷ யம் தெரியக்கூடாது என்று நினைத்து, "நீங்கள் எத்தனை

மணிவரையில் ஆபீஸில் இருப்பீர்கள்?'' என்று கேட்டார்.

ஆசிரியர்:—மாலை ஐந்து மணிவரை இருப்பேன்.

பஞ்சநதம், "அதற்குள் உங்களை வந்து பார்க்கிறேன். நமஸ்காரம்'' என்று சொல்லி டெலிபோனைக் கீழே வைத்துவிட்டு அசட்டுச் சிரிப்போடு சோபாவில் வந்து உட்கார்ந்தான்.

ராஜப்பா:—என்னங்க உங்களுக்கு ரொம்ப வேண்டியவர்தான்னு சொல்லுங்க.

மேஜர், " அட இவருக்குத் தெரியாத ஆள் இந்த ஊரில் யாரப்பா இருக்கிறார்கள்?'' என்று சொல்லிவிட்டு, பஞ்சநதத்தைப் பார்த்து, "என்ன விஷயம்? எதற்காக அவன் ஆபீஸுக்கு போகிறாய்?'' என்று கேட்டான்.

பஞ்ச:—வேறு விஷயம் ஒன்றுமில்லை. இதுவரை ஒரு பத்துத் தடவை இருக்கும். அவனைப் பார்க்கவேண்டுமென்று டெலிபோன் செய்துகொண்டிருக்கிறான்.

மேஜர்: "என்னப்பா அவ்வளவு சிநேகம் வந்துவிட்டது? சரிதான் போய்வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

ஒரு நாள் உதயராணிக்கு அவன் சகோதரன் குமரப்பாவிடமிருந்து கடிதம் வந்தது. அவன் செய்துவந்த வர்த்தகப் பொருள்கள் விலை திடீரென்று குறைந்துவிட்டதாம். பாங்கிக்கு ஒரு வாரத்திற்குள் பத்தாயிரம் ரூபாய் கட்ட வேண்டுமாம். கட்டாவிட்டால் பாங்கிக்காரர்கள் சரக்குகளை ஏலத்தில் போட்டால் ஒன்றுக்குப் பாதி விலை கூட வராதாம். அதோடு அவன் வியாபாரமும் சொத்துக்களும் போய்விடுமாம். அதனால் எப்படியாவது பத்தாயிரம் ரூபாய் உடனே வேண்டுமாம். அவ்வளவு பணம் பிரகாசத்திடம் இல்லையென்பது தனக்குத் தெரியுமென்றும், மேஜர் சுந்தரம் ஒருவர்தான் இச் சமயம் உதவி செய்யும் சக்தி உடையவரென்றும் அவருக்குக்

கடிதம். எழுதியிருப்பதாகவும், பிரகாசமும் அவரிடம் சொல்ல வேண்டுமென்றும் எழுதியிருந்தான்.

உதயராணி கடிதத்தைப் பிரகாசத்திடம் காட்டினுள். திடீரென்று குமரப்பாவுக்கு ஏற்பட்ட இந்தக் கஷ்டத்தைக் கண்டு பிரகாசம் மிகுந்த வருத்தமுற்ருன். உதயராணி அதற்குமேல் வருத்தமுற்ருள். உதயராணி, என்ன கேட்டாலும் இல்லையென்று சொல்லாமல் வாங்கிக் கொடுத்துவந்த குமரப்பாவுக்கு இம்மாதிரிக் கஷ்டம் வந்துவிட்டதே என்று வருந்தினுள். பஞ்சநதத்தை விட்டு மேஜர் சுந்தரத்திடம் பேசவேண்டும் என்று உதயராணி யோசனை சொன்னுள். "நானும் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்" என்ருன் பிரகாசம்.

இரண்டு நாட்களில் ஒரு மொட்டைக் காகிதம் உதயராணிக்குக் கிடைத்தது. பிரகாசமும் கௌசல்யாவும் கிளப்பில் அடிக்கடி கும்மாளம் அடிப்பதாகவும் இதை உடனே பிரகாசம் நிறுத்தாவிட்டால், 'வாழ்க்கை ரகசியம்' பத்திரிகைக்கு அதைத் தெரிவித்துப் பிரசுரம் செய்யப் போவதாகவும் அக்கடிதத்தில் எழுதியிருந்தது.

உதயராணிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. 'கிளப் வாழ்க்கையில் ஆண்களும் பெண்களும் பழக வேண்டும் என்று ஒரு பக்கம் சொல்லுகிருர்கள். மற்ருெரு பக்கம் பழகுகிறவர்களைக் குற்றம் சொல்லி இம்மாதிரி மொட்டைக் கடிதம் வருகிறது. இது என்ன உலகமடி? இப்படிச் செய்தாலும் குற்றம், அப்படிச் செய்தாலும் குற்றம்' என்று முணுமுணுத்துக் கொண்டாள்.

பிரகாசத்திடம் கடிதத்தைக் காட்டலாமா, வேண்டாமா என்பதை அப்புறம் யோசனை செய்து முடிவு செய்து கொள்ளலாமென்று நினைத்தாள்.

அன்று மாலை கிளப்பில் மேஜர் சுந்தரத்தைச் சந்தித்த பஞ்சநதம், "இனிமேல் பிரகாசம் கௌசல்யாவைச் சந்திக்கவே மாட்டான். பாருங்க" என்ருன்.

மேஜர் :—இதென்ன பெரிய புதிராய் இருக்கிறதே, என்ன செய்தாய்?

பஞ்ச :—அதுதான் சர்வரோக நிவாரணி 'வாழ்க்கை ரகசியம்' இருக்கிறதல்லவா? அதைச் சுட்டிக் காட்டி ஒரு மொட்டைக் கடிதத்தைத் தட்டி விட்டிருக்கிறேன்.

மேஜர் :—சே, அப்படியெல்லாம் செய்யக்கூடாது. பாவம்! உதயராணிக்கு அநாவசியமாகக் கஷ்டத்தைக் கொடுத்துவிட்டாய்.

பஞ்ச :—என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள் மேஜர்? கௌசல்யாவை நீங்கள் விவாகம் செய்து கொள்ள வேண்டாமா?

மேஜர் :—விவாகம்? ஹூம், விவாகம் என்கிற பேச்சே நம்மிடம் கிடையாதப்பா.

பஞ்ச :—அதென்ன? நீங்கள் விவாகம் செய்து கொள்ளப் போகிறீர்கள் என்றல்லவா நினைத்துக்கொண்டிருக்கிறேன்.

மேஜர் :- விவாகம், என்னப்பா விவாகம்? உல்லாசமாய் மாலை நேரங்களில் பேசிக் கொண்டிருப்பதுதான் விவாகத்தினால் ஏற்படும் முக்கியமான பலன். அந்தப் பலன் விவாகம் செய்யாமலே கிளப்பில் கிடைக்கிறதே?

பஞ்ச:- உங்கள் விவாதங்களே ஒரு தினுசாய்த்தான் இருக்கின்றன.

மேஜர் :—கேளப்பா பஞ்சநதம்! கௌசல்யாவுக்குப் பிரகாசத்தின் மீது காதல் உண்டு என்பது எனக்குத் தெரியும். அதை யாராலும் மாற்ற முடியாது. பிரகாசமோ காதல் கீதல் விஷயங்களெல்லாம் ஒன்றும் தெரியாத ஒரு அப்பாவி. ஆனால் நல்லவன். உதயராணி கள்ளங் கபடமற்ற ஒரு பெண். எனவே அந்தக் குடும்பத்தில் குழப்பம் ஏற்படுகிற மாதிரி எதையும் நான் செய்ய மாட்டேன்.

பஞ்ச :—என்ன மேஜர், நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்?

மேஜர் :—நான்தான் பேசுகிறேன். கைகுலுக்குகிறதனாலேயும் சிரித்துச் சிரித்துப் பேசுவதனாலேயும்

அடிக்கடி சந்திப்பதனுலேயும், காதல் ஏற்பட்டு விடு மென்ரு நினைக்கிருய்? அப்படியானுல் விவாகமான அத்தனை புருஷன் மனைவியர்களுக்குள் காதல் ஏற்பட் டிருக்க வேண்டுமே! அவர்களுக்குள் ஏன் ஏற்படவில்லை? காதலுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. கௌசல்யாவை நான் விவாகம் செய்தாலும் அவள் காதல் என்னவோ பிரகாசத்திடம்தான் இருக்கும். அதை யாராலும் மாற்ற முடியாது. அதை நான் அறிந்து கொண்டேன். அப் பேர்ப்பட்ட பெண்ணை வற்புறுத்தவோ கெடுக்கவோ நான் ஒருகாலும் சம்மதிக்கமாட்டேன். எனக்கு வேண் டியதெல்லாம் என்னுடன் பழகுவதற்கும் ஆசை கொண்ட சில பெண்கள் இருக்கிருர்கள் என்ற ஒரே திருப்திதான்.

பஞ்ச :—மேஜர், மேஜர், நீங்கள் சொன்னதைக் கேட்ட பிறகு நான் மொட்டைக் கடிதம் எழுதியது தவறு என்று நினைக்கிறேன். இப்பொழுது என்ன செய்யலாம் மேஜர்?

மேஜர் :—(ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே) அதை நான் பார்த்துக் கொள்ளுகிறேன். நீ கவலைப்படாதே.

பஞ்ச :—குமரப்பாவைப் பற்றிச் சொன்ன விஷயம் ஞாபகம் இருக்குமே?

மேஜர் :—எல்லாம் ஞாபகம் இருக்கிறது. நான் போய் வருகிறேன்.

மேஜர் சுந்தரம் நேராகப் பிரகாசம் வீட்டுக்கு வந் தான். உதயராணி கௌசல்யாவுக்கு டெலிபோன் செய்யவில்லை. அவளே வந்து முகமலர்ந்து வரவேற்று உட்காரச் சொன்னுள்.

மேஜர் :—உதயராணி, உன்னிடம் ரகசியமாக ஒரு விஷயம் பேச வேண்டும், பக்கத்தில் வா.

உதயராணிக்கு 'பக்' என்றது. என்ருலும் சமாளித் துக்கொண்டு கலவர முகத்தோடு பக்கத்தில் வந்து நின்ருள்.

மேஜர், "பயப்படாதே. சும்மா இப்படி உட்கார். என்னைப்பற்றி உனக்கு எவ்விதமான பயமும் வேண்டிய தில்லை" என்று சொல்லி, அவள் கையைப்பற்றிப் பக்கத் தில் உட்கார வைத்து அவளுடைய பிரமிப்பு தீருமுன்பு அவள் காதோடு, "உனக்கு வந்த மொட்டைக் கடிதத் தைப்பற்றி எனக்குத் தெரியும். அதை எழுதினவனையும் எனக்குத் தெரியும். இப்பொழுதுதான் அவனைக் கண்டு பிடித்துவிட்டு வந்தேன். அவன் யாரென்று கேட்காதே. காகிதத்தைக் கிழித்தெறிந்துவிட்டு நிம்மதியாய் இரு. பிரகாசத்திடம் சொல்ல வேண்டாம். அவ்வளவுதான் விஷயம். நான் போய் வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய்விட்டான். தன் கையைப் பற்றியதால் ஏற்பட்ட பிரமிப்பு நீங்கி உதயராணி பார்க்கு முன்பு மேஜர் போய்விட்டான். அது மற்ரெரு பிரமிப்பையே உதயராணிக்குக் கொடுத்தது.

'மேஜர் சுந்தரம் இவ்வளவு நல்லவரா?' என்ற கேள்வி அவள் மனத்தில் அடிக்கடி தோன்றிக்கொண் டிருந்தது.

பஞ்சநதத்திற்கு மேஜர் சுந்தரத்தின் போக்கு புரியவு மில்லை; பிடிக்கவுமில்லை. கௌசல்யா சந்தோஷமாகப் பிரகாசத்தோடு பேசிக்கொண்டிருப்பதும் அவனுக்குப் பிடிக்கவில்லை. கௌசல்யாவின் சந்தோஷம் அவனுக் குப் பொருமையைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தது. இவ்வளவு அழகும், படிப்பும், புத்தியுமுள்ள கௌசல்யா வுக்கு ஒரு குறையையும் காணவில்லையே என்றுதான் அவனுக்கு வருத்தம். மேஜர் சுந்தரமும் கௌசல்யாவை விவாகம் செய்வதாயில்லை. ஆகவே கௌசல்யா தன் இஷ்டம்போல் இருக்க முடியும் என்று ஏற்படுகிறது. சகல பாக்கியங்களுடனும் அவள் இருப்பது பஞ்சநதத் திற்குச் சகிக்க முடியாததாய் இருந்தது. பிறர் கஷ்டப் பட்டால்தானே தங்கள் அநுதாபங்களைக் காட்ட முடியும்? அம்மாதிரி காட்டச் சந்தர்ப்பமில்லாமல் போனுல் எப்படித் தங்கள் நல்லெண்ணத்தை வெளிப்படுத்த முடி யும்? அதனுல் பஞ்சநதம் கோபமடைந்தான். தன் னுடைய கோபத்திற்குக் காரணமான மேஜருக்கும் புத்தி

புகட்ட வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. அதன் பலனுக, பிரகாசத்திற்கு ஒரு மொட்டைக் கடிதம் அனுப்பினுன்.

பிரகாசமும் அவன் நண்பர்களும் சேர்ந்து உட்கார்ந்து எடுத்த படம் ஒன்றை அவன் சகோதரி சித்திரலேகாவுக்கு அனுப்பியிருந்தான். படத்தின் கீழே பெயர்களும் எழுதப்பட்டிருந்தன.

ஒரு நாள் வனஜா அவள் வீட்டிற்கு வந்திருந்த போது இந்தப் படத்தைச் சித்ரலேகா காட்டினுள். வனஜா சந்தோஷமாகப் பார்த்துக் கொண்டிருந்தபோது திடீரென்று அவள் முகம் சுருங்கிற்று. இதைக் கவனித்த சித்ரலேகா, "ஏனம்மா, திடீரென்று உன் முகம் கோணுகிறது? உனக்குத் தெரிந்தவர்கள் யாராவது படத்தில் இருக்கிறுர்களோ?" என்று கேட்டாள்.

வனஜா பதில் சொல்லவில்லை. சித்ரலேகா மீண்டும் வற்புறுத்தவே அந்தப் படத்தில் ராணுவ உடையில் இருந்த ஒருவனைக் காட்டினுள். ராணுவ உடையைப் பார்த்ததும் சித்ரலேகா, "இவர் பட்டாளத்தைச் சேர்ந்தவர் போலல்லவா இருக்கிறுர்?" என்று சொல்லும் போதே திடீரென்று அவளுக்குக் காரணம் புலப்படவே, "இவர்தான் உன்...?" என்று கேட்டாள்.

வனஜா கண்களில் நீர் நிறைந்திருக்க அதைத் துடைத்துக்கொண்டு தலையை அசைத்தாள். சித்திரலேகா, "அடப் பாவமே, நான் இந்திரபுரிக்குப் போயிருந்த போது எனக்குத் தெரியாமல் போயிற்றே" என்று சொன்னவள் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள்போல, சந்தோஷமடைந்து, "வருத்தப் படாதே வனஜா, உனக்கு நல்லகாலம் வந்துவிட்டது. உன் கணவர் பிரகாசத்திற்கு நண்பர் என்பது இப்பொழுது தெரிந்துபோய் விட்டது. பிரகாசத்தைக் கொண்டு அவரைத் திருப்பிவிடலாம். நிச்சயம்" என்று வனஜாவுக்கு ஆறுதல் சொன்னுள்.

மாலை வேளைகளில் உதயராணி கிளப்புக்குப் போவதில்லை. ஆனுல் கிளப்புக்குப் போகக்கூடாது என்ற

அவளுடைய பழைய அபிப்பிராயம் ரொம்ப மாறிவிட்டது. பிரகாசம் வற்புறுத்திஞல் போகக்கூடிய நிலைமையில்தான் இருந்தாள். என்ருலும் பிரகாசம் வற்புறுத்துவதில்லை. அதனுல் மாலை வேளைகளில் நேரம் போவது கஷ்டமாய் இருந்தது. அதனுல் பெரிய கண்ணுடி முன்பு நின்றுகொண்டு இடையிடையே நாட்டிய ஒத்திகை செய்து நேரத்தைக் கடத்தி வந்தாள்.

ஒரு நாள் அப்படிப் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த போது திடீரென்று மேஜர் சுந்தரம் வந்துவிட்டான். உதயாவுக்கு வெட்கமாய் இருந்தது. மேஜர் அதைக் கவனிக்காமலேயே, " நாட்டியம் வெகு ஜோராய் இருக்கிறது. உதயா, உன் கையைக் கொடு. உனக்கு ஒரு நல்ல சமாசாரம் சொல்லுகிறேன் " என்று கையை நீட்டிஞன்.

மேஜரின் கையைக் குலுக்குவதில் உதயாவுக்கு முன்பு இருந்த வெட்கமோ ஆட்சேபமோ அவ்வளவில்லை. அதனுல் மெதுவாகக் கையை நீட்டிஞள். மேஜர் தனது இரண்டு கைகளால் அவள் கையைப் பற்றிக் குலுக்கிக்கொண்டு, "உதயா, உன் சகோதரருக்கு முன்பே பணம் அனுப்பி விட்டேன் " என்ருன்.

உதயாவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தன் கையை விடுவித்துக் கொள்ளாமலேயே, " எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? நான் எப்படி உங்களின் உதவிக்கு நன்றி காட்டப் போகிறேன் ?" என்ருள்.

மேஜர் :—நீ நன்றி காட்ட வேண்டிய அவசியமே இல்லை. உனக்கு ஏதோ ஒரு சிறு உதவி செய்ய எனக்குச் சந்தர்ப்பம் கொடுத்தாயே, அதற்காக நான்தான் உனக்கு நன்றி செலுத்த வேண்டும். நீ எவ்வளவு நல்லவள் என்பது உனக்குத் தெரியாது.

இந்தப் புகழ்ச்சியைக் கேட்டு உதயா மகிழ்ச்சி அடைந்தாள். மேஜருக்குச் சிற்றுண்டி கொடுத்து உபசாரம் செய்தாள். அன்றிரவு பிரகாசத்திடம் இந்த விஷயத்தைச் சொல்லி, " உண்மையிலேயே மேஜர் ரொம்ப நல்லவர் என்று தோன்றுகிறது " என்று கூறிஞள்.

பிரகாசம் சிரித்துக்கொண்டே, "இதைக் கண்டுபிடிக்க உனக்கு இவ்வளவு காலமாயிற்று ; பாதகமில்லை. நீ மாறி வருவதைப் பார்த்துக்கொண்டு உண்மையிலேயே எனக்குச் சந்தோஷமாய் இருக்கிறது" என்றான்.

உதயா :—நீங்கள் சொல்லி வந்ததில் தவறு எதுவுமில்லை என்பது இப்பொழுது எனக்குப் புரிந்து வருகிறது.

பிரகாசம் :—அப்படியானால் கிளப்பிற்கு வருவதில் உனக்கு இப்பொழுது ஆட்சேபணை இல்லையே ?

உதயா :—கொஞ்சம் கூடக் கிடையாது. இருந்தாலும் இன்னும் கொஞ்சம் அவகாசம் கொடுங்கள்.

பிர :—நீ எப்பொழுது தயாரென்று சொல்லுகிறாயோ அந்த விநாடியே உன்னை அழைத்துக்கொண்டு போக நான் காத்திருக்கிறேன்.

உதயராணி கிளப்பிற்கு வராததைப்பற்றி பிரகாசம் அதிகமாகக் கவலைப்பட்டு வந்த காலம் போய்விட்டது. அவள் கிளப்பிற்கு வர ஆரம்பித்து விடக் கூடாதே என்ற எண்ணம் அவன் மனத்தில் தலை காட்டி வந்தது. கௌசல்யாவுடன் இவ்வளவு நெருக்குமாகப் பழகுவது சரியா என்ற கேள்வி மனத்தில் தோன்றும்போதெல்லாம் அதை அப்படியே அமுக்கிவிடவே அவன் விருப்பம் தலை தூக்கியது. கௌசல்யா இவ்வளவு காதல் கொண்டிருக்கும்போது அவளை விவாகம் செய்யத் தவறியது தன் மீது பெரிய குற்றம் என்று எண்ணினான். அதற்குப் பரிகாரமாகக் கொஞ்சம் நெருங்கிப் பழகுவதில் என்ன தவறு இருக்கிறது என்று நினைத்துத் தன் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டான்.

உதயாவுக்கு ஜுரம் வந்தது. சாதாரண ஜுரமாயிருக்கும் என்று நினைத்தார்கள். நிமோனியாவாக அது வளர்ந்தது. நிமோனியா என்று தெரிகிற வரையில் கிளப்பிற்குப் போவதை நிறுத்தவில்லை. தெரிந்த பின்பு கௌசல்யாவும் பிரகாசமும் மாலை நேரங்களில் பிரகாசம் வீட்டிலேயே தங்கிக் கவனித்து வந்தார்கள். இரவும்

பகலும் விழித்திருந்து கவனிக்க வேண்டிய கட்டமும் வந்தது.

பிரகாசத்திற்குக் கவலை அதிகரித்தது. உதயாவின் நல்ல குணங்களை நினைத்துப் பார்த்தான். தன்னைத் திருப்தி செய்வதற்காகச் சொந்த அபிப்பிராயங்களை அவள் எவ்வளவு கஷ்டப்பட்டு மாற்றிக் கொண்டாள் என்பதை அவன் நினைத்தபோது கண்ணீர் பெருகிற்று. இவ்வளவு உத்தமமான மனைவிக்கு ஆபத்து ஒன்றும் வந்துவிடக் கூடாதே என்று கடவுளைப் பிரார்த்தித்தான். கௌசல்யாவுடன் தான் நட்பாய்இருப்பதற்காகக் கடவுள் இப்படித் தண்டனை கொடுக்கிறாரோ என்ற எண்ணம் ஒரு பக்கம் அவனுக்குத் தோன்றும். உடனே 'அப்படி இருக்காது. என் அன்பு உதயாவை நான் புறக்கணித்தது இல்லையே! ஆகவே எனக்குத் தண்டனை கொடுக்க வேண்டிய அவசியமில்லையே' என்ற மற்றொரு எண்ணம் இன்னொரு பக்கம் தோன்றித் தோன்றி அவனுக்கு, சாமாதானம் ஏற்படுத்தும்.

அன்றிரவுதான் நெருக்கடியான கட்டம் என்றும், அது கழிந்து விட்டால் கவலையே கிடையாதென்றும் டாக்டர் சொல்லிவிட்டுப் போனார். உதயாவின் படுக்கைக்குப் பக்கத்திலேயே இருந்தான் பிரகாசம். அங்கே இங்கே நகரவில்லை. பிரகாசத்தைப் பார்க்கும் போதெல்லாம் உதயாவின் கண்களில் நீர் நிறையும். அதைப் பார்த்ததும் பிரகாசமும் அப்படியே கண்ணீரை வடிப்பான்.

கௌசல்யா மனமும் கொந்தளித்துக்கொண்டிருந்தது. பிரகாசத்தை அடைய வேண்டும் என்பது அவளுக்கு முக்கியமாக இருந்தாலும், அதற்காக உதயராணி இறந்து போகட்டும் என்ற நினைப்பை மட்டும் அவள் உள்ளம் ஒப்புக் கொள்ளவில்லை. பிரகாசத்தின் மீது உதயராணி கொண்டிருந்த பிரியத்தைக் கண்டு அவள் சந்தோஷமடைந்தாள். தன்னுடைய வாழ்க்கைக்கு உதயராணி இடையூறாக இருந்தாலும் அதற்கு உதயராணி பொறுப்பல்ல என்று அவள் மனம் கூறிக் கொண்டே இருந்தது. உதயாவின் நிலைமை நெருக்

கடியாய் வந்தபோது அவளும் கடவுளைப் பிரார்த்தித்தாள். உதயராணி இறந்து, அதனுல் தனக்கு நல்வாழ்வு வேண்டுமென்று எப்பொழுதுமே விரும்பவில்லை யென்றும் உதயாவின் நல்வாழ்விற்காகத் தன் உயிரைத் தியாகம் செய்யத் தயாரென்றும் பகவானிடம் அவள் சொல்லிக் கொண்டாள். மேஜர் சுந்தரமும் அடிக்கடி வந்து பார்த்துப் போனுன். எல்லாருடைய பிரார்த்தனை யும் சேர்ந்து உதயாவுக்கு, ஜுரம் குறைந்து, கண்டத்தைக் கடந்து விட்டாள். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாகத் தேறிவந்தாள்.

பிரகாசமோ கௌசல்யாவோ மாலை வேளைகளில் வெளியே போவதில்லை. உதயாவின் படுக்கைக்குப் பக்கத்தில் இருந்தே பேசிக் கொண்டிருப்பார்கள். ஒரு நாள் மாலை உதயா அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் தூக்கத்திற்கு இடையூருய் இருக்கக் கூடாதென்று நினைத்து அதே அறையில் கௌசல்யாவும் பிரகாசமும் மெதுவாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

கௌ :—புதிதாக ஒரு நாட்டிய நட்சத்திரம் இந்த ஊருக்கு வரப் போகிருளாமே தெரியுமா ?

பிர :—தெரியாதே. அது யார் அந்த நட்சத்திரம் ?

கௌ :—பெயர் வனஜாவாம். பஞ்சநதத்திற்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. அதோடு அந்தப் பெண்ணின் போட்டோவை அனுப்பியிருக்கிருர்கள். இங்கே கிளப் மூலம் ஏதாவது கச்சேரிகள் ஏற்பாடு செய்ய முடியுமா என்று கேட்டிருக்கிருர்கள்.

பிர :—அப்போ பஞ்சநதத்திற்கு நல்ல கொண்டாட்டம்தான்.

கௌ :—அதுதான் இல்லை.

பிர :—இதென்ன புதிதாய் இருக்கிறதே! இம்மாதிரிக் கச்சேரிகளை ஏற்பாடு செய்வதில்தானே அவனுக்குக் குஷி இருக்கிறது.

கௌ:-உண்மைதான். என்றாலும் மற்றொரு ஆட்சே பணை அவனுக்கு இருக்கிறது. குமாரி சிங்காரிக்கு அவன் தானே கௌரவ மானேஜர். அவள் பெயர் இன்னம் நன்றாய்ப் பிரபலமாவதற்குள் புதிதாக ஒரு நட்சத் திரத்தை இந்திரபுரியில் நுழையவிட அவனுக்கு இஷ்ட மில்லை.

இச் சமயம் உதயராணி விழித்து விட்டாள். ஆனால் கண்ணைத் திறக்கச் சோர்வாய் இருந்தபடியால் கண்ணை மூடிக் கொண்டே படுத்திருந்தாள்.

பிர :—பெயர் என்ன சொன்னாய்?

கௌ :—வனஜா. உனக்குத் தெரியுமா?

பிர :—எந்த ஊர்?

கௌ :—அதை யெல்லாம் நான் கவனிக்கவில்லை.

பிர :—அப்புறம்?

கௌ :—கடிதத்தையும் போட்டோவையும் நான் வாங்கி வைத்திருக்கிறேன். யோசித்துச் சொல்லுவ தாகக் கூறியிருக்கிறேன்.

பிர :—வர வர இந்தப் பரத நாட்டியப் பைத்தியம் அதிகமாகிறது.

கௌ :—காலத்திற்குத் தக்கபடி மாறத்தானே செய்யும்?

பிர :—கலை வளருகிறது!

கௌ :—உனக்கு என்ன அவ்வளவு கேவலமாய்ப் போய்விட்டது?

பிர :—உண்மையிலேயே நான் கேவலமாகப் பேச வில்லை. பரதநாட்டியம் தற்சமயம் ஒரு பாஸ்போர்ட் மாதிரி ஆய்விட்டது. கல்யாணமாகிறதற்குப் பெண் களுக்கு வேண்டிய சிறப்புக்களில் பரத நாட்டியமும் ஒன்றாய்விட்டதல்லவா? அதற்குத் தக்கபடி அந்தத் தொழில் வளர்ச்சி பெறச் சாதனங்கள் ஏற்படுகின்றன அல்லவா? அதைத்தான் சொன்னேன்.

கௌ :—மாப்பிள்ளைகளை வலையில் போடுவதற்காகத் தான் பெண்கள் பரத நாட்டியம் கற்கிறார்கள் என்று சொல்லுகிறாயா ?

பிர :—வேறே என்ன காரணம் ? நீயே சொல்லு.

கௌ :—நான் பரத நாட்டியம் கற்றேன். என் வலை வெறும் வலையாயிற்று. உதயராணி பரதநாட்டியம் கற்றுக்கொள்ளவே இல்லை. அவளுக்கு என்ன குறைந்து போயிற்று ?

பிர :—ஒன்றிரண்டு விதிவிலக்காய் இருக்கலாம். பொதுவாகத்தானே நாம் பேசுகிறோம். உன் வலையைப் பற்றிச் சொன்னாயே, உனக்கு என்ன குறைந்து போயிற்று. எந்த விநாடி வேண்டுமானாலும் நீ இஷ்டப் பட்டால் உனக்கு விவாகம் ஆய்விடுமே ! இப்பொழுதும் மேஜர் சுந்தரம் தயாராய் இருக்கிறார்.

கௌ :—(கோபத்தோடு) நிறுத்து உன் பிரசங் கத்தை. உனக்கு உணர்ச்சி என்பது கடுகளவுகூடக் கிடையாதா ? உனக்குத்தான் இல்லை யென்றால் எனக்கும் இல்லையென்றா நினைத்துவிட்டாய் ? கொஞ்சங் கூட நாக்கில் நரம்பில்லாமல் என்னை மேஜர் சுந்தரத் திற்கு விவாகம் செய்துகொடுக்கப் பேசிவிட்டாய்.

பிர :—கோபிக்காதே கௌசல்யா, விளையாட்டாகத் தானே பேசிக் கொண்டிருக்கிறோம்.

கௌசல்யா கண்ணீர் வடித்து விம்மி விம்மி அழுதாள். அச்சமயம் கொஞ்சம் கண்ணை விழித்து உதயா பார்த்தாள். கௌசல்யாவை அணைத்துக் கொண்டு அவள் கண்ணீரைத் தன் கைக்குட்டையால் பிரகாசம் துடைப்பதைக் கண்டாள். அவளுக்குத் தலை சுழன்றது. தான் காண்பது கனவா நனவா என்ற சந்தேகம் பிறந்தது. தன் கணவர் பிரகாசமா இப்படிச் செய்கிறார் ? அப்படியானால் மொட்டைக் கடிதத்தில் கண்டதெல்லாம் உண்மைதானோ ? என்ற கேள்விக ளெல்லாம் மூளையில் அடுக்கடுக்காய் வந்தன. ஆனால்

தொடர்ந்து யோசனை செய்ய அவளால் முடியாதபடி பலவீனமாய் இருந்தாள்.

உதயராணிக்கு ஏற்பட்ட அதிர்ச்சியினால் அவள் குணமடைவது தாமதமாயிற்று. சிரிப்பே அவள் முகத்தைவிட்டுப் போய்விட்டது. பிரகாசத்திடமும் கௌசல்யாவிடமும் அவள் கோபங் கொள்ளவில்லை. தான் அசௌக்கியமாக இருந்தபோது தனக்கு அவர்கள் செய்த சேவையை மறக்க முடியவில்லை; என்றாலும் அவர்களிடம் சிரித்துப் பேச அவளால் முடியவில்லை. இந்த ஜுரத்திலிருந்து எதற்காகப் பிழைத்திருக்க வேண்டும் என்று நினைத்தாள்.

நன்றாய்க் குணமான பின்புகூட உதயராணி கலகலப்பாய் இல்லை. பிரகாசம் ஏதாவது பேசினால் ஆமாம், இல்லை என்ற பதிலுக்கு மேல் அதிகமாய்ப் பேச்சு வைத்துக்கொள்ளுவதில்லை. உதயராணியின் இந்தத் திடீர் மாறுதல் பிரகாசத்திற்கு ஆச்சரியமாய் இருந்தது. புரியவில்லை. என்ன காரணமாய் இருக்குமென்று யோசித்துப் பார்த்தான். பிடிபடவில்லை. கௌசல்யாவிடம் கேட்டான். உதயராணியிடம் ஏற்பட்டிருந்த மாறுதலை அவளும் கவனித்திருந்தாள்.

உதயராணி அசௌக்கியமாய் இருந்த காலத்தில் தானும் பிரகாசமும் அசந்தர்ப்பமாய் ஏதாவது பேசி உதயராணி கேட்டிருந்திருப்பாளோ என்ற சந்தேகம் அவளுக்கு ஏற்பட்டது. இருந்தாலும் அதைச் சொல்லாமல், "பலவீனமாய் இருப்பவர்களுக்கு அதிகமாய்ப் பேசப் பிடிக்காது; அதனால் இருக்கலாம்" என்று கூறினாள். பிரகாசத்திற்கு அது சரியான காரணமாய் இருந்தாலும் இருக்கலாம் என்று தோன்றியது.

"அந்தக் கடிதத்தைப் பற்றி நீ உதயராணியிடம் ஒன்றும் கூறவில்லையே?" என்று கௌசல்யா கேட்டாள்.

பிர:—எந்தக் கடிதம்? மேஜர் சுந்தரமும் உதயாவும் அடிக்கடி சந்தித்துப் பேசுகிறார்கள் என்று மொட்டைக் கடிதம் வந்ததே, அதைச் சொல்லுகிறாயா?

கௌசல்யா தலையை அசைத்தாள்.

பிர :—காட்டுவேனா? அவளுக்கு உடம்பு சரியில்லாமல் இருந்தது ஒரு காரணம். அதைக் காட்டினால் அவள் மனம் ரொம்பப் புண்படும் என்பது மற்றொரு காரணம்.

பிரகாசம் சொல்லிய இரண்டு காரணங்களும் அவன் மனத்தில் இருந்தன என்பது உண்மைதான். என்றாலும், அந்தக் கடிதம் வந்ததிலிருந்து பிரகாசத்தின் மனம் அதை நினைக்கும் போதெல்லாம் சஞ்சலப்பட்டது. 'அப்படியும் இருக்குமோ' என்று ஒருபக்கம் சந்தேகம் தோன்றும். 'சே, ஒருக்காலும் இருக்காது' என்று மற்றொரு பக்கம் சமாதானம் ஏற்படும். 'ஒரு வேளை அப்படி இருந்துவிட்டால்?' என்ற சந்தேகம் அடுத்த படியாகப் பலமாகக் கிளம்பும். உதயராணி அப்படிச் செய்யக்கூடியவள் அல்ல என்ற சமாதானம் உடனே தோன்றி அந்தச் சந்தேகத்தை அமுக்கும். கௌசல்யாவுடன் தான் இவ்வளவு நெருக்கமாய்ப் பழகும்போது, உதயராணி மேஜர் சுந்தரத்தோடு பழகுவதைக் கண்டிக்கத் தனக்கு என்ன உரிமை இருக்கிறது என்ற கேள்வியை மனச்சாட்சி கிளப்பும். அதற்குப் பதில் சொல்ல வழி தெரியாமல் 'உதயராணி அப்படிச் செய்யக் கூடியவளல்ல' என்ற பதிலோடு அந்தக் கேள்வியை மழுப்பிவிடுவான்.

மேஜர் சுந்தரம் ஒருவனிடம்தான் கொஞ்சம் சிரித்துப் பேசுவாள் உதயராணி. அந்தச் சிரிப்பிலும் சோகம் கலந்திருக்கும். இதை மேஜர் கவனிக்காமல் இல்லை. "ஏன் இப்படிச் சோகமாகவே இருக்கிறாய் உதயராணி?" என்று ஒரு நாள் கேட்டான் மேஜர்.

உதயா வறட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு, "அப்படி ஒன்றும் இல்லையே மேஜர்" என்றாள்.

மேஜர் :—இல்லை யென்று உன் வாய் சொல்லுகிறது. இருக்கிறதென்று உன் முகம் சொல்லுகிறது.

உதயராணி :—வாழ்க்கையில் சுகமும், துக்கமும் கலந்துதானே வரும்?

மேஜர்:—வாழ்க்கையைப் பற்றி, நீ சொல்லுவது சரி. நான் கேட்பது அதைப்பற்றியல்ல; உன் முகம் ஏன் சோர்வாய் இருக்கிறது என்பதுதான் நான் கேட்கிற கேள்வி.

உதயா:—நானும் வாழ்க்கைக்குள் அகப்பட்டவள் தானே?

மேஜர்:—பதில் கேள்விகள் வேண்டாம் உதயா. நீ வருத்தப்படுவதைப் பார்த்து என் மனம் வருந்துகிறது. அதனால் கேட்கிறேன். உனக்குச் சொல்ல இஷ்டமில்லை யென்றால் நான் விட்டுவிடுகிறேன்.

உதயா பதில் பேசாமல் எதிரிலுள்ள கிருஷ்ணன் படத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். "உலகமே மாயை என்று சொல்லி அதை வெறுத்து மனிதர் பரமாத்மா மீது பக்தி செலுத்துவதன் ரகசியம் இப்பொழுதுதான் எனக்குப் புரிகிறது" என்றாள் திடீரென்று உதயராணி.

மேஜர்:—நீ சொல்லாவிட்டாலும் உன். மனத்தில் ஓடும் எண்ணம் எனக்குத் தெரியும். பக்தியில் இரண்டு விதமுண்டு. ஒன்று குடும்பத்திலுள்ள கஷ்ட நஷ்டங்களைச் சமாளிக்க முடியாமல், பக்தியில் திரும்புவது. மற்றொன்று கஷ்ட நஷ்டங்களைச் சமாளித்துவிட்டு அப்புறம் இந்தக் குடும்பப் பற்றுதல்களால் ஒரு பயனும் இல்லை என்று தெரிந்து பக்தியில் திரும்புவது. இரண்டாவது தான் விசேஷமானது. நீயோ முதலில் சொன்ன ரகத்தில் இருக்கிறாய். அந்த ரகத்தைச் சேர்ந்த பக்தர்கள்தான் அதிகமாய் இருப்பார்கள்.

உதயா:—எதுவாய் இருந்தாலென்ன மேஜர்? பக்திதானே?

மேஜர்:—தானாகத் தோன்றுகிற பக்திக்கும், மற்றொன்றில் ஏற்பட்ட வெறுப்பினால் தோன்றுகிற பக்திக்கும் வித்தியாசமில்லையா?

உதயா:—அப்படியானால் நீங்கள் என்னதான் சொல்லுகிறீர்கள்?

மேஜர் :—குடும்பத்தில் கொஞ்சம் பொறுமையோடு நடக்க வேண்டும். பிறர் தவறுகளை மன்னிக்கக்கூடிய மனுே பக்குவம் ஏற்பட வேண்டும். இளமையும் தவறு களும் நீடிக்கக் கூடியவையல்ல. அன்பு ஒன்றுதான் கடைசிவரையில் நிலைக்கக்கூடியது.

உதயா :—வாழ்க்கையைப் பற்றி, என்னென்னவோ கனவு கண்டுகொண்டிருந்தேன் மேஜர். எல்லாம் பகற்கனவாய்த்தான் இருக்கிறது.

மேஜர் :—நாம் எதை ரொம்ப விரும்புகிறுேமோ அது அநேகமாய் நமக்குக் கிடைப்பதில்லை. அதுதான் வாழ்க்கை.

உதயா, "என்றுலும் என் கணவர் இவ்வளவு மோசமாய்ப் போவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்று சொன்னவள், 'ஹோ' என்று அழுதுவிட்டாள். மேஜர் சிறிது நேரம் சும்மா இருந்தான். கொஞ்சம் அழுகை குறைந்ததும் மெதுவாக, "உதயா, நீ சிறு பெண். சில காரியங்களைப் பார்த்து உனக்குக் கோபம் வருவது இயற்கை. ஆனுல் நீ பொறுமையாய் இருக்க வேண்டும்" என்றுன்.

உதயா :—என்ன பொறுமை வேண்டியிருக்கிறது? என் வாழ்க்கையே பாழாகும்போது பொறுமை எதற் காக?

மேஜர் :—நெருக்கடியில்தான் பொறுமை வேண்டும்.

உதயா : "பொறுமை, பொறுமை" என்று ஆத்திரத்துடன் சொன்னுள்.

ஆத்திரம் அதிகமானுல், பலவீனமான உதயாவின் உடம்பு தாங்காது என்று நினைத்த மேஜர் அவள் கையைப் பற்றிக்கொண்டு, "ஆத்திரப்படாதே உதயா. உடம்புக்கு ஆகாது" என்று சொல்லி, தன் கைக்குட்டை யால் அவள் கண்ணீரைத் துடைத்தான்.

தன் கையைப் பற்றியதையோ கண்ணீரைத் துடைத்ததையோ பற்றிச் சிறிதும் அவள் லட்சியம் செய்யவில்லை. அவற்றை உணரக்கூடிய நிலைமையில்

இருந்தாளா என்பதே சந்தேகம். 'என் வாழ்க்கையே போனபின்பு என் உடம்பு எப்படிப் போனல் என்ன?' என்று கதறினுள்.

இச் சமயம் அங்கே பிரகாசம் வந்தான். உதயா கோபமாய்ப் பேசுவதையும், அவள் கண்ணீரை மேஜர் துடைத்துக்கொண்டிருப்பதையும் பார்த்ததும் அவனுக்குக் கடுங்கோபம் ஏற்பட்டது. ஒன்றும் பேசாமல் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டான்.

பிரகாசத்தைப் பார்த்த மேஜர், "பிரகாசம் ஏதோ கோபமாய் இருக்கிருர் போலத் தெரிகிறது. நான் போய் வருகிறேன் அம்மா" என்ருன். உதயா அவனைப் போக விடவில்லை. "சும்மா இருங்கள். அவர் கோபத்தைப் பற்றி எனக்கென்ன? அவரைத் திருப்தி செய்ய வேண்டும், அவர் மனம் கோணுமல் நடக்க வேண்டும் என்று நான் நினைத்த காலமெல்லாம் போய்விட்டது" என்ருள்.

மேஜர்:—அப்படிச் சொல்லக்கூடாதம்மா. பொறுமையாய் இருக்க வேண்டும்.

உதயா:—பொறுமைக்கும் ஒரு அளவில்லையா? என் மனம் உடைந்து போயிற்று. இனி இதை ஒட்டவைக்க முடியாது. மண் பாத்திரம் உடைந்தால் மறுபடியும் சேர முடியுமா?

மேஜர்:—முன்பின் உள்ள காரியங்களைச் சகித்துக் கொண்டு போவதுதான் குடும்ப வாழ்க்கை.

உதயா:—என்னதான் சகித்தாலும் நெஞ்சில் ஏற்பட்ட கீறல் கீறல்தானே! அதை எப்படி மாற்றிவிட முடியும்?

அப்புறம் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்த பின்புதான் மேஜரை உதயா போகவிட்டாள். பிரகாசம் நேராகக் கௌசல்யா வீட்டிற்குப் போனுன். சிறிது நேரத்திற்கு முன்புதான் போன பிரகாசம் மீண்டும் திரும்பி வந்ததையும், அவன் முகத்தில் உள்ள கோபத்தையும் பார்த்ததும் ஏதோ கோளாறு ஏற்பட்டிருக்கிறது என்பதை யூகித்துக் கொண்டாள் கௌசல்யா.

கௌ:—என்ன பிரகாசம், என்ன விசேஷம் ?

பிர:--விசேஷம் என்ன விசேஷம்? உதயா இவ்வளவு மோசமாய் நடப்பாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

கௌ:—என்ன நடந்தது? நடந்ததைத்தான் சொல்லேன் ?

பிரகாசம் விவரமாகச் சொன்னான்.

கௌ:—இவ்வளவுதானா? இதற்குத்தானா இவ்வளவு பிரமாதம் செய்கிறாய் ? சரி. நீ வீட்டுக்குப் போ. நான் மேஜரைப் பார்த்துப் பேசிவிட்டு அங்கிருந்து டெலிபோன் செய்கிறேன்.

பிரகாசம் போனதும், கௌசல்யா மேஜர் வீட்டுக்குப் போனாள். அப்பொழுதுதான் மேஜர் வீட்டுக்கு வந்திருந்தான்.

மேஜர்:—ஏது,அபூர்வமாய் இருக்கிறது கௌசல்யா? இவ்வளவு நேரத்திற்கு மேல் நீ சிரமப்பட்டு இங்கு வருவதை விட எனக்கு டெலிபோன் செய்திருந்தால் நான் வந்திருப்பேனே ?

கௌ:—ஆஹா, என்ன அடக்கம் ! உனக்கு உதயாவிடம் பேசுவதற்கே நேரம் போதாதே. நான் கூப்பிட்டவுடனா வந்துவிடப் போகிறாய் ?

மேஜர்:—கௌசல்யா, நீ இப்படிப் பேசுவது நியாயமா ?

கௌ:—உதயராணியின் கண்ணீரைத் துடைப்பது எந்த வகையில் நியாயம் ?

மேஜர்:—என்னைப் பற்றி அப்படித் தவறாய் நீ நினைக்கலாமா ?

கௌ:—நான் நினைப்பது இருக்கட்டும். பிறர் பார்த்தால் என்ன நினைப்பார்கள் என்பதைக் கொஞ்சமாவது யோசித்தாயா? அவள் புருஷன் பார்த்தால் என்ன நினைப்பார் என்பதையாவது சிந்தித்தாயா ?

மே:—ஓஹோ ! இப்பொழுதுதான் புரிகிறது. பிரகாசம் வந்து உன்னிடம் சொன்னான். நீ உடனே புறப்பட்டு விட்டாய் ?

கௌ:—அவன் சொல்லியது தப்பா ?

மேஜர்:—அவன் சொல்லியதில் தப்பு ஒன்றும் இல்லை. உன்னிடம் பேசுவது, உன்னைத் தொடுவது-இந்த விஷயங்களிலும் அவனுக்கு ஏன் இந்தப் புத்தி தோன்றுவதில்லை என்பதைத்தான் யோசிக்கிறேன்.

கௌ:—ஓஹோ! அந்த வழியில் பேசுகிருயோ ?

மேஜர்:—அதில் என்ன தப்பு ?

கௌசல்யா, "தப்போ சரியோ, இனி உன்னிடம் பேசுவதில் பயனில்லை. நான் போகிறேன்" என்று தன் பையை எடுத்துக் கொண்டு கோபமாய்க் கிளம்பினுள்.

மேஜர் அவளைப் போகக் கூடாதென்று தடுத்து அவள் கையைப் பிடித்தான். அவளைக் கோபமாய் இழுக்கவே பை திறந்து அதில் உள்ள சாமான்கள் கீழே சிதறி விழுந்தன. இருவரும் சேர்ந்து சாமான்களை எடுத்துப் பையில் போட்டார்கள். போடும்போது ஒரு நடனமாதின் படம் அவற்றில் காணப்படவே மேஜர், "இது யார் படம் கௌசல்யா ?" என்று கேட்டான். "நன்ருகப் பாரு. அவளையும் மயக்க முயற்சி செய்" என்று சொல்லிப் படத்தை அவனிடம் கொடுத்தாள். படத்தைப் பார்த்ததும் மேஜரின் முகம் மாறியது. அதைக் கவனித்த கௌசல்யா, "அவளும் உனக்குத் தெரிந்தவள்தான் போலிருக்கிறது" என்று கேலியாய்ச் சொன்னுள். ஆனல் மேஜரின் முகத்தில் தோன்றிய கலக்கம் மாறவில்லை. "இது யார் ?" என்று கேட்டான்.

கௌ:—அவள் பெயர் வனஜா.

மேஜர்:—வனஜாவா ?

கௌ:—அந்தப் பெயரில் அவ்வளவு கவர்ச்சியா ?

மேஜர்:—எந்த ஊர் ?

கௌ:—பார்வதிபுரம்.

மேஜர்:—பார்வதிபுரமா ?

கௌ:—ஆமாம்.

மேஜர், "கௌசல்யா இது என்ன?" என்று சொல்லி அப்படியே நாற்காலியில் உட்கார்ந்து விட்டான்.

கௌ:—படத்தைப் பார்த்து மயங்கிவிட்டாயா ? அல்லது பயந்துவிட்டாயா என்பது எனக்குப் புரியவில்லையே ?

மேஜர்:—கௌசல்யா, இந்தப் படம் உனக்கு எப்படிக் கிடைத்தது? சொல்லு.

கௌ:—நான் சொல்லுவது இருக்கட்டும். உனக்கு என்ன அவ்வளவு சிரத்தை ? அதை முதலில் சொல்லு.

மேஜர்:—உன் பிடிவாதத்தை விடமாட்டாயா? நான் சொல்லுகிறேன். விவரங்களை நீ சொல்லு. உன்னைக் கெஞ்சுகிறேன்.

கௌ:—அப்படியானால் சொல்லுகிறேன். இந்தப் பெண்ணின் பரதநாட்டியக் கச்சேரி இங்கே ஏற்பாடு செய்ய வேண்டுமாம். அதற்காக இந்தப் படத்தோடு கடிதம் எழுதியிருக்கிறார்கள்.

மேஜர்:—பரதநாட்டியக் கச்சேரியா ?

கௌ:—ஏன், உனக்குப் பிடிக்காதோ ?

மேஜர்:—அதுவும் இந்த ஊரிலா ?

கௌ:—ஏன் கூடாது ? அவள் என்ன உன் மனைவியா, நீ அபிப்பிராயம் சொல்வதற்கு ?

மேஜர்:—அவள் என் மனைவியேதான்.

கௌ:—உன் மனைவியா ? உனக்குக் கல்யாணமாகி விட்டதா ? அட பாவி! இதை ஏன் இதுவரை மறைத்து வைத்திருந்தாய் ?

மேஜர்:—கௌசல்யா, என்னை மன்னித்து விடு. அவளை நான் தள்ளி வைத்திருந்தேன். அது பெரிய தவறு. அந்தத் தவறுக்குப் பரிகாரம் தேட வேண்டும். இங்கே கச்சேரி ஏற்பாடு செய்து என் மானத்தை வாங்கி விடாதே. அவளை நான் சேர்த்துக்கொள்ளுகிறேன்.

கௌ:—அது போதும் எனக்கு. இனி நீ உதய ராணியின் பக்கம் போக மாட்டாய். எப்பேர்ப்பட்ட ஆச்சரியம்? என்ருல் நம்பவே முடியவில்லையே !

சித்ரலேகா வீட்டிலிருந்த படத்தில் மேஜர் சுந்த ரத்தை வனஜா அடையாளம் காட்டியவுடன் சித்ர லேகாவிற்கு விஷயம் புரிந்து விட்டது. இந்திரபுரி கிளப்பில் பரதநாட்டியக் கச்சேரிகள் நடப்பதையும், அந்தக் கிளப்பிற்கு மேஜர் சுந்தரம் அடிக்கடி போவதை யும் அறிந்து ஒரு யுக்தி செய்தாள். வனஜாவை நாட்டிய உடையில் ஒரு படம் எடுத்தாள். அந்தப் படத்தைக் கிளப் காரியதரிசிக்கு அனுப்பினுல் கிளப்பிற்கு வருகிற வர்களிடம் அது பரவும் என்றும், உடனே சுந்தரம் வழிக்கு வந்து விடுவான் என்றும் நினைத்தாள். அவள் தந்திரம் பலித்தது.

பிரகாசம் வீட்டில் டெலிபோன் மணி அடித்தது. கௌசல்யாவாகத்தான் இருக்கும் என்று பிரகாசம் நினைத்தான். ஆனுல், அது கௌசல்யா அல்ல; பஞ்ச நதம். பிரகாசத்தின் அப்போதைய மன நிலைமை அவனேடு பேசும்படியாக இல்லை. “ என்ன பஞ்சநதம்?” என்று கேட்டான். “உங்களோடு கொஞ்சம் பேச வேண்டும். இப்பொழுது வரட்டுமா? சௌகரியப்படுமா?” என்ருன் பஞ்சநதம்.

பிர:—இப்பொழுதா ? ஊஹும். நான் ரொம்ப வேலையாக இருக்கிறேன். நாளை பார்க்கலாம்.

பஞ்:—அவன் ரொம்ப அவசரப்படுகிருன்.

பிர:—யார் ?

பஞ்:—அவன்தான் ‘ வாழ்க்கையின் ரகசியம் ’ ஆசிரியர். அதனுல்தான் உங்களிடம் பேசலாம் என்று நினைத்தேன்.

பிரகாசத்திற்கு ரொம்பக் கோபம் வந்தது. “யாராய் இருந்தாலும் சரி. நாளைதான் பேச முடியும் ” என்று சொல்லி விட்டு டெலிபோனைக் கீழே வைத்தான். ஹாலில் சோபாவில் உட்கார்ந்திருந்த உதயராணியைப்

பார்த்து, “ எல்லாம் உன்னால் ஏற்படுகிற தொல்லைகள் தான் ” என்றான்.

திடீரென்று கேட்ட இந்தக் கடுமையான வார்த்தை களால், அதிர்ச்சியுற்ற உதயராணி ஒரு அலட்சியச் சிரிப்புச் சிரித்து, “என்னால் ஒரு தொல்லையும் உங்களுக்கு வராமல் நான் விலகித்தானே இருக்கிறேன் ?” என்றாள்.

பிர:—விலகி இருக்கிறாயா ? நீ மேஜர் சுந்தரத்தோடு அடிக்கும் கூத்தைக் கண்டு ஊரெல்லாம் சிரிக்கிறதே !

உதயராணிக்குத் தலை சுழலுகிற மாதிரி தோன்றி யது. “ நானா ? கூத்தடிக்கிறேனா ? இதென்ன தகாத வார்த்தை?” என்றாள்.

பிர:—தகாத வார்த்தை ! என்ன தகாத வார்த்தை ? தகாத காரியத்தைச் செய்யலாம். அதைச் சொல்லக் கூடாதாக்கும் ?

உதயா:—நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள் ?

பிர:—நான்தான் பேசுகிறேன். நீ இப்படி வருவாய் என்று நான் நினைக்கவே இல்லை.

உதயா:—நான் என்ன தவறு செய்தேன் ? என் மனம் உடையும்படி நீங்கள் நடப்பதும் அல்லாமல், என்மேல் குற்றமும் சொல்லுகிறீர்களா ?

பிர:—நீ செய்கிறதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டுமாக்கும் ?

உதய:—நான் என்ன செய்தேன் ?

பிர:—வேறு என்ன செய்யவேண்டும் ? மேஜரும் நீயும் கூடிக் குலாவுவது போதாதா ?

உதய:—(காதைப் பொத்திக் கொண்டு) நிறுத்துங்கள் உங்கள் பேச்சை. இந்தக் கொடூரங்களை யெல்லாம் என்னால் கேட்க முடியாது. நான் ஒதுங்கி இருந்தவளை நாகரிகம், நாகரிகம் என்று சொல்லி என்னை எல்லாரிட மும் பேசும்படி கட்டாயப்படுத்தி விட்டு என்மேல் குற்றம் சொல்லுகிறீர்களா ? உங்கள் முகத்திலே விழிக்கக் கூடாது. போதும் இந்த வாழ்க்கை. நீங்களே இங்கே

கும்மாளம் அடித்துக் கொண்டிருங்கள். இப்பொழுதே இதை விட்டு நான் போகிறேன். உங்கள் இஷ்டப்படி இருங்கள். யாரை வேண்டுமானுலும் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். அதற்கு நான் இடையூருக இல்லாமல் நாளையே விவாக ரத்துச் செய்து விடுகிறேன்.

இச்சமயம் டெலிபோன் மணி அடித்தது. கௌசல்யா பேசினுள் : " இனிமேல் மேஜர் அந்தப் பக்கமே வரமாட்டான் " என்று சந்தோஷமாகச் சொன்னுள். அந்தச் சந்தோஷத்தை அநுபவிக்கக் கூடிய நிலைமையில் பிரகாசம் இல்லை. உதயராணி கோபமாய் இருக்கிருளென்றும், உடனே அங்கு வரும்படியும் பிரகாசம் கெஞ்சினுன். " இதோ ஐந்து நிமிஷத்தில் வருகிறேன் " என்ருள்.

உதயராணி தன் சாமான்களை எல்லாம் பெட்டிகளில் போட்டுப் புறப்படத் தயாரானுள். " இந்த ராத்திரியில் எங்கே போகிருய்? காலையில் பார்த்துக் கொள்ளலாம் " என்ருன் பிரகாசம். " நான் எங்கே போனுல் உங்களுக்கென்ன? ஒரு விநாடிகூட இனி இந்த வீட்டில் இருக்க மாட்டேன் " என்ருள். உதயராணியைப் பிரகாசம் எவ்வளவு கெஞ்சியும் பலிக்கவில்லை. உதயராணி தன் சாமான்களுடன் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனுள். காலையில் புறப்படுகிற ரயிலுக்கு ஒரு டிக்கட் வாங்கிக் கொண்டு ரயிலுக்காகக் காத்திருந்தாள்.

உதயராணி வீட்டை விட்டுப் புறப்பட்டதும் பிரகாசத்திற்கு டெலிபோன் செய்தி வந்தது. கௌசல்யா ஏன் இன்னும் வரவில்லை என்று யோசித்தான். அவள் வந்தால் அவளோடு ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய் உதயராணியைச் சமாதானப்படுத்தலாம் என்று நினைத்தான். ஆகவே ஆவலோடு டெலிபோனை எடுத்தான்.

பேசியது கௌசல்யா அல்ல. ஆஸ்பத்திரி தாதி. பகீரென்றது! ஒரு மோட்டார் விபத்தில் கௌசல்யா அகப்பட்டதாகவும், உடனே பார்க்க விரும்புவதாகவும் சொன்னுள். பிரகாசம் ஆஸ்பத்திரிக்கு ஓடினுன்.

கௌசல்யா பிரக்ஞை யற்றிருந்தாள். அவளுக்குப் பிரக்ஞை வந்தபோது பிரகாசத்தை அருகில் அழைத்து, " நான் இனிப் பிழைக்க மாட்டேன். உதயராணியுடன் சமாதானமாய் இரு " என்ருள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் ஆவி பிரிந்தது. பிரகாசம் துடித்தான்; அழுதான்; உதயராணிக்குத் தெரிவிக்க வேண்டும் என்று ஸ்டேஷனுக்கு ஓடினுன்.

அவன் போன சமயத்தில் உதயராணி ரயில் வண்டியில் ஏறி உட்கார்ந்திருந்தாள். கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. பிரகாசத்தைத் திரும்பியே பார்க்க வில்லே.

" உதயா, உதயா " என்று கதறினுன். அவள் காது களில் ஏறவே இல்லே.

" கௌசல்யா மோட்டார் விபத்தில் இறந்து போனுள். நீ ரயிலே விட்டு இறங்கி விடு " என்று கெஞ்சினுன்.

அதுவும் அவள் காதில் ஏறவில்லே. ரயிலும் புறப் படப்போவதாக ஊதியது; நகரவும் ஆரம்பித்தது. பிர காசத்தின் கதறல் அதிகமாயிற்று.

அவள் முகம் மட்டும் இவன் பக்கம் திரும்பவே இல்லே. கண்ணீர் வடிக்கும் உதயாவின் முகம் ஓடும் ரயிலில் எங்கேயோ பார்த்துக்கொண் டிருந்தது.

# மோட்டார் விபத்து

திருக்குறள் சுந்தரமூர்த்தி வீட்டுக் கூடத்தில் தரையில் ஜமுக்காளம் விரிக்கப்பட்டிருந்தது. சுவரை ஒட்டினாற் போல ஒரு பீடம் அமைக்கப்பட்டு அதிலே திருவள்ளுவர் படத்தைச் சுவரில் சாய்த்து வைத்திருந்தார். படத்திற்கு மாலைபோட்டு, பக்கத்தில் ஊதுவத்திகளைப் பொருத்தி வைத்திருந்தார். படத்திற்கு வலது பக்கமாக சுந்தரமூர்த்தி விபூதி அணிந்து தாவடத்தோடு கையில் திருக்குறள் சகிதம் அமர்ந்திருந்தார். மூக்கில் கண்ணாடியும் இருந்தது. எதிரே ஐந்தாறு பேர் பக்தி சிரத்தையோடு கேட்டுக் கொண்டிருந்தார்கள். அறத்துப் பாலில் 'அழுக்காருமை' அதிகாரத்தில் பாடம் நடந்து கொண்டிருந்தது. பக்கத்திலிருந்த பொடி டப்பியிலிருந்து ஒரு சிட்டிகையை எடுத்து உறிஞ்சி, துவாலை நுனியில் மூக்கைத் துடைத்து, தொண்டைய்யை ஒருதரம் கனைத்துக் கொண்டு,

> "அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன்ஆக்கம்
> பேணு தழுக்கறுப் பான்"

என்று திருக்குறள் சுந்தரமூர்த்தி வாசித்தார். "பிறருடைய செல்வத்தையோ உயர்வையோ பொருளையோ கண்டு பொருமைப்படுகிறவன்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே, அங்கு பொய்யொருபாகன் வந்தார். வாய்ச்சொல்லில் வம்பராகையால் அவரை எல்லோரும் மரியாதையாக நடத்துவார்கள். அவரைப் பார்த்ததும் மற்றவர்கள் "வாருங்கள், வாருங்கள்" என்ருர்கள். சுந்தரமூர்த்தியும் நிமிர்ந்து பார்த்து "வாருங்க" என்று சொல்லிப் புன்னகை செய்தார்.

வந்தவர் உட்கார்ந்ததும் பாடம் மேலே ஆரம்பமாயிற்று. "இந்த இடத்தில் திருவள்ளுவர் ரொம்ப அற்புதமாய்க் கையாண்டிருக்கிருர்"என்று சொல்லிவிட்டு

சுந்தரமூர்த்தி நிமிர்ந்தார். பொய்யொருபாகனும் மறம் வளர்த்தானும் ரொம்ப ரகசியமாக ஏதோ பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்தார். இவர் பார்ப்பதை அறிந்ததும் அவர்கள் இருவரும் பேச்சை நிறுத்திக்கொண்டு இவரைப் பார்த்தார்கள். ஏதோ சமாதானம் சொல்லுகிற பாவனையாகக் கையை ஆட்டிக்கொண்டு, "ஒரு பெரிய கார் விபத்து ஏற்பட்டுவிட்டது. அதைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறேன்" என்ருர் பொய்யொருபாகன்.

சுந்தர:—அதையெல்லாம் பாடம் முடிந்த பின்பு பேசிக் கொள்ளலாமே. ஆரம்பித்த பாடம் முடியட்டுமே.

பொய்யொரு:—நல்லது; நல்லது. அப்படியே ஆகட்டும்.

சுந்தர:—பொருமை என்ற குணம் இருக்கிறதே, அது மகா கெட்ட குணம். அந்த ஆயுதத்தை ஒருவன் மற்றவன் மீது பிரயோகித்தால் அந்த மற்றவனுக்கு அதனுல் எவ்விதக் கெடுதலும் வரப்போவதில்லை. ஆனுல் எவனெருவன் பிரயோகிக்கிருனே அவனையே அந்த ஆயுதம் வந்து திரும்பத் தாக்குகிறது. பிரயோகித்தவனுடைய அறத்தையும் பொருளையும் தாக்குகிறது. அடடா! என்ன அருமையான............

சோகநாதன்:—மன்னிக்கணும். திருவாளர் பொய்யொருபாகன் சொல்லுவதோ ரொம்ப முக்கியமான விஷயம். நம்ம ஊரிலேயே பெரிய செல்வந்தராய் விளங்கும் ராக்குடையானல்லவா மோட்டார் விபத்துக்குக் காரணமாம்!

ராக்குடையானுக்குப் பெற்ருேர் வைத்த பெயர் முனியாண்டி. யுத்த காலத்தில் திடீர் பணக்காரர்களானவர்களில் அவர் ஒருவர். நேற்றுவரை மூட்டை தூக்கிக்கொண்டிருந்த முனியாண்டி இன்று பணக்காரராய் விடுவதா என்று போன தலைமுறை, அதற்கு முந்தின தலைமுறைகளில் பணக்காரராய்த் திகழ்ந்து தற்சமயம் ஓட்டாண்டிகளாய் மிளிரும் பரம்பரைப் 'பெரிய குடும்பத்தார்க'ளுக்குக் கோபம்.

முனியாண்டி பேச்சு வரும்போதெல்லாம் 'வெறும் அற்பன்' என்று ஒருவர் சொல்லுவார். 'அர்த்த ராத்திரியில் குடை பிடிக்கிருன்' என்று மற்ருெருவர் சொல்லுவார். முனியாண்டி வீட்டுப் பெண்களோ குழந்தைகளோ நல்ல ஆடைகள் அணிந்து போவதைப் பார்த்தால் 'கலி முற்றிவிட்டது' என்று சொல்லிப் பெருமூச்சு விடுவார்கள்.

முனியாண்டி குடும்பத்தார் கோவில்களுக்குப் போனால் பரம்பரைப் 'பெரிய குடும்பத்தார்' பாம்பைப் பார்த்து ஒதுங்குவதுபோல விலகிப் போவார்கள். முகங்களை வேறு பக்கமாகத் திருப்பிக் கொள்ளுவார்கள். 'எத்தனை நாளைக்கு இந்த வாழ்வு?' என்று கேட்பார்கள். முனியாண்டி மோட்டாரில் போவதைப் பார்த்தால், "அட, ரொம்ப அவசரமாகப் போகிருர் போலிருக்கிறதே" என்பார் ஒருவர். "ஆமாம்; மூட்டைகள் காத்துக் கொண்டிருக்கும். அவற்றை எடுத்துவரப் போவார்" என்பார் மற்ருெருவர்.

இப்படியாக இந்தத் திருக்கூட்டத்தா ரெல்லாரும் சேர்ந்து 'முனியாண்டி அற்பன்; அவனுக்குப் பவிசு வந்தால் ராத்திரிக் குடை பிடிக்கிருன்; அதனால் அவனுக்கு ராக்குடையான் என்ற பெயர்தான் பொருத்தமானது' என்று தீர்மானித்தார்கள்.

உண்மையில் முனியாண்டி அவர் ஆயுளில் குடை என்பதையே வாங்கியவரல்ல. அவர் கூலியாய் இருந்த சமயம் அவரிடம் குடை வாங்கப் பணம் கிடையாது. அவர் மோட்டாரில் போகக்கூடிய அந்தஸ்து பெற்ற பிறகு குடை வாங்கவேண்டிய அவசியம் அவருக்கு ஏற்படவில்லை. இருந்தாலும் ராக்குடையான் என்ற பெயரைச் சூட்ட மேற்கண்ட கூட்டத்தார் தயங்கவில்லை.

இவ்வளவு தூரம் சுற்றுப்புறத்தாரின் அன்பையும் அபிமானத்தையும் பெற்ற ராக்குடையான் மோட்டாருக்கு விபத்தென்ருல் அது என்ன, ஒதுக்கித் தள்ளப்பட வேண்டிய விஷயமா? திருக்குறள் சுந்தரமூர்த்திக்குக்

கூடக் கொஞ்சம் சிரத்தை ஏற்பட்டது. " என்ன ராக் குடையான் மோட்டாரா ?" என்று கேட்டார்.

பொய்யொருபாகன் :—ஆமாம் ; விபத்தென்ருல் சாமான்யமானது அல்ல; பெரிய விபத்து.

மறம் வளர்த்தான்:—மோட்டார் போனுலும் பாதக மில்லையே. ஓர் ஏழைக் குழந்தையையும் அல்லவா கொன்றுவிட்டான்.

சோகநாதன்:—ஏழைக் குழந்தையா ? அட பாவமே! கடவுள் இவனைச் சும்மாவா விடப்போகிருர் ?

பொய்:—ஆசாமிக்கும் நல்ல உதை. அங்கு கூடி யிருந்தவர்கள் வெளுத்துவிட்டார்கள்.

சோக:—சொல்லுங்கள், சொல்லுங்கள். அது தெரி யாதே எனக்கு. அடி பலமான அடிதானே ?

பொய்:—அடியானுல் அடியா ? ஆள் இன்னம் ஒரு மாதத்திற்குப் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடி யாது.

சுந்தரமூர்த்தி:—சிவ சிவா ! என்ன கோரம் ! என்ன கோரம் !

ஆவலோடு ஒரு சிமிட்டா பொடியை எடுத்து உறிஞ் சிக் கொண்டு, " அவ்வளவு பலமான அடியா ?" என்று மேலும் கேட்டார்.

பொய்:—ஆமாங்க. பட்டப் பகலிலே ஒரு குழந்தை மீது மோட்டாரை ஏற்றிக் கொல்லுவதென்ருல் பார்க் கிறவர்கள் எப்படித்தான் சகித்துக் கொண்டிருப்பார்கள். சம்பவம் நடந்த இடத்திலேயே இருபது அடி நீளம் இருபது அடி அகலத்திற்கு ஒரே ரத்த வெள்ளமாய்க் கிடக்கிறது. அப்பப்பா, சகிக்க முடியவில்லை!

மறம் வளர்த்தான்:—அவனுக்கென்ன மோட்டார் வேண்டியிருக்கு ! இவன் அப்பன் பாட்டனெல்லாம் மோட்டாரில்தான் போய்க் கொண்டிருந்தார்களோ ?

சுந்தரமூர்த்தி:- அடக்கம் வேண்டும். அதற்கு மிஞ்சியது எதுவும் இல்லை. அதனால்தான் திருவள்ளுவர் கூட,

"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்"

என்று சொன்னார். பணம் வந்தால்தான் என்ன? அதனால் தலைகீழாக நடக்கலாமா?

மறம் வளர்த்தான்:-அப்படிச் சொல்லுங்கோ சுவாமிகளே. பணம் வந்துவிட்டால் தெருவில் நடக்கிற ஏழைகளை யெல்லாம் கொன்றுவிடுவதா?

இதுவரை பேசாமல் இருந்த குதர்க்கன் இச் சமயம் சம்பாஷணையில் தலையிட்டு, "என்ன திடீரென்று ஏழைகள்மீது இவ்வளவு காருண்யம் கிளம்பிவிட்டது? மோட்டார் வைத்திருப்பவனைப் பார்த்து மோட்டார் இல்லாதவர்களுக்குப் பொறாமை. விஷயம் இதுதானே? இதற்கு ஏழை கீழை என்றெல்லாம் சப்பைக்கட்டு கட்டுகிறீர்களே?" என்று ஒரு போடு போட்டார். பொய்யொருபாகனுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது.

பொ:- ஐயா, கேட்டீர்களல்லவா? பொறாமையாமே பொறாமை! யாருக்கு யார் மேலே பொறாமை?

குதர்க்கன்:- அந்தப் பொறாமை அதிகாரத்தைத் தானே இப்போ படித்துக்கொண்டிருக்கிறோம். விடிய விடிய ராமாயணம் கேட்டுவிட்டு பெருமாள் கோவிலை இடித்தானும் ஒருவன். அந்த மாதிரி பொறாமை அதிகாரத்தைப் படித்துக்கொண்டே பொறாமையில் மூழ்குகிறோமே, இது என்ன விந்தை?

பொய்யொருபாகன்:- விந்தை என்ன விந்தை? ராக்குடையான் மோட்டாரை ஓர் ஏழைக் குழந்தை மீது ஏற்றிக் கொன்றது பொய்யா? அங்கே தெருவெல்லாம் ரத்தம் சிந்திக்கிடப்பது பொய்யா? ராக்குடையானை அங்கிருந்தவர்கள் நன்றாய் உதைத்து எழுந்திருக்கவிடாமல் செய்தது பொய்யா? எது பொய்? உண்மையைச் சொன்

ஞல் அது எப்படிப் பொருமையாகும்? ஐயா, நீங்கள் சொல்லுங்கள்.

சுந்தரமூர்த்தி:- உண்மையைச் சொன்ஞல் அது எப் படிப் பொருமையாகும்? திருவள்ளுவர்கூட,

"யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற"

என்று சொல்லுகிருர்.

இச்சமயத்தில் அங்கே கொம்பேறி மூக்கன் வந்தார். சுந்தரமூர்த்தி உள்பட எல்லாரும் "வாருங்கள், வாருங் கள்" என்று சொல்லி வரவேற்ருர்கள். வந்தவுடன் அவர் சுந்தரமூர்த்தியைப் பார்த்து, "ஐயா, கேள்விப் பட்டீர்களல்லவா விஷயத்தை?" என்ருர்.

சுந்தர:- அதைப் பற்றித்தான் பேசிக்கொண் டிருக் கிருேம். நமது பாடம்கூடத் தடைப்பட்டு நிற்கிறது.

கொம்பேறி மூக்கன்:- வேண்டும், வேண்டும் அந்தப் பயலுக்கு வேண்டும். என்ன அகம்பாவம், என்ன அகம் பாவம்! இவன் சின்னப்பயலாய் இருந்தபோது எங்கள் வீட்டில் வண்டிக்காரஞய் இருந்தான். அவனுக்குக் கொஞ்சமாவது மரியாதை தெரிய வேண்டாமா? அவன் மகளுக்குக் கல்யாணம் செய்வதற்கு முன்ஞல், பழைய எஜமாஞயிற்றே என்று ஒரு வார்த்தை மரியாதைக்காக என்னிடம் கேட்க வேண்டாமா? எல்லாருக்கும் கல் யாணக் காகிதம் அனுப்பிய மாதிரி எனக்கும் கும்பலோடு கோவிந்தாவாக ஒரு காகிதம் அனுப்புகிருன். இதுதாஞ மரியாதை? பயலுக்குப் பத்துவருஷம் தீட்டி விடுவார்கள்.

மறம் வளர்த்தான் :- பத்து வருஷமா?

பொய்யொரு பாகன் :- பின்னே? ஓர் உயிரைப் போக்கிஞல் சும்மா விட்டு விடுவார்களோ?

சோகநாதன் :- அட கடவுளே.

சுந்தரமூர்த்தி :- சிவ சிவா!

இதைக் கேட்டுக்கொண்டே, அங்கு வந்த கெடுபிடி, "அதென்ன அவ்வளவுசுலபமாகப் பத்து வருஷம் என்று

சொல்லிவிட்டீர்கள் ? உயிருக்கு உயிர்தான் தண்டனை. இல்லையானால் ஒரு ஜன்மதண்டனைத் தீர்ப்பு கிடைக்கும். நேற்று மோட்டாரிலே அவன் போனபோது எவ்வளவு அகம்பாவமாய்ப் போனான் தெரியுமா ? என்னைப் பார்த்த வுடன் மோட்டாரை நிறுத்தி என்னிடம் மரியாதைக் காகப் பேசி இருக்க வேண்டாம் ? கொஞ்சங்கூட லட்சி யம் இல்லாமல் மோட்டாரை விட்டுக்கொண்டு போனான். அப்பொழுதே நான் நினைத்தேன். நான் நினைத்தது சரியாய்ப் போயிற்று. பணம் வந்துவிட்டால்தான் என்ன? இப்படியா அப்புற குப்புற நடப்பார்கள்?'' என்று வெளுத்து வாங்கினார்.

மறம் வளர்த்தான் :- ராக்குடையானுக்கு அடி பல மான அடியாமே?

கெடுபிடி :- லேசான அடி என்றா நினைக்கிறீர்கள் ? அந்த அடியிலிருந்து ஆள் பிழைப்பது அபூர்வம் என் றல்லவா பேசிக்கொள்ளுகிறார்கள்.

குதர்க்கன் :- இது என்ன காடா நாடா ? காட்டுத் தனமாக இப்படி ஒருவனைப் பலர் அடிப்பதென்றால் சர்க்கார், கோர்ட் என்பவையெல்லாம் அவசியமில்லை போலிருக்கிறதே !

மறம் வளர்த்தான் :- நிறுத்துங்களய்யா உங்கள் கோர்ட் பேச்சை. கண் முன்னால் குழந்தையைக் கொன்றவனைப் பார்த்துக்கொண்டு எல்லாரும் சும்மா நிற்பார்களாக்கும் ?

சோகநாதன் :- அப்போ ஆள் பிழைக்காதென்றா சொல்லுகிறீர்கள் ?

கெடுபிடி :- சந்தேகந்தான்.

சோகநாதன் :- அட கடவுளே !

கெடுபிடி :- அது மட்டுமல்ல ; குழந்தை இறந்த தற்கு நஷ்டஈடு வேறே கொடுக்க வேண்டியிருக்கும். மோட்டாரைப் போலீஸார் பறித்துக் கொண்டார்கள்.

பொய்யொருபாகன் :- வரட்டும், வரட்டும், அப்படி வந்தால்தானே பணச் செருக்குக் குறையும்.

சுந்தரமூர்த்தி :- தெருவெல்லாம் ரத்தமாமே, அப்படியா ?

கெடுபடி :- அதையேன் கேட்கிறீர்கள் ! அதைப் பார்த்தவர்கள் ஒன்பது நாட்களுக்கு அன்ன ஆகாரத்தை வெறுத்து விடுவார்கள். எவ்வளவு கோரம் ! காலையில் நான் அதைப் பார்த்ததிலிருந்து இன்னும் என்னல் சாப்பிடமுடியவில்லை.

இச்சமயம் அங்கே நோஞ்சான் வந்தார்.

நோஞ்சான் :- எங்கே போனாலும் இதைப்பற்றித் தான் பேசிக்கொண்டிருக்கிருர்கள். வாழ்வாவது மாயை என்பதைத் தெரியாமல் நடப்பவர்களுக்கெல்லாம் இந்தக் கதிதான். நேற்றுத்தான் 'அவசரமாக ஒரு நூறு ரூபாய் கடன் கொடப்பா' என்று கேட்டேன். இல்லையென்று சொல்லிவிட்டான். இவனிடமா நூறு ரூபாய் இல்லாமல் போயிற்று ? இன்று என்ன ஆயிற்று ?

குதர்க்க்ன் :- ஐயோ பொருமையே, உனக்கு ஓர் அழிவுகாலம் கிடையாதா ? நூறு ரூபாய் கடன் இல்லை என்று சொன்னதற்காக அவனுக்கு ஒரு கெடுதல் வந்ததைக் கண்டு சந்தோஷப்படலாமா ? எத்தனையோ பேர் மோட்டாரில் அகப்பட்டுச் சாகிருர்களே, இந்தப் பொருமை மீது யாராவது மோட்டாரை ஏற்றிக் கொல்லக் கூடாதா ?

கெடுபிடி :- ஏது வேதாந்தம் முற்றிவிட்டது போலிருக்கிறதே ?

குதர்க்கன் :- என்னய்யா, பெரிய வேதாந்தம்? ஒருவன் கஷ்டத்தில் அகப்பட்டால் அவனிடம் அனுதாபம் காட்டுவதுதான் மனித தர்மம். அதைவிட்டு அவனுக்கு வந்த நஷ்டங்களைக் கண்டு சந்தோஷப் படுவதோ கஷ்டங்களை மிகைப் படுத்திச் சொல்லி அதிக சந்தோஷமடைவதோ இவையெல்லாம் மனித குணமா ? சே, சே, உங்களுக்கு எல்லாம் திருக்குறள் வேறு கேடா ?

சோகநாதன் : சந்தோஷம் என்னய்யா இருக்கிறது இதிலே? துக்கமல்லவா என் நெஞ்சை அடைக்கிறது?

குதர்க்கன் :- உங்களுக்கு ஏதய்யா சந்தோஷம்? கல்யாண வீட்டிலேயே நீங்கள் அழுவீர்களே! உங்களைச் சொல்லவில்லை. உங்களுக்குத் துக்கம் நெஞ்சை அடைப்பது இயற்கை. மற்றவர்களைச் சொல்லுகிறேன்.

பொய்யொருபாகன் :- நீங்கள் சொல்லுவது விசித்திரமாய் இருக்கிறதே!

குதர்க்கன் :- திருக்குறளைப் படித்துக்கொண்டே வாய்மையை மறக்கலாமா?

மறம் வளர்த்தான் :- வாய்மையில் என்னய்யா குறைந்துபோயிற்று?

குதர்க்கன் :- குறைந்துபோயிற்ரு? குழைந்தைமீது யாராவது வேண்டுமென்று மோட்டாரை ஏற்றுவார்களா? குழைந்தைகள் திடீரென்று தெருவில் குறுக்கே ஓடுவது வழக்கந்தானே?

கெடுபிடி :- அதற்காக மேலே மோட்டாரை ஏற்ற வேண்டுமா?

குதர்க்கன் :- குழந்தையைக் கொல்ல வேண்டுமென்று மிருகம் கூட நினைக்காதே ஐயா. இதற்கு இப்படியா பேசுவது?

நோஞ்சான் :- நீங்கள் எப்பொழுதும் குதர்க்கம் தான் பேசுவீர்கள். எல்லாரும் ஒன்று சொன்னால் நீங்கள் புதிதாக இன்னொன்று சொல்லுவீர்கள். அது உங்கள் வழக்கம்.

குதர்க்கன் :- உள்ளதைச் சொன்னால் குதர்க்கமா?

கொம்பேறி மூக்கன் :- இவனுக்கு மோட்டார் என்ன வேண்டியிருக்கிறது, மோட்டார்? நாமெல்லாம் மோட்டாரிலா போகிறோம்? இவன் நடந்து போயிருந்தால் இந்த விபத்து ஏற்பட்டிருக்கா தல்லவா?

குதர்க்கன் :- அவரிடம் பணம் இருக்கிறது, மோட்டார் வைத்திருக்கிறார். உங்களிடமும் அவ்வளவு பணம் இருந்தால் நீங்கள் மோட்டார் வைத்துக்கொள்ளமாட்டீர்களா? மோட்டாரைப் பார்த்து இவ்வளவு பொருமையா? உங்கள் எல்லாரையும் கேட்கிறேன், இந்தத் திருவள்ளுவர் முன்பு சத்தியமாகச் சொல்லுங்கள். ராக்குடையானுக்கு ஏற்பட்ட நிலைமை உங்களுக்கு ஏற்பட்டிருந்தால் நீங்கள் இப்பொழுது பேசுவதைப் போல உங்களைப்பற்றி மற்றவர்கள் பேசினால் உங்களுக்கு எப்படி இருக்கும்?

ஒருவரும் பதில் பேசவில்லை.

சுந்தரமூர்த்தி :- திருவள்ளுவர் இதையும் ரொம்ப ஆணித்தரமாகச் சொல்லியிருக்கிறாரே!—

"ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு!"

இச்சமயம் தெருவில் ஒரு பையன் பத்திரிகை விற்றுக் கொண்டு போனான்.

குதர்க்கன் :- எல்லாரும் இருங்கள். இதோ ஒரு பத்திரிகை வாங்கி வருகிறேன். அதைப் பார்த்தால் தெரிந்துபோகும்.

பத்திரிகை வாங்கிவர குதர்க்கன் வெளியே போனார். அச்சமயம் எல்லாரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். திருக்குறள் சுந்தரமூர்த்தி தமது திருக்குறளை மூடி வைத்துவிட்டு ஒரு சிமிட்டா பொடியை எடுத்து உறிஞ்சினார்.

குதர்க்கன் வாங்கி வந்த பத்திரிகையைப் பிரித்து மோட்டார் விபத்துப் பத்திகளைப் பார்த்தார். "இதோ போட்டிருக்கிறது. வாசிக்கிறேன் கேளுங்கள்" என்று சொல்லிவிட்டு வாசித்தார். அவர் வாசித்ததாவது :—

"இன்று காலை இவ்வூர் பிரமுகர் ஸ்ரீ முனியாண்டி தமது மோட்டாரை ஓட்டிக்கொண்டு போனபோது பிரபல சைக்கிள் வியாபாரியான ஸ்ரீ சோமசுந்தரத்தின் குழந்தை திடீரென்று தெருவில் குறுக்கே ஓடியது. ஸ்ரீ முனியாண்டி ரொம்பத் திறமையாக நடந்து

கொண்டதால் குழந்தை தப்பியது. பக்கத்திலிருந்த மரத்தில் மோட்டார் மோதியதால் மோட்டாருக்குச் சொற்ப சேதம். தமது குழந்தையைக் காப்பாற்றியதற்காக ஸ்ரீ சோமசுந்தரமும் அவர் குடும்பத்தாரும் முனியாண்டியை ரொம்பவும் பாராட்டினர்கள்.''

குதர்க்கன் இதை வாசித்து முடித்ததும் நிமிர்ந்து பார்த்தார். அங்கே பொய்யொருபாகனையோ, மறம் வளர்த்தானையோ, கெடுபிடியையோ, கொம்பேறி மூக்கனையோ, நோஞ்சானையோ காணவில்லை. சோகநாதன் மட்டும் இருந்தார். "அப்போ ஒருவருக்கும் காயம் ஏற்படவில்லை என்று சொல்லுங்கள்" என்று அவர் சோகத்தோடு கேட்டார். குதர்க்கன் அவரைப் பார்த்து ஒரு விழி விழித்தார். திருக்குறள் சுந்தரமூர்த்தி,

> "தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
> தன்நெஞ்சே தன்னைச் சுடும்"

என்று மொழிந்தார்.

குதர்க்கன் :- நெஞ்சு இருக்கிறவர்களுக்கல்லவா நீங்கள் சொல்லுவது பொருந்தும்?

# பலே பாண்டியன்

பலே பாண்டியன் பலகாரமும் காபியும் சாப்பிட்டு விட்டு வெற்றிலை பாக்கு போட்டுக்கொண் டிருந்தார். அவர் குமாரி சரோஜினி வந்து, "அப்பா, அப்பா, ஜில்லா கலெக்டர் வந்திருக்கிறார், அப்பா. உங்களைப் பார்க்கவேண்டுமாம்" என்றாள். பலே பாண்டியன் அப் படியே துள்ளி எழுந்து, "ஜில்லா கலெக்டரா? என்னைப் பார்க்கவா?" என்று ஆச்சரியம் நிறைந்த குரலில் கேட்டார். சரோஜினி, "என்னப்பா இப்படி ஆச்சரியப் படுகிறீங்க? உங்களைப் பார்க்க ஜில்லா கலெக்டர் வருவது என்ன அவ்வளவு ஆச்சரியமா? அவரும் வருவார், அவருக்கு மேலே இருப்பவரும் வருவார்" என்றாள்.

இச் சமயம் அவர் மனைவி உருளம்மா அங்கே வந் தாள். "நம்ம சரோஜினி சொல்லுவதிலே என்ன தப்பு? அவ பிறந்த அப்புறம்தானே உங்களுக்கு அதிர்ஷ் டம் பெருகிச்சு. கலெக்டர் மகனுக்கு நம்ம சரோஜினி யைக் கட்டிக்கணும்னு கேக்கறதுக்கு வந்திருப்பாருங்க. இது தெரியலையா இந்த ஆம்பிள்ளைக்கு?" என்று தன் உருளை உடம்பை ஆட்டிக்கொண்டு பேசினாள்.

பலே பாண்டியனுக்குச் சந்தோஷம் தாங்கமுடிய வில்லை. எழுந்து சென்று ஜில்லா கலெக்டரை வர வேற்று உபசரித்தார். உருளம்மாவும் சரோஜினியும் கதவுக்குப் பின்னால் நின்றுகொண்டு பேச்சுக்களை ஆவ லோடு கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஊர் விவ காரங்களை யெல்லாம் பேசிய பின்பு கலெக்டர் தாம் வந்த காரியத்தைப் பற்றிப் பேச்செடுத்தார்.

கலெக்டர்:—பாண்டியரே, எனக்கு ஒரு சிறிய காரி யம் நடக்கவேண்டுமே.

பாண்டியன்:—காத்திருக்கிறேன்.

கலெக்:—ஒரு நல்ல பசுமாடு வேண்டும். நீங்கள் வாங்கினால் மலிவாய்க் கிடைக்குமென்று எல்லோரும் சொல்லுகிறார்கள்.

பாண் :—(உள்ள மகிழ்ச்சியோடு) விற்ப்வர்கள் தெரிந்தவர்களாய் இருந்தால் மலிவாய்க் கொடுக்கத் தானே செய்வார்கள்.

கலெக்:—இருந்தாலும் இவ்வளவு மலிவா ? ஜவுளிக் கடைக் கந்தசாமிக்கு ஒரு ஜோடி காளைமாடு வாங்கிக் கொடுத்தீர்களாமே. எல்லாரும் ஆயிரம் ரூபாய் மதிப் புப் போடுகிருர்கள். நீங்கள் ஐந்நூறு ரூபாய்க்கு வாங் கிக் கொடுத்தீர்களாமே ?

பாண்:—ஓ ! அதுவா ? அந்தக் காளையை விற்ற ஆசாமியும் நானும் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் ஒன் ருய்ப் படித்தவர்கள். என்பேரில் அவனுக்கு உயிர். நான் கீறிய வரையைத் தாண்டமாட்டான். ஐந்நூறு ரூபாய் வைத்துக் கொள்ளப்பா என்று சொன்னேன். அவன் ஏன் பதில் பேசப் போகிருன் ?

கலெக்:—அந்தப் பாத்திரக்கடை பரமசிவத்திற்கு இருபது மூட்டை நெல் வாங்கிக் கொடுத்தீர்களாமே? ஊரெல்லாம் மூட்டை முப்பது ரூபாயாக விற்கும்போது நீங்கள் எப்படி இருபது ரூபாய்க்கு வாங்கிவிட்டீர்கள் ?

பாண்:—ஓஹோ ! அந்தப் பண்ணையார் கொடுத்த நெல்லைச் சொல்லுகிறீர்களா? அவர் என்னிடம் பணமே வாங்க மறுத்துவிட்டார். நான்தான் கட்டாயப்படுத்தி அவரிடம் கொடுத்துவிட்டு வந்தேன்.

கலெக்:—உங்களுக்கு ‘ பலே பாண்டியன் ’ என்று ஊரில் பேர் வைத்திருப்பது ரொம்பப் பொருத்தந்தான். எந்தச் சாமானுய் இருந்தாலும் உங்கள் மூலமாக வாங் கினுல் ஒன்றுக்குப் பாதியல்லவா இருக்கிறது !

பாண்:—அதற்கென்ன, உங்களுக்கு வேண்டியவை களை யெல்லாம் நானே வாங்கித் தருகிறேன்.

கலெக்:—ரொம்ப சந்தோஷம். ஒரு பசு அவசரமாய் வேண்டும். வேளைக்கு இரண்டு படி பால் கறக்க வேண்டும்.

பாண்:—ரொம்ப சீக்கிரமாய் வாங்கித் தருகிறேன். நமக்குத் தெரிந்த ஒரு புள்ளியிடம் ஒரு கராச்சி பசு

இருக்கிறது. அதையே முடித்து வைக்கிறேன். இருநூறு முந்நூறுக்குள் முடித்துவிடலாம்.

கலெக் :—வேளைக்கு இரண்டுபடி பால்தரும் மாட்டை இருநூறு ரூபாய்க்கு முடிக்கலாமா? கராச்சிப் பசுவா? பெரிய ஆச்சரியமாய் இருக்கே?

பாண் :—அந்த ஆசாமி ரொம்ப நாளாக நம்ம வீட்டுக்கு அந்தக் கராச்சிப் பசுவை அனுப்பி விடுவேன் என்று சொல்லிக்கொண்டிருக்கிருன். நான்தான் 'பொறு அப்பா' என்று சொல்லி வருகிறேன். இப்போ ஒரு வார்த்தை சொன்னுல் போதும். சாயந்திரத்திற்குள் பசு வந்துவிடும்.

கலெக் :—உண்மையிலேயே உங்களால் இந்த ஊருக்கே பெரிய நன்மை. நான் போய் வரட்டுமா?

பாண் :—நல்லது; மகனுக்குக் கல்யாணம்னு ஒரு பேச்சு கேட்டேனே!

கலெக் :—எல்லாம் உங்கள் தயவு இருந்தால் நடப்பது என்ன பிரமாதம்?

இந்தப் பதிலைக் கேட்டு பாண்டியன் மட்டுமல்ல, உருளம்மாவும் சரோஜினியும் அடைந்த ஆனந்தம் அந்த வீட்டு முகட்டிற்கு மேலேயே போய்விட்டது. கலெக்டரை வழி அனுப்பிவிட்டு பலே பாண்டியன் வீட்டுக்குள் திரும்பினுர். அவர் மனைவி உருளம்மா அவரைப் பார்த்து, "ஜில்லா கலைக்டர் கூடவல்லவா உங்க தயவு வேணும்னு சொல்ருரு" என்று மகிழ்ச்சியோடு கூறினுள்.

சரோஜினி :—என் அப்பா தயவு வேணும்னுதானே கலைக்டரு கேட்டாரு. உன் அப்பா தயவையா கேட்டாரு?

உருளம்மா :—அடே என் பொட்டி மகளே, இவளுக்கு வந்த பெருமையைப் பார்க்கலையா? இருக்கட்டுமே, உன் அப்பாவுக்கே அந்தப் பெருமை இருக்கட்டுமே. எனக்கும்தான் அதில் பாதிப் பங்குண்டே! அது கிடக்கட்டும். எப்படித்தான் இந்த மாதிரி மலிவா நீங்கள் வாங்குகிறீர்களோ, தெரியவில்லையே.

சரோஜினி :—அது ஒரு மந்திரம்.

உருளை :—நிஜமாகவா?

பாண் :—பின்னே பொய்யா சொல்லுகிருள் உன் மகள்?

உருளை :—அப்படியாஞ அந்த மந்திரத்தை எனக்கும் சொல்லிக் கொடுங்கள்.

பாண் :—ஹோ! அவ்வளவு சுலபமாக மந்திரத்தைப் படித்துவிட முடியுமா? நாற்பது நாட்கள் அன்ன ஆகாரமில்லாமல் பட்டினி கிடந்து அஞ்சு லட்சம் உருப் போட்டாலல்லவா அந்த மந்திரம் பலிதமாகும்.

உருளை :—நாப்பது நாள் பட்டினியா? அடேயம்மா! எனக்கு வேண்டாம், அந்த மந்திரம். அப்படிப் பசியும் பட்டினியுமாக் கிடந்து ஊரிலுள்ளவர்களுக் கெல்லாம் எதற்காக இப்படி வாங்கிக் கொடுக்க வேண்டும்?

சரோ :—இல்லையாஞல் ஜில்லா கலெக்டர் உங்கள் வீட்டைத் தேடி வருவாரோ?

உருளை :—அது நிசந்தான்,

பலசரக்குக் கடை பார்வதிநாதன் ஒரு நாள் பலே பாண்டியனின் பிரதாபத்தைப் பற்றித் தமது கடையில் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தார். "250 ரூபாய் வேண்டுமென்று என்னிடம் சொன்ன பேர்வழி அவரிடம் 150 ரூபாய்க்கு அதே சைக்கிளை விலைக்குக் கொடுத்திருக்கிருனென்ருல் இதற்கு என்ன சொல்கிறீர்கள்?" என்று ஒரு போடு போட்டார்.

சாந்தப்பன் :—அவரிடத்தில் அருள் கிருள் இருக்குமோ?

பூசைப்பிள்ளை :—பௌர்ணமி தோறும் இரவு பூராவாக பூஜை செய்வதாக நான் கேள்விப்படுகிறேன்.

அல்லாடி :—ஏதாவது சித்து இருக்கும். இல்லையாஞல் மனிதஞல் இந்தக் காரியங்களைச் செய்ய முடியுமா?

பார்வதிநாதன் :—இதிலே இன்ஞெரு விஷயத்தைக் கவனித்தீர்களா? இம்மாதிரி குறைவான விலைக்கு வாங்கு

கிருரே; இந்தச் சாமர்த்தியத்தைச் சொந்தத்திற்கு அவர் உபயோகித்துக் கொள்வதில்லே.

பூசைப் பிள்ளே :—அது நியாயந்தானே. சொந்தத்திற்கு உபயோகப்படுத்தினுல் அப்புறம் அந்தச் சித்து பலிக்காமல் போய்விடும்.

சாந்தப்பன் :—இந்தச் சித்துவை எப்படியாவது அவரிடமிருந்து தெரிந்து கொள்ளவேண்டுமே.

அல்லாடி:—எனக்கு மட்டும் அந்தச் சித்து தெரிந்தால்...?

சாந்தப்பன் :—தெரிந்தால் என்ன செய்வீராம்?

அல்லாடி :—என்ன செய்வேனே? ஒரே வருஷத்தில் லட்சக்கணக்காய்த் தட்டிவிடுவேன்.

அல்லாடி ஒரு நாள் பலே பாண்டியனேத் தேடி வந்தார். அல்லாடியிடம் விவசாயத்துக்காக இருந்த இரண்டு காளேகளில் ஒன்று செத்துப்போயிற்று. கையில் நூறு ரூபாய்தான் இருந்தது. அதைக் கொண்டு ஒரு காளே வாங்க அல்லாடிக்கொண் டிருந்தார். அதனுல் பாண்டியனிடம் வந்து அந்த நூறு ரூபாயைக் கொடுத்து ஒரு காளே வாங்கிக் கொடுக்கும்படி கேட்கலாம் என்று நினேத்தார். அச்சமயம் பாண்டியன் வீட்டில் மைனர் மாணிக்கம் பேசிக்கொண்டிருந்தார். "காதில் போட்டிருக்கிற வயிரக் கடுக்கன் பலே ஜோராய் இருக்கிறதே, புதிதாய் வாங்கினீர்களா?" என்ருர் மைனர் மாணிக்கம்.

பாண்டியன் :—ஆமாம், நேற்று அபேஸ்லாலா கடைக்குப் போயிருந்தேன். எப்பவோ ஒரு காலத்தில் என்னவோ அவனுக்கு உதவி செய்தேனும். அதனுல் இந்தக் கடுக்கனேக் கண்டிப்பாக வாங்கிக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினுன். இனமாக இவனிடம் எதற்காக வாங்கவேண்டுமென்று மறுத்துவிட்டேன். அப்போ நீங்கள் கொடுப்பதைக் கொடுங்கள் வாங்கிக் கொள்கிறேன் என்ருன். ஜேபியில் ஐந்நூறு ரூபாய் இருந்தது. அதைக் கொடுத்தேன். இவ்வளவு வேண்டாம் என்ருன். நான் முடியாது என்று மறுத்துவிட்டேன். அப்புறம் அவனே காதுகளில் மாட்டி விட்டான்.

மைனர் :—உங்கள் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்? அது என்ன ஒரு காரட் இருக்கும் போலிருக்கே?

பாண் :—ஒரு கார்ட்டா? ஒன்றரை காரட்! புளூ ஜாக்கர். ஆயிரம் ரூபாய்க்கு மேலே மதிப்புப் போடுகிறார்கள்.

மைனர் :—மாமா, மாமா, எப்படியாவது எனக்கு நீங்கள் அதைக் கொடுக்க வேண்டும். நானும் ரொம்ப நாளாக வயிரக் கடுக்கன் வாங்க ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நல்லதாகக் கிடைக்கவில்லை. நீங்கள் தயவு வைக்கவேண்டும்.

பாண் :—சரி சரி, மாப்பிள்ளை, இவ்வளவு ஆசைப்பட்டு நீங்கள் கேட்கும்போது நான் எப்படி மறுப்பது? எடுத்துக் கொள்ளுங்க. என்ன அல்லாடி, எங்கே வந்தீங்க?

அல்லாடி :—உங்க தயவுக்காகத்தான் வந்தேன். மைனருக்கு அதிர்ஷ்டம் கிடைத்த மாதிரி எனக்கும் கிடைக்கும்படி நீங்கள்தான் செய்ய வேண்டும். நூறு ரூபாய் இதோ வைத்துக் கொள்ளுங்கள். எப்படியாவது எனக்கு ஒரு காளைமாடு கிடைக்க நீங்கள் அருள்புரிய வேண்டும். எவனைக் கேட்டாலும் இருநூறுக்கு மேல் சொல்லுகிறான்.

பாண் :—(சலித்துக் கொண்டு) அட என்னய்யா இது? பொழுதுவிடிந்தால் இதுதானா வேலை? என்னாலே இன்னும் ஒரு மாதத்துக்கு ஒன்றும் செய்யமுடியாது. என் வேலை தலைக்குமேலே இருக்கிறது. போய் வாருங்கள்.

அல்லாடி:—அப்படிச் சொல்லக் கூடாது. பணக்காரர்களுக்கு நீங்கள் உதவி செய்தாலும் செய்யாவிட்டாலும் என்னைப் ·போன்ற ஏழைகளுக்குத்தான் நீங்கள் கட்டாயம் செய்யவேண்டும்.

பாண்டியன் :—(கோபத்தோடு) இதில் பணக்காரர் என்ன, ஏழை என்ன வந்ததய்யா?எனக்குச் சௌகரியம் இல்லையென்றால் இல்லைதான். சும்மா பேசிப் பிரயோ

ஜனமில்லை. சரி, மைனர்வாள், நீங்கள் போய் வருகிறீர்களா? எனக்குக் கொஞ்சம் அவசரமான வேலை இருக்கிறது.

அல்லாடியைத் திரும்பிப் பார்க்காமலேயே பாண்டியன் உள்ளே போய்விட்டார். அல்லாடிக்கு மிகவும் கோபம் வந்தது. "இவனிடம் அருள் இருந்தாலென்ன? சித்து இருந்தாலென்ன? ஏழைகளுக்கு உதவ இவனுக்கு மனமில்லை. பணக்காரர்களை காக்கா பிடிப்பதில் தான் அவனுக்கு விருப்பமிருக்கிறது. அட கடவுளே, இது என்ன ஜன்மம்?" என்று புலம்பிக்கொண்டே தெரு வழியாகப் போனார். எதிரே பண்ணையார் வீட்டு வேலைக்காரன் பரமசிவன் வந்துகொண்டிருந்தான். அவன் வருவதைக் கூடக் கவனிக்காமல் உளறிக் கொண்டே போனார்.

பரமசிவம் அல்லாடியின் கையைப் பற்றி, "என்ன, பகல் சொப்பனம் காண்கிறீங்களா?" என்று கேட்டான். அப்புறம்தான் அல்லாடிக்கு விழிப்பு வந்தது,

"என்னப்பா செய்கிறது? அந்தப் பாவியிடம் போய் ஒரு காளைமாடு வாங்கிக் கொடுக்கச் சொன்னேன். அவனுக்கு வேலையிருக்கிறதாம். முடியாது என்று சொல்லி விட்டான். நமக்கெல்லாம் செய்வானா? பண்ணையார், கலெக்டர், மைனர் இந்த மாதிரி பெரிய புள்ளிகளுக்குத் தான் செய்வான்" என்று சோகத்தோடு கூறினான்.

பரமசிவம் :—யாரு, பாண்டியரைச் சொல்லுகிறீர்களா? அவரைப் பார்த்து வரத்தான் போகிறேன். பண்ணையார் ஐயா பார்த்துவரச் சொன்னாங்க. அவங்க சமாசாரத்தை விட்டுத் தள்ளுங்க, பெரிய டம்பம்!

அல்லாடி :—என்ன, டம்பம் என்று சொல்லுகிறாய்? சித்து இல்லை அவரிடம்? அவர் செய்வதெல்லாம் சித்து அப்பா! தெரியாமல் ஒன்று கிடக்க ஒன்று பேசாதே!

பரம:—அந்தச் சித்தெல்லாம் எனக்குத் தெரியுமுங்க. உங்களுக்கு வேண்டுமானால் சொல்லித் தருகிறேன்.

அல் :—(ஆவலோடு) உனக்குத் தெரியுமா? அப்போ எனக்குச் சொல்லிக்கொடுக்க மாட்டாயா?

பரமசிவம் :—கண்டிப்பாய் சொல்லித்தாரேன். சாயந்தரமா ஆற்றங்கரைப் பிள்ளையார் கோயில் பக்கமாக வாருங்கள்.

அந்தி மயங்குகிற வேளையில் பிள்ளையார் கோவிலுக்கு முன்னால் பண்ணையார் வீட்டுப் பரமசிவம் நின்று கொண்டிருந்தான். தூரத்தில் அல்லாடி வருவதைப் பார்த்ததும் எதிரே போய் அழைத்து வந்தான்.

அல்லாடி :—தேங்காய், பழம், கற்பூரம் எல்லாம் கொண்டு வந்திருக்கிறேன்.

பரம :—முதலில் நான் சொல்லுகிறபடி செய்ய வேண்டும். நான் எந்த இடத்தில் உங்களை உட்கார வைக்கிறேனே அங்கேயே அசையாமல் இருக்க வேண்டும். உங்கள் கண்ணால் எதைப் பார்த்தாலும் சரி, காதால் எதைக் கேட்டாலும் சரி, உங்கள் வாயிலிருந்து ஒரு வார்த்தை வரக்கூடாது. மௌனமாய் இருக்க வேண்டும். அப்படியானால்தான் சித்து பலிதமாகும். தெரிகிறதா?

அல்லாடி :—அப்படியே செய்கிறேன். பாம்பு வந்து காலைச் சுற்றினாலும் சரி, நான் வாய் திறப்பதில்லை. போதுமா? எப்படியாவது எனக்குச் சித்து கிடைத்தால் போதும்.

பரம :—பின்னாலே படித் துறையில் யார் இருக்கிறார்கள் தெரியுமா?

அல் :—தெரியாதே?

பரம :—பண்ணையார் எஜமானும் பலே பாண்டியனும் இருக்கிறார்கள்.

அல்லாடி :—இந்த நேரத்திலா? படித்துறையிலா? ஒருவேளை பண்ணையாருக்குச் சித்து ரகசியத்தைச் சொல்லிக் கொடுக்கிறாரோ?

பரம :—என்ன விஷயம் என்பதை நாமே பார்த்து விடுவோமே. என்ன நான் சொன்னது ஞாபகம் இருக்குதா? மூச்சு விடக்கூடாது!

அல்லாடி :—சரி.

இருவரும் அரச மரத்தடியில் ஒரு பக்கமாய் இருந்தார்கள். பண்ணையாரும் பாண்டியனும் மெதுவான குரலில் பேசிக்கொண் டிருந்தார்கள்.

பண்ணையார் :—அவ்வளவு அவசரம் என்னங்க பணத்திற்கு? உங்கள் நிலம் ரொம்ப அருமையான நிலமாயிற்றே. அதையா விற்க வேண்டும் என்று சொல்லுகிறீர்கள்?

பாண்டியன் :—என்ன செய்வது? இந்தக் கடன் பிடுங்கல் என்ருல் சமாளிக்க முடியாது. அவர்கள் கோர்ட்டுக்குப் போனுல் மானம் போய்விடும்.

பண்ணையார் :—அப்படி என்ன கடன்? யாருக்குக் கொடுக்க வேண்டும்?

பாண்டியன்:—காளை மாட்டுக்காரன், சைகிள் கடை, அபேஸ்லாலா, உங்கள் கடன் இன்னும் எத்தனையோ!

பண்ணையார் :—இது என்னத்திற்கு இந்த வம்பு? சும்மா இருக்காமல் சாமான்களை வாங்கிப் பாதிவிலைக்குக் கொடுப்பானேன் ? இப்போ அருமையான நிலத்தை விற்பானேன்?

இச்சமயம் அல்லாடி ஒரு துள்ளு துள்ளினுர். "அடபாவி! இதுதானு உன் சித்து?" என்ருர். பலே பாண்டியனும் ஒரு துள்ளுத் துள்ளி "அடபாவி, என் மானம் போயிற்றே!" என்று கத்தினுர்.

# ஓடிய பரிசாரகன்

தம் நண்பர் பல்லழகனோடு தண்டபாணி சாப்பிட்டுக் கொண்டிருந்தார். பல்லழகனுக்கு அன்று விருந்து. வியாபார விஷயமாக வந்திருந்த பல்லழகனைத் தண்டபாணி தற்செயலாகக் கடைத்தெருவில் பார்த்தார். கட்டாயப்படுத்தி அன்று விருந்து சாப்பிட வரும்படி செய்து விட்டார். பரோபகார வேலைகளைத் தவிர குறிப்பிட்ட வேலை எதுவும் இல்லாமல் தண்டபாணி காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தார். வெளியூர்களிலிருந்து வருகிறவர்களுக்கோ, வெளியூர்களில் இருப்பவர்களுக்கோ, பட்டணத்தில் நடக்கவேண்டிய காரியங்களைப் பார்த்துக் கொடுப்பதுதான் அவருடைய பரோபகார வேலை.

அந்த வேலைக்காகச் சன்மானம் வாங்கும் வழக்கமே அவரிடம் கிடையாது. பணம் வேண்டியிருந்தால் நண்பர்களிடமோ உதவி செய்தவர்களிடமோ கடனாகத்தான் வாங்கிக் கொள்வார். அவருக்குக் கொடுக்கும் கடன் யானை வாயில்போன கரும்புதான் என்பதை எல்லோரும் அறிவார்களாதலால், கணக்குப் பார்த்து நஷ்டமில்லாத வகையில்தான் கடன் கொடுப்பார்கள். அவரது பிரதாபங்களைக் கேட்டவர்களில் பல்லழகனும் ஒருவர். தந்த சுந்தரம் என்று அவர் பெற்றோர்கள் பெயரிட்டிருந்தார்கள். தமிழ் வளர்ச்சியில் தீவிர அக்கறை அவருக்கு ஏற்பட்டபடியால் பெயரையும் தனித் தமிழாக்கிவிடவேண்டுமென்று தீர்மானித்துப் பல்லழகன் என்று வைத்துக் கொண்டார். பாயஸம், வடை, உருளைக் கிழங்குக் கறி, முருங்கைக்காய் சாம்பார், மோர்க் குழம்பு சகிதம் விருந்து தடபுடலாய் நடந்துகொண்டிருந்தது.

பல்லழகன்:—நான் எப்பொழுதும் வெந்நீர்தான் சாப்பிடுவேன். அதுவும் சாப்பிடுகிற சூட்டில் இருக்க வேண்டும். பச்சைத் தண்ணீர் கொஞ்சம்கூடக் கலக்கக் கூடாது. துளி கலந்தால்கூட எனக்குத் தெரிந்துவிடும்.

தண்டபாணி:—அப்படியா ?

பல்:—ஆமாம்.

தண்:—அடே பரமசிவம், ஐயா சொல்லுவதைக் கேட்டாயா ? கொஞ்சங்கூடப் பச்சைத் தண்ணீர் கலக்காமல் பக்குவமாய் வெந்நீர் கொண்டுவந்து கொடு.

பரமசிவம் அடுக்களையில் போய்ப் பார்த்தான். அடுப்பில் போட்டிருந்த வெந்நீர் தளைத்துக் கொண்டிருந்தது. பாதிக் கோப்பை வெந்நீரை எடுத்து பாதிக் கோப்பை பச்சைத் தண்ணீரை அதிலே கலந்து சீரகத்தையும் கொஞ்சம்தட்டிஅதிலே போட்டுப் பல்லழகனிடம் கொண்டுவந்து வைத்தான். ஒரு மடக்கு அவர் குடித்ததும் " ரொம்ப பக்குவமாய் இருக்கிறது " என்று சொல்லிக் கொண்டே பூராவையும் குடித்துவிட்டுக் கோப்பையைக் கீழே வைத்தார்.

" இதில் ஒரு துளிகூட பச்சைத் தண்ணீர் கலக்கவில்லை. பரமசிவம், நீ ரொம்பக் கெட்டிக்காரனப்பா. பச்சைத் தண்ணீர் கலந்திருந்தால் இதற்குள் எனக்குத் தும்மல் வந்திருக்கும்.என்னை யாரும் ஏமாற்ற முடியாது" என்று சந்தோஷமாய்ச் சொன்னார்.

சாப்பாட்டு முடிவில் தண்டபாணி கொஞ்சம் பிறண்டைத் துவையல் சாப்பிடுவது வழக்கம். அவருக்குள்ள வாயு உபத்திரவத்திற்கு அது ரொம்ப நல்லதென்று வைத்தியர் சொல்லியிருந்தார். துவையலை எடுத்து நாக்கில் கொஞ்சம் தடவினாரோ இல்லையோ " அடேயப்பா " என்று ஒரு கூச்சல் போட்டு இடது கையால் தொண்டையை பிடித்தார். பல்லழகன் திடுக்கிட்டு, " என்ன, என்ன " என்று கேட்டார். தண்டபாணி கண்களை மேலே செருகியவாறு பின்னாலுள்ள சுவரில் சாய்ந்து கொண்டு "விஷம், விஷம்" என்று மெதுவாகச் சொன்னார்.

'விஷமா ?' என்று பல்லழகன் ஆச்சரியத்தோடு கேட்க, தண்டபாணி தலையை ஆட்டினார்.

பல்லழகன்:—எப்படி வந்தது விஷம் ?

தண்டபாணி:-சமையல்காரப் பயல். சமையல்காரப் பயல் ! என்னைக் கொல்லுவதற்காக விஷம் போட்டிருக்கிறான். அவனை விடாதீர்கள். போலீசுக்குச் சொல்லுங்கள்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சமையல் பரமசிவம் "விஷமா ? போலீஸா ? என்ன அநியாயம்? நான் என்ன செய்வேன் ?" என்று சொல்லிக்கொண்டே அங்கிருந்து ஒரே ஓட்டமாய் வீட்டைவிட்டு வெளியே ஓடிவிட்டான். எச்சிற் கையோடு அவனைப் பிடிக்க ஓடுவதோ, தண்டபாணியை அந்த நிலையில் விட்டு விட்டுப் போவதோ சரியல்ல என்று பல்லழகன் நினைத்த படியால் பரமசிவத்தைப் பின்தொடரவில்லை. தண்டபாணியும் பரமசிவம் ஓடிப்போனதைக் கவனித்தார். தலையை மெதுவாக ஆட்டிப் பல்லழகனை அழைத்தார். "அந்தப் பயல் ஓடிப் போய்விட்டானோ ?" என்று மெதுவான குரலில் கேட்டார்.

"ஆமாம்" என்று ஏமாந்த குரலில் பல்லழகன் சொல்லிவிட்டு, "அந்தப் பயலை நான் விடப்போவதில்லை. இப்பொழுதே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகிறேன்" என்றார்.

தண்ட :—வேண்டாம், வேண்டாம். போனால் போகட்டும். போலீசுக்குப் போகவேண்டாம்.

பல்ல :—என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள் ? விஷம் போட்ட பயலைச் சும்மா விடுவதா ?

தண்ட :—முட்டாப் பயல். தள்ளுங்கள்.

பல்ல:—ஆ! தன்னைக் கொல்ல வந்த பசுவைக்கூடக் கொல்லலாமென்று சாஸ்திரம் சொல்லுகிறது. இந்தச் சமையல்காரனைச் சும்மாவிடக் கூடாது.

தண்ட:—சாஸ்திரம் கிடக்கட்டும். அவனை ஜெயிலில் போடுவதால் நமக்குக் கிடைக்கிற லாபம் ?

பல்ல :—இனி மற்றவர்களுக்கு, விஷமிடாமலாவது இருக்கலாமல்லவா ?

தண்ட:—இனிமேல் சமையல் வேலைக்கே போக மாட்டான். கவலைப்படாதீர்கள்.

பல்ல:—அவன் எப்படியும் போகட்டும். நான் போய் டாக்டரைக் கூட்டி வருகிறேன்.

தண்ட:—வேண்டாம், வேண்டாம்.

பல்ல:—வேண்டாமா? உடம்புக்குள் விஷம் போய் வேலை செய்ய ஆரம்பிக்கு முன்பு சிகிச்சை செய்ய வேண்டாமா?

தண்ட:—நீங்கள் சொல்லுவது சரி. ஆனால் என் உடம்பிற்குள் விஷமே போகவில்லை.

பல்ல:—அதெப்படி உங்களுக்குத் தெரியும்?

தண்ட:—வெற்றிலைபாக்குப் போடுகிறபோது புகையிலை போடுகிறவர்கள் அந்தச் சாற்றை விழுங்குகிறார்களா? இல்லை. புகையிலையை வாயில் போட்டார்களோ இல்லையோ உடனே அவர்கள் தொண்டை வாக்குவம் பிரேக் மாதிரி அடைத்துக் கொள்ளும். அதே மாதிரி விஷம் என்று தெரிந்தவுடன் என் தொண்டையும் அப்படி அடைத்துக் கொள்ளும். அந்த மாதிரிப் பழக்கம்.

பல்ல:—அடேயப்பா, ரொம்ப ஆச்சரியமாயிருக்கே!

தண்ட:—இல்லாமலா நான் இந்த ஊரில் காலந் தள்ள முடியும்?

பல்ல:—அப்போ, டாக்டர் வேண்டாம் என்று சொல்லுகிறீர்கள்?

தண்ட:—வேண்டவே வேண்டாம்.

பல்ல:—இந்தப் பரமசிவம் பயலுக்கு என்ன கெட்ட காலம்? ஏன் விஷம் வைக்கிறான்?

தண்ட:—அவன் என்ன பொம்மைதானே! ஆட்டுவிக்கிறவன் வேறே. அவன் ஆட்டுகிறபடி இவன் ஆடுகிறான்.

பல்ல:—அப்படி உங்கள் மீது துவேஷம் கொள்ளுகிறவர்கள் யார்?

தண்ட :—யாரா ? ஹும். அந்தப் பார்த்தசாரதி வழக்கிலே நான் எடுத்துக்கொடுத்த பாயிண்டுகளை வைத்துக்கொண்டு வக்கீல் பேசியதால்தானே பார்த்த சாரதி தோற்ருன். அதிலே அவனுக்கு ஐந்து லட்சம் போச்சல்லவா ? அன்றைக்கே அவன் வர்மம் கூறினுன். 'ஒரு வருஷத்திற்குள் என்ன நடக்கிறது பார்' என்ருன். நாளையோடுதான் ஒரு வருஷம் முடிவாகிறது. அதனுல்தான், நானும் கொஞ்சம் ஜாக்கிரதையாய் இருந்தேன். இப்போ வேண்டுமானுலும் பார்த்தசாரதி வீட்டில் போய்ப் பாருங்கள். இந்தப் பரமசிவம் அங்கே தான் இருப்பான்.

போலீசுக்கும் சொல்லக்கூடாதென்கிருர், டாக்டரும் வேண்டாம் என்கிருர், இது என்ன பெரிய ஆச்சரியமா யிருக்கிறதே என்று பல்லழகன் யோசனை செய்து கொண்டிருந்தார். தண்டபாணி கை அலம்பிவிட்டு மெதுவாக நடந்து சென்று படுக்கையில் படுத்தார். பல்லழகனைப் பக்கத்தில் அழைத்து "மாலை ஏழு மணிவரையில் நிம்மதியாக நான் தூங்கினுல்தான் உடம்பு சரியாகும்" என்ருர்.

பல்ல :—தாரளமாய்த் தூங்குங்களேன்.

தண்ட :—வீட்டில் ஒருவரும் இல்லையே ?

பல்ல :—நீங்கள் விழிக்கிற வரையில் நான் இருக் கிறேன்.

தண்ட :—(மறுபடியும் மெதுவான குரலில்) உங்க ளிடம் பணம் ஏதாவது இருக்கிறதா ? இன்று முதல் தேதி. பால்காரன், பலசரக்குக் கடைக்காரன் எல்லோரும் பணத்திற்கு வருவார்கள். சாப்பிட்டுவிட்டு ஒரு புள்ளி யிடம் போய் வாங்கி வரலாம் என்று நினைத்திருந்தேன். இப்படி ஏற்பட்டுவிட்டதே !

பல்ல :—அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்.

தண்ட :—வருகிறவர்களுக்குப் பணம் கொடுத்து விடுங்கள். நாளை நான் தருகிறேன்.

பல்ல :—அப்படியே செய்வோம்.

மாலையில் முதலில் பால்காரன் வந்தான். 75 ரூபாய் பாக்கி என்ருன்; பல்லழகன் அதைக் கொடுத்தார். மொத்தமாய் 75 ரூபாய் கிடைத்தது அவனுக்கே ஆச்சரியமாய் இருந்தது. அப்புறம் பலசரக்குக் கடைக் காரன். அவனுக்கு இரு நூறு ரூபாய் பாக்கி. இப்படி யாக 475 ரூபாய் வரையில் பல்லழகன் கொடுத்து முடித்தார்.

பட்டுவாடா முடிந்த சமயத்தில் அங்கே ஆறுமுகம் வந்து சேர்ந்தார். ஆறுமுகமும் பல்லழகனும் ஒருவரை ஒருவர் விழித்தார்கள். அப்புறம், "ஐயா இல்லையோ?" என்று கேட்டார்.

பல்ல :—தூங்குகிருர்கள்.

ஆறு :—தூங்குகிருர்களா? இந்த நேரத்திலா? நீங்கள் அவாளுக்கு என்ன முறையோ?

பல்ல :—முறை ஒன்றும் இல்லை.

ஆறு :—பாக்கிக்காரர்களுக்குப் பணம் பட்டுவாடா செய்வதைப் பார்த்தேன். அதனுல் நெருங்கின உறவாய் இருக்குமோ என்று நினைத்தேன்.

பல்ல :—எங்கள் இருவருக்கும் ஊர் பசல்பாக்கம். இவர்களைப் பற்றி ரொம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஆறு :—அப்படியானுல் முன்னுல் பழக்கம் கிடை யாதோ?

பல்ல :—நேற்றுத்தான் முதல் முதலாக இவாளைக் கடைத்தெருவில் சந்தித்தேன். என் தகப்பனுரும், அவரும் உயிருக்குயிரான நண்பர்களாய் இருந்ததால் நான் கண்டிப்பாய் இன்று சாப்பிட வரவேண்டும் என்று வற்புறுத்தினுர். அதனுல் வந்தேன்.

ஆறு :—புரிஞ்சுது, புரிஞ்சுது. காலையில் இரண்டு ரூபாய் கடனுக வேண்டும் என்று என்னிடம் கேட்டுக் கொண்டிருந்தாரே அதற்குள்ளாக எப்படிடா நூற்றுக்

கணக்காக வந்துவிட்டது என்றல்லவா யோசித்துக் கொண்டிருந்தேன். நான் போய் வருகிறேன். என் பெயர் ஆறுமுகம். நான் வந்தேன் என்று சொல்லுங்கள். பத்து ரூபாய் கடன் வாங்கி ஆறுமாதமாயிற்று. இன்று, நாளை என்று எத்தனை வாய்தாப் போடுகிறுர் ஆசாமி ?

ஆறுமுகம் பேசியதைக் கேட்ட பல்லழகனுக்குக் கோபம் வந்தது. பணக்கஷ்டம் யாருக்கும் வருகிறது தானே? அதற்கு இப்படியா பேசுவது? அற்பர்கள் என்று நினைத்தார். பத்து ரூபாயை ஆறுமுகத்திடம் வீசி எறியலாமா என்று பார்த்தார். என்ருலும் தண்டபாணியைக் கலந்து கொள்வது நல்லது என்று நினைத்து சும்மா இருந்துவிட்டார். "மனிதன் உயிர் பிழைத்தது ஆச்சரியம். இச்சமயம் இப்படியா பேசுவது?" என்று மனம் குமுறினுர். இந்த நிலையில் வீட்டு வேலைக்காரி செல்லம்மாள் வந்து வீட்டுக்குள் போனுள். அடுக்களை வரை போய்விட்டு உடனே திரும்பிவந்து "சமையல்கார ஐயாவை எங்கே காணும்? எச்சில் இலைகள், சமையல் சாமான்கள் எல்லாம் அப்படியப்படியே கிடக்கே?" என்று ஆச்சரியமாகக் கேட்டாள்.

பல்ல :—திடீரென்று ஓடிப்போய்விட்டான்.

செல் :—ஓடிப்போனுரா? அப்படிப் போகக்கூடியவரில்லைங்களே. தங்கமானவர் ஆச்சே. இன்னிக்குக் காலையில் கூட நான் பார்த்தேன். வேலையை விட்டுப் போவதாகச் சொல்லவில்லையே.

பல்ல :—அவன் செய்த வேலையை ஏன் கேட்கிறே!

செல் :—ஹாங்! அப்படி என்ன செய்து போட்டாரு?

பல்ல :—அதையெல்லாம் வெளியிலே சொல்லக் கூடாது.

செல் :—ஹாங்! நில்லுங்க, நில்லுங்கோ. இன்னிக்கு இங்கிலீஷ் மாதம் என்ன தேதி சொல்லுங்கோ.

பல்ல :—முதல் தேதி.

செல் :—முதல் தேதியா? சரி, சரி, இப்போ தெரிஞ்சுது. இன்னிக்குச் சம்பளம் வாங்குகிற தேதி

யில்ல ? அந்தப் பாவியிடம் அப்பவே சொல்லியிருந்தேன்.

பல்ல :—அப்போ சம்பளத்தை வாங்கிக்கொண்டு ஓடிப்போய்விட்டான் என்று சொல்லுகிருயா ?

செல் :—அதைப்பத்தி உங்களுக்கென்ன ? எத்தனை சமையல்காரன் வந்தாலும் சம்பளம் வாங்குகிற தேதியில் இப்படித்தான் கலாட்டாவாய் இருக்கிறது.

செல்லம்மாள் மேலே பேசாமல் வீட்டுக்குள் போய் விட்டாள். பல்லழகனுக்கு எதுவும் புரியவில்லை. சம்பளத்தையும் வாங்கிக் கொண்டு எதற்காக விஷம் இடுகிருன் என்று சிந்தித்தார். சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு சிந்தித்தபடியால் சிந்தனை மூளைக்கு அதிக வேலையைக் கொடுத்து, அதனுல் மூளை களைப்படைந்து, பல்லழகனைத் தூக்கத்தில் ஆழ்த்திவிட்டது.

“ ஐயா, ஐயா ” என்று ஒருவன் போட்ட சப்தத்தில் பல்லழகன் திடுக்கிட்டு விழித்தெழுந்தார். “ யாரப்பா நீ ?” என்று கேட்டார்.

வந்தவன் :—நாஞ ?

பல்ல :—உன்னைத்தானப்பா கேட்கிறேன்.

வந்தவன் :—என்னைத் தெரியாதவங்க இந்த ஊரிலேயே கிடையாதே. நீங்கள் ஊருக்குப் புதிது போல் இருக்கிறது.

பல்ல :—அவ்வளவு பிரசித்தமானவஞ ?

வந்தவன் :—பின்னே ? எங்க ஐயாவை டெலிபோனில் கூப்பிடுகிறவர்கள் கூட முதலில் ‘ நாஞ பேசுகிறேன் ’ என்று கேட்பார்கள். நீங்கள் என்னடா என்ருல் ‘ நான் யாரு ?’ என்று கேட்கிறீர்கள்.

பல்ல :—அதெல்லாம் இருக்கட்டும் அப்பா. நீ யார் என்று சொல்லிவிடேன்.

வந்தவன் :—நான்தான் எங்க ஐயாவுக்கு முக்கியமான ஆள்.

பல்ல :—உங்க ஐயா யார் ?

வந்தவன் :—அவா தான் என் எஜமானர். அவா கூட...உங்களுக்குத் தெரியாதா ? ஹாங் !

பல்ல :—பெய்ரைச் சொல்லாமல், என்னெல்லாமோ வளைத்துப் பிடித்துப் பேசுகிருயே. உன் ஐயா பெயர் என்ன? சொல்லு.

வந்தவன் :—அவங்க பெயர் பார்த்தசாரதி.

பல்ல :—(பதறி) யாரு ? பார்த்தசாரதியா ?

வந்தவன் :—அவங்களேதான். ஏன் இப்படிப் பதறுகிறீங்க ?

பல்ல :—சரியப்பா ? என்ன விஷயம் சொல்லு.

வந்தவன் :—அங்கே நம்ம ஐயா வீட்டிலே இருந்த பரமசிவம் இருக்காரு.

பல்ல :—யாரு பரமசிவமா ?

வந்தவன் :—ஆமாங்க. ஏதோ அவரைப்பற்றிப் போலீசுக்குச் சொல்லணும்னு இந்த வீட்டு ஐயா சொன்னுகளாம். அதனுலே அங்கே வந்து பரம சிவத்தைக் கூட்டிக்கிட்டு போகட்டும் என்று ஐயா சொல்லிவரச் சொன்னுங்க.

இதைக் கேட்டதும் பல்லழகன் திகைப்படைந்து போனுன். பரமசிவத்தைப் பார்த்தசாரதிதான் தூண்டி விட்டு விஷம் வைக்கச் சொல்லி இருப்பார் என்று தண்டபாணி சொன்னுர். இப்போ பார்த்தால் பார்த்த சாரதியே பரமசிவத்தைப் பிடித்துவைத்து, போலீசுக்குக் கொண்டுபோக ஏற்பாடு செய்திருக்கிருர். அதனுல், பார்த்தசாரதி மேல் குற்றம் இல்லை என்றும், அவர் நல்லவர் என்றும் பல்லழகனுக்குத் தோன்றியது. தூங்குகிற தண்டபாணியை எழுப்புவதைவிட தாமே ஏன் பரமசிவத்தைப் போலீசுக்குக் கொண்டுபோகக் கூடாது என்று நினைத்தார். வந்தவனைப் பார்த்து, "உன் பெயர் என்னப்பா ?" என்று கேட்டார்.

வந்தவன் :—துலுக்கானம்.

பல்ல :—துலுக்கானம், நானே வருகிறேனப்பா.

துலுக் :—நீங்க வேண்டாங்க. அந்த ஐயாதான் வரணும்.

பல்ல :—ஏன் ? அங்கே வேறு யார் இருக்கிறார்கள் ?

துலுக் :—யாரா ? இன்னும் நாலைந்து சமையல்காரர்கள் இருக்கிறார்கள்.

பல்ல :—சமையல்காரர்களா ? நாலைந்து பேர்களா ?

துலுக் :—ஆமாங்க. இங்கே ஐயாவிடம் முன்னாலே வேலை பார்த்த சமையல்காரர்கள் எல்லாம் அங்கே இருக்கிறார்கள். எல்லாரையும்தான் போலீசுக்குக் கொண்டுபோகப் போகிறார்கள்.

பல்ல :—எல்லாரையும் எதற்காகப்பா ?

துலுக் :—இதுதானேங்க இந்த வீட்டு ஐயாவுக்கு வழக்கம். சமையல்காரங்க இரண்டு மூன்று மாதம் வேலை பார்த்து சம்பளத்துக்கு நெருக்கினா, அவ்வளவுதான். விஷம் போட்டுட்டான் என்று கத்துவார். அப்பாவி சமையல்காரங்க, தலை பிழைத்தால் போதும் என்று சம்பளம் கேட்காமலேயே ஓடிப்போயிடுவாங்க.

பல்ல :—அப்படியா ?

துலுக் :—பின்னே எப்படி இவர் இந்த ஊரிலே குடித்தனம் நடத்தறாரு ?

இதற்குள் அங்கே வந்த செல்லம்மாள், "அதுக்காகத் தானே இண்ணைக்குத் தேதி என்ன என்று உங்களைக் கேட்டேன்" என்று சொன்னாள்.

துலுக் :—அந்த மோசடியை வெளிப்படுத்தத்தான் ஓடிப்போன சமையல்காரங்களை எல்லாம் சேர்த்துப் போலீசுக்குச் சொல்லிவிட எங்க எஜமான் ஏற்பாடு செய்தார்.

இப்பொழுதுதான் பல்லழகனுக்கு அஞ்ஞானம் விலகி மெய்ஞ்ஞானம் தோன்றியது. அதோடு 475

ரூபாயும் ஞாபகம் வந்தது. உடனே, "தண்டபாணி" என்று கத்திக்கொண்டு அவர் படுத்திருந்த அறைக்குள் ஓடினார். அங்கே கட்டில் வெறும் கட்டில்தான் இருந்தது. தண்டபாணியைக் காணவில்லை.

செல்லம்மாள், "அவர் ஏன் இன்னம் பத்து நாளைக்கு உங்க கண்ணிலே அகப்படப் போறாரு?" என்று சொன்னாள்.

# ஊழியர் பஞ்சதாசர்

**ஊ**ழியர் பஞ்சதாசர் பசியோடு பகல் இரண்டு மணிக்கு வீடு வந்து சேர்ந்தார். காலையிலேயே குளித்து விட்டபடியால் சாப்பாட்டுக்குத் தயாராய் இருந்தார். வீட்டிற்குள் வந்ததும் கைகால் கழுவிவிட்டுக் கொஞ்சம் விபூதியை எடுத்து முருகா என்று சொல்லி நெற்றியில் பூசினார். அவருடைய நாலு வயதுக் குழந்தை பாரத தேவி வந்து, "அப்பா ஊதல்; அப்பா ஊதல்" என்று சொல்லி அவர் காலைக் கட்டிக்கொண்டது. காலையில் வெளியே போகும்போது, ஊதல் வாங்கி வருவதாகச் சொல்லியிருந்தார். சொன்ன சொல் தவருதவர் என்று ஊரில் அவர் பெயர் எடுத்திருந்தாலும் அன்று குழந்தை யிடம் சொன்ன வாக்குறுதியைக் காப்பாற்ற முடிய வில்லை. கையில் பணமில்லாவிட்டால் வாக்குறுதியை எப்படிக் காப்பாற்ற முடியும்? குழந்தை பாரததேவியைச் சமாதானப்படுத்தி "இதோ சாப்பிட்டதும் தென்னை ஓலையில் உனக்கு ஊதல் செய்து தருகிறேன்" என்று இரண்டாவது வாக்குறுதி கொடுத்தார். அதற்குள் அங்கு வந்த அவருடைய பத்து வயதுக் குமாரன் தேச பந்து, "அப்பா எனக்கும் ஒன்று" என்ருன். தருகிறேன் என்று சொல்லிவிட்டு, "அம்மாவை எங்கே? வயிறு பசிக்கிறது. சாப்பாடு போடச்சொல்லு" என்ருர்.

தேசபந்து:—சமையலே செய்யவில்லையே அப்பா. எனக்குக்கூட ரொம்பப் பசிக்கிறது.

பாரததேவி:—எனக்கும் பசிக்கிறது.

தேசபந்து:—தம்பிக்கு ரொம்பக் காய்ச்சல் அப்பா. தம்பியோடு அம்மா அழுதுகொண்டு இருக்கிருள்.

பஞ்சதாஸர்:—ரொம்பக் காய்ச்சலா? என்று கேட் டுக் கொண்டே தமது பத்தினி சாந்தம்மாள் இருக்கு மிடம் போய் "சாந்தம்" என்று அழைத்தார். அவள்

குழந்தையைத் தன் முன்னால் போட்டுப் படுத்திருந்தாள். பதில் பேசவில்லை. மீண்டும் "சாந்தம்" என்றார். தலையைத் தூக்காமலேயே "ஏன்" என்று கேட்டாள்.

பஞ்ச :—ஜுரம் அதிகமாக இருக்கிறதா ?

சாந்தம் :—ஆமா, அதைப் பற்றி உங்களுக்கென்ன?

பஞ்ச :—என்ன இப்படிப் பேசுகிறாய் ?

சாந்தம் :—காலையிலே நீங்கள் வெளியே போகும் போதே டாக்டரிடம் காட்ட வேண்டும் என்று சொன்னேனே. டாக்டரை வரச் சொல்லுவதாக நீங்கள் சொன்னீர்களே ? டாக்டர் எங்கே ?

அப்பொழுதுதான் டாக்டரைப் பார்க்காமல் தாம் மறந்து வந்துவிட்டது அவருக்கு ஞாபகம் வந்தது. யாரோ ஒருவர் புதிதாக வீடு கட்டுவதாகவும், அவருக்கு அவசியமாக வேண்டிய சில சாமான்கள் கிடைக்கவில்லையென்றும், அவற்றை வாங்கிக் கொடுக்க பஞ்சதாஸர் வரவேண்டும் என்றும் அழைத்துக்கொண்டு போய்விட்டார். பஞ்சதாஸர் பொதுஜன ஊழியராகையால் அவர் வார்த்தைக்கு ஊரில் நல்ல மதிப்புண்டு. அவர் போய்க் கேட்டால் இல்லையென்று யாரும் சொல்லமாட்டார்கள். அதனால் அவர் வரவேண்டுமென்று வற்புறுத்தி அழைத்துக்கொண்டு போய்விட்டார்.

வந்தவர் மோட்டாரில் வந்தபடியால் டாக்டரைப் பார்க்க வேண்டுமென்ற ஞாபகம் இவருக்கு வருவதற்குள் மோட்டார் வெகு தூரம் போய்விட்டது. சீக்கிரமாகத் திரும்பி வந்துவிடலாமென்றும், வருகிற வழியில் டாக்டரைப் பார்க்கலாமென்றும் மனத்தைச் சமாதானப் படுத்திக்கொண்டார். போன வேலைகள் முடிந்ததும், மற்றொருவர் அவரைப் பிடித்துக் கொண்டார். கலெக்டர் ஆபீஸில் ஏதோ ஒரு காரியம் நடக்க வேண்டுமென்றும் கட்டாயம் அவர் வந்தாக வேண்டுமென்றும் அவர் வற்புறுத்தினார்.

"எல்லாரும் இன்புற்றிருக்கவே நினைப்பதல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே" என்ற கொள்கையே

பஞ்சதாஸரின் கொள்கை; அதனல் அங்கிருந்து கலெக்டராபீஸிற்குப் போனுர். அங்கே போகும் போது டாக்டர் ஞாபகம் வந்தது. நேராக வீட்டிற்குத் திரும்பிவிடலாமா என்று நினைத்தார்; அடுத்த விநாடி பொதுஜன உழைப்பு ஞாபகம் வந்தது. கையில் ஒரு காசுகூட இல்லாத இந்த ஆண்டியை எல்லோரும் விரும்பி அழைப்பதென்ருல்—? பட்டமோ பதவியோ இல்லாத இந்த ஊழியரின் பேச்சை ஊரில் ஒருவரும் தட்டுவதில்லை யென்ருல்—? இவையெல்லாம் ஆண்டவன் திருவிளையாடல் அல்லவா ?

இந்தக் கட்டையினுல் சில காரியங்கள் செய்விக்க வேண்டுமென்பது ஆண்டவனின் திருவுள்ளமாய் இருந்தால் அவற்றைச் செய்யவேண்டியது தமது கடமையல்லவா ? இம்மாதிரியாகப் பஞ்சதாஸரின் மனம் சிந்தனை செய்தது. அடுத்த விநாடியே தெளிவடைந்து, அவனன்றி அணுவும் அசையாது, ஆகவே டாக்டரைப்பற்றி இப்பொழுது ஏன் கவலைப்படவேண்டும், என்று தமது மனத்தைத் தேற்றிக் கொண்டார்.

மற்ருெரு பக்கத்தில் இன்னொரு கவலையும் வேலை செய்தது. தமது கையில் பணம் இல்லாவிட்டாலும் தமது வீட்டிற்கு நாலுபேர் தம்மைத் தேடிவருவது ஒன்றுதான் அவருக்கு ஆத்ம உணவாய் இருந்து வருகிறது. மற்றவர்கள் கேட்கிறபடி தாம் உதவி செய்யப் போகாவிட்டால், நாலுபேர் தமது வீட்டிற்கு வருவதும் நின்று அந்த ஆத்ம உணவும் அடிபட்டுப் போகும் என்று பயந்தார். ஆத்ம உணவு இல்லாமல் வெறும் உணவினுல் மட்டும் ஒருவன் ஜீவிக்க முடியாது என்ற தத்துவத்தை பஞ்சதாஸர் ரொம்ப நன்ருய் அச்சமயம் உணர ஆரம்பித்தார். ஆகவே, பொதுஜன சேவை செய்ய வேண்டும் என்ற ஆசையோடு அதில் இறங்கிய பஞ்சதாஸர், அதை விட்டுவிட்டால் தமக்கு மதிப்புப் போய் விடுமோ என்ற பயத்தில் அகப்பட்டு, அதை விட்டுவிடக் கூடாதே என்ற கட்டாயத்திற்காகச் சேவை செய்யும் நிலைமைக்கு வந்து சேர்ந்தார். இதுதான் பஞ்சதாஸரின் பரிணும வளர்ச்சி.

ஆகவே டாக்டர் ஞாபகத்தை மூட்டைகட்டி வைத்து விட்டு கலெக்டர் ஆபீசுக்குள் நுழைந்தார். குமாஸ்தா பரந்தாமனைப் பார்த்தார். பஞ்சதாஸரை மகிழ்ச்சியோடு உபசாரம் செய்து வரவேற்ற பரந்தாமன், வந்த விஷயம் என்னவென்று கேட்டார். பஞ்சதாஸர் சொன்னார்.

பரந்:—இதற்காகவா நீங்கள் சிரமப்பட்டு இவ்வளவு தூரம் வரவேண்டும்? ஒரு ஆளிடம் சொல்லியனுப்பினால் போதுமே. அல்லது என்னை வரச்சொல்லியிருந்தாலும் நான் உங்கள் வீட்டிற்கு வந்திருப்பேனே!

பஞ்ச:—அப்படியெல்லாம் மரியாதைக்குக் குறைவாக நடக்கலாமா? உங்களுக்கு நான் செய்கிற மரியாதை எனக்கு செய்கிற மரியாதைதானே!

பரந்:—அடடா, எவ்வளவு பணிவு,எவ்வளவு பணிவு! உங்களுடன் முன்னால் தொண்டாற்றி வந்தாரே ஆண்டியப்பன், அவருக்கு என்ன அகம்பாவம் என்கிறீர்கள்? அவர் வீட்டிற்கு என்னை வரும்படி சொல்லி அனுப்பியிருக்கிறார்.

பஞ்சதாஸர் பதில் சொல்லவில்லை; சிரித்துக் கொண்டே இருந்தார்.

பரந்:—உங்களுடன் சுற்றிக்கொண்டிருந்தவர்தானே? இன்று என்னடா என்றால் ஆசாமி காலால் நடப்பதே இல்லை. எப்பொழுதும் மோட்டார் சவாரிதான். நாலு பெர்மிட்டுகளால் வந்த வாழ்வு. ஆள் பெரிய பணக்காரராய் இருக்கலாம். இருந்தாலும் பணமில்லாத உங்களுக்கு இருக்கிற மதிப்பில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட அவருக்குக் கிடையாது. பணம், என்ன பணம்? மக்களில் பெரும்பான்மையோர் பணமில்லாதவர்கள் தானே? அதனால் பணமில்லாத ஊழியர்களைத்தான் மக்கள் மதிப்பார்கள்.

இதைக் கேட்டவுடன் பஞ்சதாஸருக்குத் தம்முடைய ஏழ்மை நிலைமையைப் பற்றிப் பெருமை ஏற்பட்டது. சந்தோஷம் பொங்கியது. அந்தச் சந்தோஷத்தோடு தான் வீடு திரும்பினார். டாக்டர் ஞாபகம் அந்தச் சந்

தோஷத்தில் மூழ்கிப் போய்விட்டது. டாக்டர் எங்கே என்று கேட்ட தமது மனைவியைப் பார்த்து, "டாக்டர் வராவிட்டால் என்ன? மருந்து வாங்கி வரச் சொல்லக் கூடாதா ?" என்று கேட்டார்.

சாந்தம்:-மருந்தா ? மருந்து கேட்டனுப்பியதற்கு டாக்டர் என்ன சொன்னாரென்று தேசபந்துவைக் கேளுங்கள்.

பஞ்ச:-ஏண்டா தேசபந்து ! டாக்டர் என்னப்பா சொன்னார் ?

தேசபந்து :-டாக்டரா அப்பா ? 'மருந்தாவது கிருந் தாவது, இது என்ன தர்ம ஆஸ்பத்திரியா ? பழைய பாக் கியே வரவில்லை, ஓடிப்போ' என்று விரட்டினாரப்பா !

சாந்தம் :-தெரிஞ்சு போச்சா உங்க கீர்த்தி ? போன மாசந்தானே அவருக்காக யாரிடமோ போய்ச் சிபாரிசு செய்தீர்கள் ? இன்று என்ன சொன்னார் தெரிகிறதா ? சேவையாம் ! பொதுஜன சேவையாம் ! குழந்தைக்கு மருந்து வாங்கிக் கொடுக்க யோக்கியதை இல்லை, சமை யலுக்கு அரிசிக்கு வழியில்லை, என்ன பொதுஜன சேவை ? சிபாரிசுகள் செய்யப் புறப்படுகிறீர்களே, அப் போதைக்கப்போ பணம் வாங்கி இருந்தால் இந்தக் கஷ்டம் உண்டா ?

பஞ்சதாசர் :-சிபாரிசுக்குப் பணம் வாங்குவதா ?

சாந்தம்:-அடேயப்பா! என்ன, பாம்பைக் கண்டவங்க மாதிரி பதறுகிறீங்க ? ஏன் பணம் வாங்கக் கூடாது ? அவனவன் நன்மைக்காகத்தானே உங்களைச் சிபாரிசுக் குப் பிடிக்கிறார்கள் ? நன்மையை அடைந்தவன் பணம் கொடுத்தாலென்ன ? பெரிய தியாகி, தியாகி என்று எல் லோரும் புகழ்ந்திட்டாப்பலே வீட்டிலே உலைப்பானை அடுப்பேறி விடுமா ?

பஞ்சதாசருக்குப் பதில் பேசத் தெரியவில்லை. ஒரு பக்கத்தில் புகழ் கிடைப்பது, ஆத்ம திருப்தியாய் இருக் கிறது. ஆனால், வயிறு காய்கிறது. மனைவி சொல்வ திலும் உண்மையிருப்பதாய் அவருக்குத் தோன்றியது.

ஆனால், சிபாரிசுக்காகப் பணம் வாங்குவதென்பது மனத்திலும் நினைக்க முடியாத விஷயமாய் அவருக்குப் பட்டது. அப்படியானால் குடும்பத்தை நடத்துவதற்குப் பணத்திற்கு என்ன செய்வது என்று அடுத்தபடியாக அவர் மனத்தில் தோன்றிய கேள்விக்கு அவரால் பதில் கண்டுபிடிக்க முடியவில்லை. இச் சமயம் அவர் பத்தினி மீண்டும் ஆரம்பித்தாள்.

சாந்தம் :-குடும்பத்தைக் காப்பாற்றச் சம்பாத்தியம் பண்ணத் திறமையில்லாத ஆட்களுக்குக் கல்யாணம் எதற்கு ? குடும்பம், வீடு, வாசல் எல்லாம் எதற்கு ? சத்திரத்திலே சாப்பிட்டுவிட்டு, மடத்திலே தூங்கலாமே ?

இச்சமயம் பாரததேவி வந்து, "அப்பா, அப்பா, எனக்கு ஊதல் செய்து கொடு" என்றது. இதனால் பஞ்சதாசருக்கும் சாந்தத்திற்கும் நடந்த சம்பாஷணை தடைப்பட்டது. ஆனால், பழைய சம்பாஷணையால் ஏற்பட்ட நெருக்கடி தளரவில்லை.

சாந்தம் :-வீட்டு வரிக்காரன் வந்து பேசாத பேச்செல்லாம் பேசிவிட்டுப் போனான். அடமானக்காரன் வந்து செய்த ஆர்ப்பாட்டத்திற்கு அளவில்லை. சமைப்பதற்கு அரிசி கிடையாது. குழந்தைக்குக் காய்ச்சல். அவ்வளவையும் கவனிக்காமல் மோட்டார் கிடைத்தால் ஏறி ஊர் சுற்றப் போய்விடுகிறீர்கள்.

வீட்டில் இவ்வளவு கஷ்டம் இருக்கும்போது இவர் மோட்டாரில் சுற்றுவதென்றால் அது ஒரு சுகவாசந்தானே என்பது சாந்தத்தின் அபிப்பிராயம். இவ்வளவு கஷ்டங்களுக்கிடையில் மோட்டாரில் சுற்றுவது கொஞ்சம் நிம்மதி தருவதாகப் பஞ்சதாசர் உணர்ந்தார். இவ்விஷயத்தில் இருவருக்கும் அபிப்பிராய பேதம் இல்லை. குடும்பக் கஷ்டங்களைக் கொஞ்சம்கூட ஏற்றுக்கொள்ளாமல் மோட்டாரில் சௌக்கியமாய்ச் சுற்றுவதா என்று சாந்தம் கோபங் கொண்டாள். பொதுஜன சேவை என்றால் கடவுள் சேவைதானே என்பதும், கடவுள் சேவையில் தாம் ஈடுபட்டிருக்கும்போது தம் குடும்ப வாழ்க்கை கஷ்டமில்லாமல் நடக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டி

யது கடவுள் பொறுப்பல்லவா என்பதுவும் பஞ்சதாசரின் நம்பிக்கைகள். கடவுளுக்கும் தமது குடும்ப வாழ்க்கைக் கும் தொடர்பு ஏற்படுத்த வேண்டாமா என்பதை அவர் சிந்திக்கவில்லை. இச் சமயம் மீண்டும் சாந்தம் ஆரம் பித்தாள்.

சாந்தம்:—தன் காரியத்தைப் பார்க்க முடியாதவனுல் பிறர் காரியத்தை எப்படிப் பார்க்கமுடியும்? வெறும் புகழை வைத்து என்ன செய்ய? அது வயிற்றுக்குச் சோறு போடுமா?

இச் சமயம் வெளியே வீட்டு வாசலில் மோட்டார் சப்தம் கேட்டது. ஜன்னல் வழியாகச் சாந்தம் பார்த் தாள். ஓர் அழகான மோட்டார் நிற்பதையும், பக்கத்தில் ஓர் இள வயது மங்கை நிற்பதையும் பார்த்தாள். அவள் பெயர் குஞ்சிதம். பல தடவைகள் பஞ்சதாஸர் வீட்டிற்கு அவள் வந்திருக்கிறபடியால் சாந்தத்திற்கு அவளைத் தெரியும். மாதர் முன்னேற்ற சங்கத்திற்கு அவள் காரியதரிசி. அழகும் இளமையும் உள்ள அவளுடன் பஞ்சதாசர் வெளியே போவது சாந்தத்திற்குக் கொஞ்ச மும் பிடிக்காது. பஞ்சதாசர் மீது அவநம்பிக்கை என்ப தில்லை; இவருக்கென்ன இந்த இளம் பெண்ணின் நட்பு என்ற காரணமில்லாத பொருமை. ஏற்கெனவே கோப மாய் இருந்த சாந்தத்திற்குக் குஞ்சிதத்தை பார்த்ததும் கோபம் அதிகமாயிற்று. முகத்தைச் சுளித்துக்கொண்டு, "உங்களுக்கு வெட்கமில்லை? வயது என்னவாச்சு? இன் னும் மானமில்லாமல் சின்னப் பெண்களோடு சுற்று வதாம். இதுதான் பொதுஜன சேவையா?" என்ருள்.

பஞ்சதாசருக்கு விஷயம் புரியாமல் வெளியே வந்து பார்த்தார். அங்கே குஞ்சிதம் நிற்பதைப் பார்த்து வர வேற்று உட்காரச் சொன்னுர். குஞ்சிதம் புன்சிரிப்போடு பேச்சை ஆரம்பித்தாள்.

குஞ்சிதம்:-எங்கள் சங்கத்திற்கு ஆண்டு விழா வரு கிறது. தலைமை வகிக்க ஒரு மந்திரி வேண்டும் என்று சங்கத்தில் எல்லாரும் சொல்லுகிருர்கள்.ஒரு மந்திரியைத் தவிர பாக்கி மந்திரிகளையெல்லாம் கேட்டோம். சௌகரி

யம் இல்லை என்று சொல்லிவிட்டார்கள். மந்திரி மந்த ஹாசம்தான் பாக்கி. நீங்கள் சொன்னால் அவர் தட்ட மாட்டார். எப்படியாவது நீங்கள் சொல்லி, அவர் சம் மதிக்கும்படி செய்யவேண்டும்.

பஞ்சதாஸர் :—அதற்கென்ன, நாளை பார்த்துவிடு வோம்.

குஞ்சிதம் :—நாளையா ? அவர் இன்றிரவே வெளியூர் போகிறார். அடுத்த வாரம் எங்களுக்கு ஆண்டு விழா. அழைப்புகளெல்லாம் அச்சாகவேண்டும்.

பஞ்ச :—நான் இன்னும் சாப்பிடவில்லையே.

குஞ்சிதம் :—பாதகமில்லை ; பதினைந்து நிமிஷங்களில் திரும்பிவிடலாம். இப்பொழுதே உங்களுடன் வந்து பார்ப்பதாக மந்திரிக்கு டெலிபோன் செய்துவிட்டேன். போகலாம் வாருங்கள்.

பஞ்ச :-குழந்தைக்குக் கடுமையான ஜுரம். வீட் டில் இன்னம் சமையல்கூட ஆகவில்லை. குழந்தைகள் கூட இன்னம் சாப்பிடவில்லை. இப்பொழுதுதான் நானும் வெளியிலிருந்து வந்தேன்.

குஞ்சிதம் :—நான் ரொம்ப வருத்தப்படுகிறேன். மந்திரியைப் பார்த்துவிட்டு வரும்போது ஹோட்டலி லிருந்து சாப்பாடு கொண்டுவந்துவிடலாம். டாக்டர் சேகருக்கு டெலிபோன் செய்து இதோ உடனே இங்கே வரும்படி செய்கிறேன்.

இதற்குமேல் ஆட்சேபணை சொல்லுவது பஞ்ச தாசருக்குச் சரியாகத் தோன்றவில்லை. வீட்டிற்குள் போனால் மனைவி வெளியே போகவிடமாட்டாள் என்பது அவருக்குத் தெரியும். அதனால் பின் பக்கம் திரும்பிப் பார்க்காமலே மோட்டாருக்குள் ஏறினார். அவர் குழந் தைகள் பின்னாலேயே ஓடிவந்து,“அப்பா, அப்பா, எங்கே போறே ? அம்மா கூப்படறா” என்று கத்தின. பஞ்ச தாசர் “இதோ வந்துவிடுகிறேன், சாப்பாடு வாங்கி வருகிறேன்” என்று சொல்லி, சமாதானப்படுத்தினார்.

மோட்டார் புறப்பட்டது. மோட்டாருக்குப் பெட்ரோல் போட்டுக் கொள்ளும்படி போகிற வழியில் மோட்டார் ஓட்டிக்குக் குஞ்சிதம் சொன்னாள். பெட்ரோல் கடை முன்பு மோட்டார் நின்றது. குஞ்சிதம் தன் பையைத் திறந்து ஒரு கத்தை பத்துரூபாய் நோட்டுகளை எடுத்து அதில் ஒன்றைக் கொடுத்து மூன்று காலன் போடும்படி சொன்னாள்.

இவ்வளவு ஏராளமாகப் பணம் வைத்திருப்பவள் தன்னுடைய சிபாரிசை நாடி வந்திருப்பது பஞ்சதாசருக்குப் பெருமையாய் இருந்தது. ஆனால், அடுத்த விநாடியே அந்தக் கத்தையில் ஒரு நோட்டு தம்மிடம் இருந்தால் கூட தம்முடைய உடனடிப் பிரச்சினைகள் பல தீர்ந்து விடுமே, அதற்கு வழியில்லையே என்று அவர் நினைத்த போது அவர் சந்தோஷம் மாறி அவருடைய வீட்டின் சோக நிலைமைகள் கண் முன் வந்து நின்றது.

ஊழியர் பஞ்சதாசரின் உதவியை நாடுகிறவர்கள் அவருடைய குடும்பக் காலட்சேபம் எப்படி நடக்கிறது என்பதைச் சிந்திப்பதில்லை. அந்தப் பொறுப்பு பஞ்சதாசரைச் சேர்ந்ததல்லவா என்று சுலபமாய்த் தள்ளி, தங்கள் மனத்தைத் தேற்றிக் கொள்ளுவார்கள். பஞ்சதாசரின் வீட்டிற்குத் தாங்கள் போவதே அவருக்கு ஒரு பெரிய கௌரவத்தைச் செய்வதுபோல சிலர் நினைப்பார்கள். பஞ்சதாசரைத் தங்கள் மோட்டாரில் அழைத்துக் கொண்டு போவது அதைவிடப் பெரிய கௌரவம் என்று வேறு சிலர் நினைப்பார்கள்.

கடைசியாக மந்திரி மந்தஹாசர் ஆண்டு விழாவில் தலைமை தாங்கச் சம்மதம் தெரிவித்தார். மந்திரி வீட்டை விட்டு வெளியே வரும்போதே அளவற்ற மகிழ்ச்சியோடு குஞ்சிதம் காணப்பட்டாள். "நீங்கள் இன்று வந்திருக்காவிட்டால் மந்திரி சம்மதித்திருக்கவே மாட்டார். அதற்காக எங்கள் சங்கத்தின் மனமார்ந்த நன்றி" என்று குஞ்சிதம் தெரிவித்தாள். இருவரும் மோட்டாரில் ஏறிக் கொண்டு பஞ்சதாசரின் வீட்டுக்கு வருகிற வழியில் ஹோட்டலுக்குப் போகும்படி குஞ்சிதம் உத்தரவிட்டாள்.

ஹோட்டலைப் பார்க்க மோட்டார் போகும்போது சங்கத்தின் தலைவி கமலராணி தனது வீட்டின் முன்பு நின்று கொண்டிருந்தாள். மோட்டாரை நிறுத்தி அவளிடம் குஞ்சிதம் விஷயத்தைச் சொன்னாள். அவளுக்கு உடனே சோடா பாட்டிலைத் திறந்ததுபோன்ற உற்சாகம் பொங்கி விட்டது. "இந்த விநாடியே அச்சாபீசுக்குப் போக வேண்டும், வா போகலாம்" என்றாள்.

குஞ்சிதம் :—இவர்களை வீட்டில் கொண்டு விட்டு விட்டு வந்து விடுகிறேன்.

கமல :—இந்த மாதிரி தாமதம்தான் எனக்குப் பிடிக்காது. இவர்கள் வீடு இதோ பக்கத்தில் ஒரு மைலுக்குள்ளாகத்தானே இருக்கிறது. ஒரு ரிக்ஷாவில் வைத்து அனுப்பிவிடலாம். நாம் உடனே போக வேண்டும்.

பஞ்ச :—நீங்கள் போங்கள். என் வீடு இதோ இருக்கிறது. நான் நடந்துபோய் விடுவேன். முக்கியமான காரியம் நடக்கவேண்டும்.

கமல :-அதுதான் நானும் சொல்கிறேன்.

பஞ்சதாசர் மோட்டாரைவிட்டு இறங்கினார்.

குஞ்சிதம் :—அப்போ நீங்கள் மன்னிக்கவேண்டும். இன்றைக்கு நீங்கள் செய்த உதவியை நாங்கள் மறக்கவே முடியாது.

பஞ்ச :—அதற்கென்ன, அதற்கென்ன, நான் போய் வருகிறேன். ரொம்ப சந்தோஷம்.

ஹோட்டலில் சாப்பாடு வாங்கவேண்டுமென்பதைக் குஞ்சிதம் மறந்தே போனாள். பட்டினியோடு பஞ்சதாசர் வீட்டை நோக்கி நடந்தார். சாப்பாடு வாங்கி வருவதாக அவர் குழந்தைகளுக்குக் கொடுத்த மூன்றாவது வாக்குறுதியையும் அவரால் நிறைவேற்ற முடியவில்லை !

# தலைவர் குஞ்சரம்

**த**லைவர் குஞ்சரம் அன்றையப் பத்திரிகையை ஆவலோடு பார்த்தார். ஒவ்வொருவர் ஒவ்வொரு நோக்கத்தோடு பத்திரிகை பார்ப்பார்கள். சிலர் கிரிக்கெட், டென்னிஸ் விளையாட்டுகளைப் பார்ப்பார்கள். சிலர் பங்கு மார்க்கெட்டுகளை வாசிப்பார்கள். வேறு சிலர் தங்கம், வெள்ளி விலைகளைக் கவனிப்பார்கள். வெளியூர்ச் செய்திகளை மட்டும் சிலர் படிப்பார்கள். இம் மாதிரி ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு செய்திகளில் ஆர்வம் இருக்கும். இதில் விசேஷம் என்ன வென்றால், யார் யாருக்கு எந்தெந்தச் செய்திகளில் ஆர்வமோ அந்தச் செய்திகளைத் தவிர மற்றச் செய்திகளை அவர்கள் கண்கள் வாசிப்பதே இல்லை. வாசித்தாலும் அவைகளைக் கண்கள் மூளைக்கு அனுப்புவதே இல்லை. ஆகவே, மந்திரக் கண்ணாடி மாதிரி, யார் யாருக்கு எந்தச் செய்தி விருப்பமோ அவை மட்டும்தான் பத்திரிகைகளில் அவர்களுக்குத் தோன்றும்.

தலைவர் குஞ்சரமும் அந்த நோக்கத்தோடுதான் பத்திரிகையைப் பார்த்தார். அவர் தேடிய விஷயத்தை அதில் காணவில்லை. மீண்டும் முதல் பக்கத்தில் பத்திரிகையின் தலைப்புப் பெயரிலிருந்து ஆரம்பித்துக் கடைசிப் பக்கத்தில் அச்சிட்டுப் பிரசுரிப்பவர் பெயர் வரை ஒரு தடவை கண்ணோட்டமிட்டார். அப்பொழுதும் அவர் விரும்பிய செய்தியைக் காணவில்லை. அவர் விரும்பியதெல்லாம் அன்றையப் பத்திரிகையிலுள்ள பரபரப்பான செய்தி அல்ல; பக்கத்திலுள்ள ஒரு ஆற்றில் ஒரு ரயில் வண்டித் தொடர் அப்படி விழுந்து நொறுங்கிவிட்ட தென்றாலும் அவருக்கு அது பெரிய செய்தியாய்த் தோன்றாது.

அங்கத்தினர்களே இல்லாத, யாருமே அறியாத ஒரு கழகத்தின் ஆண்டு விழாவிற்குத் தாம் அனுப்பிய வாழ்த்

துச் செய்தியைப் பத்திரிகைகள் பிரசுரிக்கவில்லை யென்றால் அவருக்கு ரொம்பக் கோபம் வந்துவிடும். காப்பி பக்தர்களுக்குக் காலையில் எழுந்தவுடன் காப்பி என்ற சஞ்சீவி நீக்கமற நிறைந்து நிற்கும் பொருளாய்த் தோன்றுகிறது. அதே மாதிரி தினம் காலையில் அவர் பத்திரிகையைப் பார்க்கும்போது எங்காவது ஓர் இடத்தில் அவர் பெயரைக் காண வேண்டும். பெயர் இல்லையென்றால் மழையைக் காணாத பயிர்போல அவர் மனம் வாடி வதங்கிவிடும்.

அன்றையப் பத்திரிகையில் அவர் பெயரைக் காணாததும், கோபம் கொண்ட தலைவர் குஞ்சரம், "ஏண்டா மடையா, நேற்றே சீக்கிரமாக அந்த வாழ்த்துச் செய்தியைப் பத்திரிகைகளுக்கு அனுப்பச் சொன்னேனே? தூங்கிவிட்டாயா?" என்று அதட்டினார்.

குமஸ்தா குறுக்கன் பவ்யமாக, "நானே நேரில் கொண்டு பத்திரிகாலயங்களில் கொடுத்தேனே" என்றார்.

குஞ்சரம் :—பின்னே ஏன் வரவில்லை? இந்தப் பயல்கள் பத்திரிகை நடத்தும் லட்சணம் மாதிரிதான் இருக்கிறது, நீ செய்கிற வேலை.

குறுக்கன் :—புயல் செய்திகள் ஏராளமாய் இருப்பதால் பத்திரிகையில் இடமில்லாமல் வாழ்த்துச் செய்தி விட்டுப் போயிருக்கலாம்.

குஞ்சரம் :—புயல் செய்தி! மகா பெரிய செய்தி! மரம் விழுந்ததும், மட்டை விழுந்ததும் என்னப்பா இது, சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டு! மக்களுக்கு வேண்டிய செய்தி எது என்பது கூட இந்தப் பத்திரிகைக்காரர்களுக்குப் புரியவில்லை. இதையெல்லாம் தெரிந்துதானே இரண்டு மூன்று சிறிய செய்திகளை நமது பெயர் உள்ளதாகப் பத்திரிகைகளுக்கு அனுப்பிவை, எதையாவது ஒன்றைத் தினமும் போடுவார்கள் என்று உனக்குச் சொன்னேன்?

குறுக்கன் :—சிறிய செய்திகள் ஒன்றும் இல்லை.

குஞ்சரம் :—இல்லையா? அடுத்த மாதம் அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறேன் என்று ஒரு செய்தியை அனுப்புவதற்கென்ன?

குறுக்கன் :—அம்மாதிரி திட்டம் எதுவும் இல்லையே?

குஞ்சரம் :—திட்டமாவது கழுதையாவது? அடுத்த மாதம் அமெரிக்காவுக்கு ஏன் போகவில்லை என்று யார் நம்மைக் கேட்கப் போகிறார்கள்? அது போகட்டும். அந்த 'வீட்டுக் கஷ்ட நிவாரண சங்கம்'' இருக்கிறதா இல்லையா?

குறுக்கன் :—ஆமாம்.

குஞ்சரம் :—அந்தச் சங்கத்தின் அடைப்பு விழா சமீபத்தில் நடக்குமென்று ஒரு செய்தி அனுப்பினால் என்ன ?

குறுக்கன் :—வீட்டுக் கஷ்டம் இன்னும் தீரவில்லையே! அதற்குள் அடைப்பு விழாவை எப்படி நடத்துவது?

குஞ்சரம் :—அதற்குத்தானய்யா மூளை வேண்டும் என்று சொல்லுகிறேன். எத்தனையோ மருந்துகள் கண்டு பிடிக்கிறார்கள். இந்த மூளை விருத்திக்கு ஒரு மருந்தையும் காணவில்லை.

குறுக்கன் :—மருந்து இருக்கிறது. பத்திரிகையில் விளம்பரம் பார்த்தேன். ஒரே பொழுதில் கை கண்ட பலன் என்று விளம்பரம் செய்திருக்கிறார்கள்.

குஞ்சரம் :—பின்னே ஏன் நீ அதை வாங்கிச் சாப்பிடவில்லை?

குறுக்கன் :—பாட்டில் பன்னிரண்டணா விலை போட்டிருக்கிறார்கள். என்னிடம் சில்லறை இல்லை. ஒரு ரூபாய் முழுசாய் இருக்கிறது. அதனால்தான் வாங்கவில்லை.

குஞ்சரம் :—ரூபாயைச் சில்லறையாக்குவது ஆந்திர மாகாணம் அமைப்பது போல அவ்வளவு கஷ்டமானதல்லவா? அதனால் உன்னால் மாற்ற முடியவில்லை ! சே,

சே. அது கிடக்கட்டும். நாம் என்ன பேசிக்கொண்டிருந் தோம்?

குறுக்கன் :—மூளை வளர்ச்சி மருந்து.

குஞ்சரம் :—அதற்கு முன்னாலே?

குறுக்கன் :—ரூபாய்க்குச் சில்லறை மாற்றுவது.

குஞ்சரம்:—பலே பலே! உனக்கு மூளை வளருகிறது; ஆனால், பின்னோக்கி வளருகிறது. அதை முன்னோக்கி வளரும்படி செய்யவேண்டும். அவ்வளவுதான். அது கிடக்கட்டும். வீட்டுக் கஷ்ட நிவாரண சங்கத்தைப் பற்றிப் பேசினேன் அல்லவா? அதன் அடைப்பு விழா வைப் பற்றிக் கூறினேன் அல்லவா? வீட்டுக் கஷ்டம் குறையவில்லையே என்று நீ உளறினாய் அல்லவா?

குறுக்கன் :—உளறவில்லை. உள்ளதைத்தான் சொன்னேன்.

குஞ்சரம் :—சமய சந்தர்ப்பம் அறியாமல் உள்ள தைச் சொன்னாலும் அது உளறல்தான். அது கிடக்கட் டும். எடுத்துக்கொண்ட விஷயம் வீட்டுக் கஷ்ட நிவார ணம். ஆந்திர மாகாணம் பிரியப்போகிறது உனக்குத் தெரியுமல்லவா?

குறுக்கன் :—தெரியும்.

குஞ்சரம் :—சென்னை மாகாணத்தில் சுமார் பாதி ராஜ்யம் பிரிந்து போகும்போது சென்னை நகரத்திலிருந் தும் பாதிப் பேர் வெளியே போய்விடுவார்கள் அல்லவா?

குறுக்கன் :—ஆந்திரர்கள் நூற்றுக்குப் பத்துப் பேர் தானே சென்னையில் இருக்கிறார்கள்?

குஞ்சரம் :—முட்டாள், முட்டாள். நான் ஒன்றைச் சொன்னால் நீ மற்றொன்றைச் சொல்லிக் குழப்புகிறாய். அது கிடக்கட்டும். பாதிப்பேர் சென்னையைக் காலி செய் தால் வீட்டுக் கஷ்டம் போல் வீடுகளுக்கு ஆட்கள் தேட வேண்டிய கஷ்டம் வந்து விடுமல்லவா? அப்புறம் வீட் டுக் கஷ்ட நிவாரண சங்கத்திற்கு என்ன வேலை? மூட வேண்டியதுதானே? அந்த விழாவை நடத்தலாமல்

லவா? அது கிடக்கட்டும். நேற்றுக் கொஞ்சம் தலைவலி என்று சொன்னேனு இல்லையா ?

குறுக்கன் :—ஆமாம்.

குஞ்சரம் :—உனக்குக் கொஞ்சமாவது மூளை யிருந்தால் அந்தச் செய்தியைப் பத்திரிகைக்கு அனுப்பலாமே?

குறுக்கன் :—தலைவலி என்று எழுதினுல் அதை எப்படிப் பிரசுரிப்பார்கள்?

குஞ்சரம் :—அட ஆமையே, தலைவலியைத் தலைவலி என்று எழுதலாமா? "தலைவர் குஞ்சரம் திடீரென்று அசௌக்கியமானுர். அவருடைய டாக்டர்கள் மூன்று மணி நேரம் சோதனை செய்தார்கள். நாளை ஒரு அறிக்கை வெளியிடுவார்கள்" என்று எழுதி யனுப்பினுல் நான் முந்தி நீ முந்தி என்று போட்டி போட்டுக் கொண்டு பிரசுரிப்பார்களேடா, அடே ஏனமே!

குறுக்கன் :—அது என்னங்க ஏனம்?

குஞ்சரம்:—ஏனம் என்ருல் பாத்திரம். பாத்திரம் என்ருல் ரொம்ப விசேஷம். நாடகங்களில் ராமராகவோ சீதையாகவோ கிருஷ்ணனுகவோ நடிக்கிறவர்களுக்குக் கதா பாத்திரங்கள் என்று சொல்லுவார்கள். பாத்திரம் என்ருல் அவ்வளவு விசேஷம்.

குறுக்கன் :—இருங்கோ, இருங்கோ, தமிழ் அகராதியைப் பார்த்து விடுகிறேன். (அகராதியைப் பார்த்து விட்டு) என்னங்க, அகராதியில் ஏனம் என்ருல் பன்றி என்றல்லவா போட்டிருக்கிருர்கள்.

குஞ்சரம் :—சே,சே, அசடு, அகராதியை எவனுவது பார்ப்பானு? என் கண்ணே என்று சொன்னுல் அருமையாகத்தானே நினைப்பார்கள் ?

குறுக்கன் :—ஆமாம்.

குஞ்சரம் :—உடனே அகராதியைப் புரட்டிப் பார்த்தால் அதிலே கண் என்ருல் துளை என்று போட்டிருப்பார்கள். அதைப் பார்த்துக் கோபப் படலாமா?

குறுக்கன் :—இல்லைங்க, இல்லைங்க.

குஞ்சரம் :—சரி, அது கிடக்கட்டும். நாம் பேசிக் கொண்டிருந்த விஷயம் என்ன?

குறுக்கன் :—ஏனம்.

குஞ்சரம் :-இன்னமும் உனக்கு மூளை பின்னுலே தான் ஓடுகிறது. பத்து நாட்களுக்கு நீ சிரசாசனம் செய். அப்புறம்தான் உன் மூளை முன்னேக்கிப் போகும்.

இச்சமயம் வீட்டு வாசலில் "ஐயா ஐயா" என்று கூப்பிடுகிற சப்தம் கேட்டது. "யார் அது? பார்த்து வா" என்று குஞ்சரம் உத்தரவிட்டார். குறுக்கன் வெளியே பார்ப்பதற்குப் போனுர்.

சுருக்கெழுத்து டைப்பிஸ்டுகள்தான் காரியதரிசிகளாக வேலை பார்ப்பது வழக்கம். அதை அநுசரித்துத் தான் குறுக்கனைக் குஞ்சரம் வேலைக்கு அமர்த்திக்கொண்டார். குறுக்கன் பெயர் சிவசண்முக சோமசுந்தர மார்த்தாண்டம் என்பதாகும். அவ்வளவு நீளமாக அழைப்பதோ, சுருக்கெழுத்து டைப் அடிக்கிறவர் என்று அழைப்பதோ அசௌகரியமா யிருக்கும் என்று நினைத்தே குறுக்கன் என்று சுருக்கமாகத் தலைவர் குஞ்சரம் பெயர் சூட்டினுர்.

குறுக்கன் வெளியே போய்ப் பார்த்து வந்து, "கோஷக்காரர்கள் வந்திருக்கிருர்கள்; இன்று மாலை பொதுக் கூட்டம்" என்று சொன்னுர்.

குஞ்சரம் :-அவர்களும் உன் ரகம்தான் போலிருக்கிறது.

குறுக்கன் :-ஆமாம்.

குஞ்சரம் :-என்ன ஆமாம்?

குறுக்கன் :-உங்களுக்குச் சேவை செய்வதில் நாங்கள் ஒரே ரகம் என்று சொன்னேன்.

குஞ்சரம் :-அதை நான் சொல்லவில்லை. மூளையில் ஒரே ரகம் என்று சொனனேன். இந்த முட்டாள்கள் சென்ற பொதுக் கூட்டத்தில் "குஞ்சரத்திற்கு ஜே"

என்று கத்தினுர்கள். என்ன குஞ்சரம்? குஞ்சரம் என்று சொன்னுல் யாருக்குத் தெரியும்? "தலைவர் குஞ்சரத்திற்கு ஜே" என்று சொல்ல வேண்டுமென்று எத்தனை தடவை சொல்லி அழுகிறேன். தலைவர் குஞ்சரம், தலைவர் குஞ்சரம் என்று சொல்லிக்கொண்டு வந்தால்தானே குஞ்சரம் என்ற பெயரைக் கேட்டதும் தலைவர் என்பது மக்களுக்கு ஞாபகத்திற்கு வரும்?

குறுக்கன் :-ஆமாம்.

குஞ்சரம் :-என்ன ஆமாம்?

குறுக்கன் :-நீங்கள் சொல்லுவது முற்றிலும் உண்மை.

குஞ்சரம் :-அப்படிச் சொல்லு. பிரசார நுட்பங்களே இந்த ஆட்களுக்குத் தெரிவதில்லை. அதை யெல்லாம் சொல்லி அனுப்பு. கூட்டம் இன்று ஏராளமாய் இருக்க வேண்டும். ஆமாம். தெரிகிறதா? பத்திரிகை நிருபர்களுக்கெல்லாம் டெலிபோன் செய்து மாலை இங்கே டிபன் சாப்பிட அழைத்து விடு. இங்கிருந்தே கூட்டத்திற்குப் போகலாமென்று சொல்லு.

குறுக்கன் :-டிபன் சாப்பிட்டு விட்டு அவர்கள் வேறு எங்காவது போய் விட்டால்...?

குஞ்சரம் :-நீ எதற்காக இருக்கிருய்? சாப்பிட்டு முடிந்ததும் விடாப்பிடியாக மோட்டாரில் ஏற்றி உன்னுடேயே அழைத்துக் கொண்டு போ. கூட்டம் நிறையக் கூடியதும் மோட்டாரை இங்கே அனுப்பு. போ, வேலையைக் கவனி. என் முன்னுலேயே நின்று கொண்டிருக்காதே.

குறுக்கன் :-ஒரே ஒரு விஷயம்.

குஞ்சரம் :-என்ன விஷயம்?

குறுக்கன் :-இன்றைய பிரசங்கத்தை எழுதிக் கொடுக்கச் சௌகரியம் இல்லை யென்று மகிஷவாணர் சொல்லி யனுப்பி விட்டார்.

குஞ்சரம் :-அது வேறே சனியனா? (கொஞ்சு நேரம் யோசிக்கிறார்) பாதகமில்லை. முன்னால் செய்த பிரசங்கங்களில் ஒரு டஜனை எடு. ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு பாராவை எடுத்துப் போட்டுச் சரி பண்ணிவிடு. ஆரம்ப பாராவையோ கடைசி பாராவையோ எடுக்காதே. படிப்பவர்கள் மேலேயும் கீழேயும்தான் படிப்பார்கள். மத்தியில் படிக்க மாட்டார்கள். ஆ க வே மத்தியிலுள்ள பாராக்களாக எடு. தெரிகிறதா?

குறுக்கன் "சரி" என்று சொல்லிவிட்டுப் போகிறார். மேஜை மீதிருந்த காப்பி பாத்திரத்திலிருந்து மீண்டும் ஒரு கோப்பைக் காப்பியை எடுத்துக் குஞ்சரம் குடித்தார்.

இச்சமயம் அங்கே வெளியூரிலிருந்து பால் மண்டி வந்தார். "வாருங்கள் வாருங்கள்" என்று அவரை உபசரித்து அவருக்குக் குஞ்சரம் காப்பி கொடுத்தார். காப்பி சாப்பிட்டானதும் "புயல் சேதத்தைப் பற்றி நான் ஒரு அறிக்கை வெளியிட்டிருந்தேனே, அதைப் பற்றி உங்களூரில் என்ன பேசிக் கொள்கிறார்கள்?" என்று குஞ்சரம் கேட்டார்.

பால்மண்டி :-தங்கள் அறிக்கையைப் பத்திரிகையில் இதுவரை நான் பார்க்க வில்லையே.

குஞ்சரம் :-இன்று அல்லது நாளை பிரசுரமாகும். பிரசுரமாவது இருக்கட்டும். என்னுடைய அபிப்பிராயம் தான் மக்களுக்குத் தெரியுமே, என்ன பேசிக் கொள்ளுகிறார்கள்?

பால் மண்டி :—இன்னும் பிரசுரமாகி மக்கள் வாசிக்க வில்லையே!

குஞ்சரம் :—வாசிப்பது இருக்கட்டும். கஷ்ட நிவாரணம் என்றால் என்ன என்பதைப்பற்றி ஒரு வியாக்கியானம் கொடுத்திருந்தேனே, அது எப்படி?

பால் மண்டி :—இன்னும் படிக்கவில்லையே.

குஞ்சரம் :—அது கிடக்கட்டும். உடனடியாக என்ன செய்யவேண்டும் என்று சொல்லியிருந்தேனே, அந்த யோசனை எப்படி?

பால் :—இன்னும்—

குஞ்சரம் :—அறிக்கையின் வாசகம் எவ்வளவு ஹாஸ்யம் நிறைந்திருந்தது. அதைக் கவனித்தீர்களா?

பால் மண்டி :—நான் இப்போ வந்தது ஒரு முக்கிய மான விஷயம். அதுதான் வெள்ளி விழாவைப் பற்றியது.

குஞ்சரம் :—அதைத்தான் நான் முன்னுலேயே சொல்லிவிட்டேனே. என்னைப்பற்றி எந்த வெள்ளி விழா நீங்கள் ஏற்பாடு செய்தாலும் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்துவிடுகிறேன்.

பால்மண்டி :—நீங்கள் பணம் கொடுப்பது சரி. எதற்காக வெள்ளி விழா வைப்பது என்பதுதான் எங் களுக்குப் புரியவில்லை.

குஞ்சரம் :—எதற்கு வேண்டுமானுலும் வைத்துக் கொள்ளுங்கள். என்னுடைய அறிக்கை எவ்வளவு சுருக்கமாய், கச்சிதமாய் இருக்கிறது பார்த்தீர்களா ?

பால் மண்டி—இப்போ உங்களுக்கு வயது 30. நீங் கள் வாய் திறந்து பேச ஆரம்பித்து 25 வருஷங்களுக்கு மேல் இருக்குமே. அதற்கு வெள்ளி விழா வைத்து விட்டால் என்ன ?

இச்சமயம் அங்கே குறுக்கன் வந்தார். "என்னப்பா விஷயம்?" என்ருர் குஞ்சரம்.

குறுக்கன் :—பழம் பெரும் கழகச் செயலாளர் வந் திருக்கிருர்.

குஞ்சரம் :—அது என்ன கழகம்? எனக்குத் தெரிய வில்லையே.

குறுக்கன் :—அதற்கு நன்கொடையாகப் பத்தாயிரம் ரூபாய் நீங்கள் கையெழுத்துப் போட்டீர்கள்.

குஞ்சரம் :—மாதம் ஐம்பதாயிரம் ரூபாய்க்குக் கை யெழுத்துப் போடுகிறேன். இதையெல்லாம் யாரப்பா ஞாபகத்தில் வைத்திருக்கிருர்கள்? அவர் எதற்காக வந் திருக்கிருர் ? இன்னம் எதற்காகவாவது நன்கொடை கையெழுத்து வாங்க வந்திருக்கிருரா ?

குறுக்கன் :—அது எனக்குத் தெரியாது. உங்களைப் பார்க்கவேண்டுமாம்.

குஞ்சரம் :—சரி, வரச் சொல்லு.

பழம் பெரும் கழகச் செயலாளர் தேன்மாரி உள்ளே வந்தார். அவரை உட்காரும்படி சொல்லி வந்த காரியம் என்ன வென்று குஞ்சரம் கேட்டார்.

தேன்மாரி :—நமது கழகத்திற்குத். தாங்கள் கை யெழுத்துப் போட்ட......

குஞ்சரம் :—அதுதான் முன்னுலேயே போட்டு விட்டேனே. இன்னும் எதற்காவது கையெழுத்துப் போடவேண்டுமா ?

தேன்மாரி :—அல்ல ; போட்ட கையெழுத்திற்குப் பணம் வசூல்......

குஞ்சரம் :—இதுவரை எவ்வளவு ரூபாய்க்குக் கை யெழுத்தாயிருக்கிறது?

தேன்மாரி :—தாங்கள் முதலாவது கையெழுத்துப் போட்ட விசேஷத்தால் இதுவரை லட்சத்து நாற்பதினு யிரம் ரூபாய்க்கு......

குஞ்சரம் :—பலே பலே, நல்ல வசூலாயிற்றே !

தேன்மாரி :—அதுதான் இல்லை.

குஞ்சரம் :—என்ன இல்லை ? லட்சத்து நாற்பதி னுயிரம் என்ருல் அற்ப சொற்பமா ?

தேன்மாரி :—வசூலாக வேண்டு மல்லவா ?

குஞ்சரம் :—வசூலாகவேண்டும் ? செயலாளர் நீங் கள் வசூல் செய்யாமல் என்ன செய்கிறீர்கள் ?

தேன்மாரி :—அதற்காகத்தான் உங்களிடம்......

குஞ்சரம் :—நன்ரு யிருக்கிறதே கதை. நான் கையெழுத்து முதலில் போட்டால் ஏராளமாய் வசூலாகு மென்று நீங்கள் சொன்னதால்தான் ஐயா, நான் கை யெழுத்துப் போட்டேன். அப்படிப் போட்டதால் லட் சத்து நாற்பதாயிரம் கையெழுத்தாயிருக்கிறது. அதற்

காக எனக்கு நன்றி காட்டுவதை விட்டு, பணம் வேறே கேட்க வந்து விட்டீர்களே ? நீங்கள் இம்மாதிரி ஆசாமி என்று தெரிந்திருந்தால் நான் கையெழுத்தே போட்டிருக்கமாட்டேனே?

தேன்மாரி:—கையெழுத்துப் போட்டவர்களெல்லோரும் உங்களிடம் முதலில் பணம் வசூல்......

குஞ்சரம் :—சரி சரி, போய் வாருங்கள். கையாலாகாத ஆட்கள். நான் கையெழுத்தே போட்டிருக்கக் கூடாது. ஏதோ புதுக் கழகமாய் இருக்கிறதே உதவி செய்வோம், என்று கையெழுத்துப் போட்டால் கொஞ்சம் கூட நன்றியில்லை. போங்கள் போங்கள். ஏ, குறுக்கா !

குறுக்கன் :—என்ன ?

குஞ்சரம் :—ஐயாவுக்கு வழி காட்டு. என்னிடம் நன்கொடையாகக் கையெழுத்து வாங்கிய ஆட்கள் யார் வந்தாலும் உள்ளே விடாதே, தெரிகிறதா ?

பால் மண்டி :—அப்போ வெள்ளி விழா ?

குஞ்சரம் :—இது வேறு விஷயம். இது சொந்த விஷயமல்லவா ?

# உஷா பரிணயம்

உஷாவின் கல்யாணத்திற்கு இன்னும் ஐந்தே தினங்கள்தான் இருந்தன. உஷா வீட்டில் கல்யாண ஏற்பாடுகள் தடபுடலாய் நடந்துகொண் டிருந்தன. உஷாவின் தந்தை பெரிய சொத்துக்காரர். அதனுல் வெளியூர்களிலிருந்து பந்து மித்திரர்கள் ஏராளமாய் வந்துகொண்டிருந்தார்கள்.

உஷாவின் உயிர்த்தோழி மாலதி அன்று வந்திறங் கியதும் உஷாவிற்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லேயே இல்லே. இருவரும் பழங்காலச் சம்பவங்களேத் திரும்பத் திரும்பப் பேசிக்கொண்டே இருந்தார்கள். திடீரென்று பேச்சுகளுக்கு இடையில் அந்தப் பச்சைப் பேனவை "எங்கே?" என்று கேட்டாள் மாலதி.

"இதோ" என்று தன் ரவிக்கைக்குள் மாட்டி வைத் திருந்த பேனவை எடுத்துக் கொடுத்தாள் உஷா.

"இதை இவ்வளவு ஜாக்கிரதையாக இன்னும் வைத்துக்கொண்டிருக்கிருயா?" என்று சொல்லிவிட்டு, "அந்தப் பிளாஸ்டிக் சோப்புப் பெட்டி எங்கே?" என்று மாலதி கேட்டாள். உஷா மேஜை டிராயரை இழுத்து அதற்குள்ளிருந்து சோப் பெட்டியை எடுத்துக் கொடுத் தாள்.

'இவ்வளவு பழசாய்ப் போயும் இன்னம் விட வில்லையா? தூர எறிந்திருப்பாய் என்று நினேத்தேன்" என்ருள் மாலதி.

"எப்படி எறியமுடியும்? மனம்தான் வருமா?" என் ருள் உஷா.

மாலதி அவளே விழித்துப் பார்த்தாள். உஷா புன் சிரிப்போடு தலே கவிழ்ந்தாள்.

மால்தி:—ஆமாம். உஷா, ஒன்று கேட்கிறேன். பதில் சொல்லுவாயா ?

உஷா :—தாராளமாய்க் கேள். நீ என்ன கேட்கப் போகிருய் என்பது தெரியும்.

மாலதி :—உன் கல்யாண அழைப்பில் உன் கணவர் பெயர் சந்திரன் என்று போட்டிருந்ததைப் பார்த்ததும் எனக்கு ஆச்சரியமாய்ப் போயிற்று.

உஷா :—உடனே மூர்ச்சையாகி விட்டாயாக்கும் ? உன் கணவர் வந்து உனக்குச் சிசுரூஷை செய்து மூர்ச்சை தெளிவித்தாராக்கும்.

மாலதி :—கேலி பேசுவதெல்லாம் இருக்கட்டும். மனோகரனையே நீ கல்யாணம் செய்வாய் என்றுதான் எண்ணிக்கொண்டிருந்தேன். அவரைப் பற்றி நீ என்னிடம் பேசியபோதெல்லாம் உன் முகம் அப்படியே மலர்ந்து போயிருக்குமே! அவர் பெயரை யார் சொல்லக் கேட்டாலும் உனக்குப் பெருமிதமா யிருக்குமே ? அவ்வளவு தூரம் போவானேன்? அவர் பரிசளித்த பேனவையும் சோப்புப் பெட்டியையும் இன்னமும் சீர்குலையாமல் காப்பாற்றி வருகிருயே, இது ஒன்று போதாதா உன் உள்ளத்தை அறிந்துகொள்ள? அப்படியிருந்தும் அவரை ஏன் நீ கல்யாணம் செய்துகொள்ளவில்லை என்பதுதான் எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

உஷா :—நீ சொல்லுவது அவ்வளவும் உண்மை. ஆனல், நான் என்ன செய்வது ? என் பெற்ருேர்களல்லவா அதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.?

மாலதி :—உன் அபிப்பிராயத்தைக் கேட்கவில்லையா ?

உஷா :—எனக்கு அவரை விவாகம் செய்வதில்தான் பூரண திருப்தி என்பது அவர்களுக்குத் தெரியாதா என்ன ? தெரிந்துதான் இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிருர்கள்.

மாலதி :—உனக்கு அதில் உறுதியான கருத்து இருந்தால் நீ ஏன் அவர்களிடம் சொல்லக்கூடாது ?

உஷா :—அவர் எங்கிருக்கிருர் என்றே தெரிய வில்லை. ஒரு வருஷமாக அவரைக் காணவில்லை.

மாலதி :—அவர் இருப்பிடத்தை விசாரிக்கும்படி உன் தந்தையிடம் சொன்னுல் என்ன ?

உஷா :—தந்தைக்கு அவரைப் பிடிப்பதில்லை. அதனுல் நான் எப்படிச் சொல்கிறது ? எனக்கு அவ்வளவு தைரியமில்லை. அது கிடக்கட்டும். இப்போ நடக்கிற கல்யாணங்கள் எல்லாம் காதல் கல்யாணங்களா என்ன? பெற்ருேர்கள் ஏற்பாடு செய்கிருர்கள் ; கல்யாணங்கள் நடக்கின்றன.

மாலதி :—அது உண்மைதான். என்ருலும், காதல் கல்யாணங்களும் இடையிடையே நடக்காமலா இருக்கின்றன ? மனத்தைப் பறி கொடுக்காமல் இருந்தால் பெற்ருேர்கள் செய்து வைப்பதில் திருப்தி கொள்ள வேண்டியதுதான். பறிகொடுத்தால் அப்புறம் சிரமமாய் இருக்குமே என்றுதான் கேட்டேன்.

உஷா :—பறிகொடுத்தது உண்மைதான். ஆனுல் எனக்குத் தைரியம் வரவில்லையே ! அவர் இருந்தாலும் அல்லது கடிதம் ஏதாவது எழுதினுலும் தைரியமாய் இருக்கும். அதையும் காணவில்லையே ! நான் என்ன செய்வது ? நீ சொல்லு. அதனுல்தான் நடந்தது நடக்கட்டும் என்று சும்மா இருக்கிறேன்.

இச்சமயம் உஷாவின் கண்களிலிருந்து கண்ணீர் வடிந்தது. மாலதி அவளைச் சமாதானப்படுத்தினுள். அப்புறம் அவள் இந்தப் பேச்சையே எடுக்கவில்லை. கல்யாண தினம் வரையில் மனேகரனைப் பற்றிய தகவல் எதுவுமே உஷாவுக்குக் கிடைக்கவில்லை. மறுநாள் காலை எட்டு மணிக்கு முகூர்த்தம். அன்றிரவு வெகுநேரம் வரையில் உஷா தூங்கவில்லை. மனேகரனை ஏன் காணவில்லை என்ற சிந்தனையே அவளுக்குப் பலமாய் இருந்தது. அவனுக்கு இவளிடம் காதல் உண்டு என்பதில் இவளுக்குச் சந்தேகம் இல்லை. தனக்கு அவனிடம் காதல் உண்டு என்பதிலும் சந்தேகம் இல்லை. அப்படியானுல் தன்னைக் கல்யாணம் செய்ய ஏன் அவன் முயற்சி செய்ய

வில்லை?. தன் பெற்ரோர்களைப் பார்த்து ஏன் அவன் பேச வில்லை ? இம்மாதிரியான எண்ணங்கள் அவள் மனத்தை வாட்டின.

இனி இந்த ஜன்மத்தில் அவனுடன் சேர்ந்து வாழப்போவதில்லை என்பதை நினைத்ததும் அவள் உடல் பதறியது. எத்தனை இன்பக் கோட்டைகளைக் கட்டி இருந்தோம் என்று அவள் எண்ணிப் பெருமூச்சு விட்டாள். தன் பெட்டிக்குள் வைத்திருந்த அவன் படத்தை எடுத்துப் பார்த்துக் கண்ணீர் வடித்தாள். இச்சமயம் அவள் தாயார் அங்கே வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை.

மனோகரன் படத்தைத் தாயார் பார்த்ததும், "உஷா, நீ செய்வது நன்ருய் இல்லை. ஒவ்வொன்றும் விதிப்படி தான் நடக்கும். இந்தப் படத்தை இனி நீ வைத்துக் கொண்டிருப்பது சரியல்ல. உன் பெட்டிக்குள் இருக்கக் கூடாது. உன் கணவர் பார்த்தால் என்ன நினைப்பார் ? படத்தை நான் வைத்திருக்கிறேன்" என்று சொல்லி, படத்தை அவள் கையிலிருந்து எடுத்துக்கொண்டாள்.

உஷா :—படம் கூடவா என்னிடம் இருக்கக்கூடாது?

தாயார் :—அதுதான் இருக்கக் கூடாது. பெரிய தகராறுகளில் கொண்டுவந்து விட்டுவிடும். உனக்குத் தெரியாது. நீ சிறு குழந்தை. இனி அவரைப் பற்றி நினைப்பதையும் பேசுவதையும் நாளைக் காலை எட்டு மணியிலிருந்து விட்டுவிடு.

உஷா :—பேசுவதை வேண்டுமானுல் விட்டு விடு கிறேன். நினைப்பதை எப்படியம்மா விட்டு விட முடியும் ?

தாயார் :—எல்லாம் போகப் போகச் சரியாய்விடும். கல்யாணத்திற்கு முன்பு எல்லாப் பெண்களும் இப்படி நினைப்பது வழக்கம்தான். கல்யாணமான பின்பு சரியாய்ப் போவதும் வழக்கம்தான். நேரமாய்விட்டது. படுத்துக் கொள். காலையில் சீக்கிரமாக எழுந்திருக்க வேண்டும்.

மணப்பந்தல் பிரம்மாண்டமாய் இருந்தது. அது நிறைய விருந்தினர்களும் கூடியிருந்தார்கள். தாலி

கட்டும் சடங்கு ஆரம்பமாயிற்று. உஷாவின் கண்கள் பந்தலின் ஒவ்வொரு பகுதியையும் ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருந்தன. அவள் கண்கள் யாரைத் தேடுகின்றனவோ அவரைக் காணவில்லை. நன்றாய்ப் பார்க்காமல் விட்டுப் போயிருக்கலாம் என்ற நினைப்பில் இரண்டாவது தடவை மறுபடியும் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை பார்க்க ஆரம்பித்தாள்; கிடைக்கவில்லை. மனத்தில் சோர்வு ஏற்பட்டது.

மூன்றாவது தடவையாகக் கண்ணோட்டம் ஆரம்பமாயிற்று. இச்சமயம் தாலி கட்ட வேண்டிய கட்டமும் வந்தது. மேளகாரன் மேளத்தைக் கெட்டியாய் வாசித்தான். தாலியைக் கையில் எடுத்துப் பெண் கழுத்திற்குக் கொண்டுபோகிறான் சந்திரன். தாலி கட்டப் போகிற சமயத்தில் 'இதென்ன, இந்தப் பெண் எங்கேயோ பார்த்துக் கொண்டிருக்கிறாள்' என்று சிலர் நினைத்தார்கள்.

அவள் கண்கள் ஒரு தூணிற்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒருவர் மீது பதிந்தன. "அவரேதான், அவரேதான்" என்று சொல்லியது அவள் மனம். வைத்த கண்ணை எடுக்கவில்லை உஷா. சந்திரன் தன் கழுத்தில் தாலியைக் கட்டப் போவதையும் அவள் உணரவில்லை. அந்த நிலைமையில் தாலி கட்டும் வைபவமும் நடந்தது. அதாவது உஷாவின் கண்கள் மனோகரனைப் பற்றியிருக்க சந்திரன் உஷாவுக்குத் தாலி கட்டினான்.

முகூர்த்தத்திற்குப் பின்னால் காப்பி சாப்பிட விருந்தினர்கள் எழுந்து சென்றார்கள். அமைதியாய் உட்கார்ந்திருந்த விருந்தினர்கள் எழுந்து நகர ஆரம்பித்தபடியால் உஷா தன் கண்ணால் பற்றியிருந்த மனோகரனும் கூட்டத்தில் மறைந்து போனான். அப்புறம் அகப்படவேயில்லை.

சந்திரனை விவாகம் செய்ய முடியாது, தன்னையே 'விவாகம் செய்வேன்' என்று உஷா பிடிவாதம் செய்து அதனால் கல்யாணம் நின்று போனாலும் போகலாம் என்று கடைசி நிமிஷம் வரையில் மனோகரன் மனக்

கோட்டை கட்டிவந்தான். மனோகரன் எப்படியாவது தன் பெற்றோர்களைச் சரிக்கட்டி இந்தக் கல்யாணத்தை நிறுத்திவிடுவான் என்று உஷா மனக்கோட்டை கட்டி வந்தாள். கழுத்தில் தாலி பூட்டிய அதே விநாடியில் இருவருடைய மனக்கோட்டைகளும் தகர்ந்து பூமியில் விழுந்தன. இனி நம்பிக்கையில்லை என்பது தெரிந்ததும் உஷாவின் மனம் திடீரென்று அமைதியுற்றது. அதில் சந்தோஷமும் இல்லை ; துக்கமும் இல்லை.

உஷா - சந்திரனின் குடும்பவாழ்க்கை ஆரம்பித்தது. உஷாவின் உள்ளத்திலோ முகத்திலோ வருத்தக்குறி எதுவும் இல்லை. பூர்ண திருப்தியோடு நடந்து வந்தாள். புதுப்பெண்ணும், மாப்பிள்ளையும் இளமையின் வேகத்திலும் இல்லறத்தின் புதுமையிலும் சொக்கிப்போய் எப்படி ஆனந்தமாய் இருப்பார்களோ, அதே மாதிரியாய் உஷாவும் சந்திரனும் இருந்தார்கள். அநேகமாய் மனோகரனைப்பற்றி நினைப்பதேயில்லை. அபூர்வமாய் நினைத்தாலும், இந்த ஆண்களே இப்படித்தான் என்ற நினைப்பு வந்து அதைத் தள்ளிவிடுவாள். கல்யாணத்திற்குப் பின் மனோகரன் தன்னை வந்து பார்க்காததிலிருந்து தன்னை அலட்சியம் செய்வதாய் நினைத்தாள்.

உஷாவின் தந்தை சுவாமிரத்தினம் பெரிய பணக்காரர். பணத்தினால் கிடைக்கக் கூடியவைகளை எல்லாம் பெற்றிருந்தார்.உதாரணமாகச் செல்வாக்கு,இவர் என்ன சொன்னாலும் “ ஆமாம்,” போடும் ஒரு இழிரகக் கூட்டம், பிரம்மாண்டமான மோட்டார், பெரிய பங்களா, தானே எல்லாரையும்விட பெரிய புத்திசாலி என்ற அகம்பாவம், தன் வாயிலிருந்து உதயமாவதெல்லாம் வேதங்கள் என்ற இறுமாப்பு, - இவ்வளவையும் பெற்றிருந்தார். எனவே, எதிர்க்கட்சி அபிப்பிராயம் என்பதை அவரிடம் சொல்லுவாரே யாரும் கிடையாது. அதனால் எதிர்க் கருத்துகளை அறியாமலேயே அவர் வளர்ந்து வந்தார்.

தமது மருமகனுக்குத் தம்மால் ஒரு தொழிலை ஏற்படுத்திக் கொடுத்ததாக இருக்கவேண்டுமென்று அவர் நினைத்தார். அச்சமயம் சிமெண்ட் தொழில் நல்ல லாபம்

வரக்கூடியதாய் இருந்தது. சொல்ல வேண்டியவர் களிடம் சொல்லி ஒரு ஜில்லாவில் பல ஊர்களுக்கு ஏஜென்ஸி வாங்கிக் கொடுத்தார். சிமெண்டுக்குக் கண்ட் ரோல் இருந்தபடியால் லாபத்திற்குக் குறைச்சலில்லை. ஆகவே, கஷ்டமில்லாமல் சுலபமாக லாபம் கிடைத்துச் சொகுசான வாழ்க்கையை உஷா - சந்திரன் நடத்தி வந்தார்கள்.

வியாபாரம் நன்ருய் நடந்து வந்தபடியால் ஒரு மோட் டார் வாங்கினுல் என்ன என்று அவர்கள் யோசித் தார்கள். மாமஞர் மோட்டாரை இரவலாக இனியும் உப யோகிப்பதோ அல்லது மோட்டார் வாங்கித் தரும்படி மாமஞரிடம் கேட்பதோ சரியல்ல என்று சந்திரனுக்குத் தோன்றியது. உஷாவும் அதை ஆதரித்தாள். ஆனுல், தங்களுக்கென்று ஒரு மோட்டார் வாங்குவதைத் தன் தந்தை ஒப்புக்கொள்ளுவாரா என்ற சந்தேகம் உஷா வுக்குத் தோன்றியது.

சுவாமிரத்தினத்தின் போக்கு அவர் மகளுக்குத் தான் நன்ருய்த் தெரியுமே ஒழிய,மருகனுக்குத் தெரியாது. நமது பணத்தைக் கொண்டு வாங்கும் போது அவர் ஏன் ஆட்சேபிக்கப்போகிருர் என்றே சந்திரன் நினைத்தான். அதற்கு மேல் விஷயத்தை விளக்க உஷா விரும்பவில்லை. சரியென்று சொல்லிவிட்டாள்.

மாலை வேளைகளில் மோட்டார் கம்பெனிகளுக்குச் சென்று பல ரக மோட்டார்களைப் பார்த்து முடிவு செய்வ தென்று தீர்மானித்தார்கள். அப்படியே பார்த்து வரும் போது ஒரு நாள் பர்வதம் மோட்டார் கம்பெனிக்குள் நுழைந்தார்கள். அங்குள்ள மோட்டார் வகைகளில் ஒன்று அவர்களுக்குப் பிடித்தமாய் இருந்தது. அதை வாங்கிக் கொள்ளுவதாகச் சந்திரன் சொன்னுன். "அப் படியானுல் உங்கள் தேவையைப் பதிவு செய்து ஆயிரம் ரூபாய் கொடுத்துவிட்டுப் போங்கள். உங்கள் மோட் டார் வந்ததும் தெரிவிக்கிருேம்" என்ருர் மோட்டார் விற்பவர்.

சந்திரன் :—நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால் உடனே கிடைக்காது போலிருக்கிறதே !

விற்பவர் :—உடனேயா ? மோட்டார்காரரா ? இதென்ன, இப்படிப் பேசுகிறீர்கள் ? இப்பொழுதே நீங்கள் முன்பணம் கொடுத்தால் மூன்று மாதம் கழித்துக் கிடைக்கலாம்.

சந்திரன் :—இங்கேயே பத்து வண்டிகளுக்கு மேல் இருக்கின்றனவே, இவற்றில் ஒன்றைக் கொடுக்க முடியாதா ?

விற்பவர் :—இவற்றில் பாதி வெளியூர் ஏஜெண்டுகளுக்குப் போகின்றன. மறு பாதி ஏற்கெனவே விற்பனையாய் விட்டன. வாங்கியவர்கள் எடுத்துக்கொண்டு போக வேண்டியதுதான் பாக்கி.

சந்திரன் :—வெளியூர்களுக்குப் போகிறவைகளில் எதையாவது ஒன்றைக் கொடுக்க முடியாதா ?

விற்பவர் :—அது எனக்குத் தெரியாது. மானேஜரிடம்தான் கேட்க வேண்டும்.

மானேஜரைப் பார்ப்பதற்காகச் சந்திரன் சீட்டு அனுப்பினான். மானேஜர் உள்ளே தொழிற் சாலையில் இருந்தார். சீட்டிலுள்ள பெயரைப் பார்த்ததும், தமது அறைக்குச் சென்று சந்திரனைக் கூட்டி வரும்படி உத்தர விட்டார். சந்திரன் அறைக்குள் வந்ததும் மானேஜர் எழுந்து அவரை வரவேற்று, "சௌக்கியமா ? உஷா சௌக்கியந்தானா ?" என்று கேட்டார். சந்திரனுக்குத் திகைப்பாயிருந்தது. "எங்களைத் தெரியுமா ?" என்று கேட்டான்.

மானேஜர் :—அதென்ன அப்படிக் கேட்கிறீர்கள் ? உங்கள் மாமா எனக்கு நல்ல பழக்கமாயிற்றே! உங்கள் கல்யாணத்திற்குக் கூட வந்திருந்தேனே?

சந் :-அப்படியா, ரொம்ப சந்தோஷம். உஷா கூட இங்கே வந்திருக்கிறாள்.

மா :-அப்படியா? (மேஜைமீது இருந்த பொத்தானை அமுக்கினார். உள்ளே ஒரு பையன் வந்தான். 'ஐயா

கூட வந்த ஒரு அம்மா வெளியே இருக்கிருர்கள்; கூட்டி வா' என்ருர்.

உஷா உள்ளே நுழைந்து மனேகரனைப் பார்த்ததும் அப்படியே திகைத்து நின்ருள்.

மனேகரன் :-வாருங்கோ, வாருங்கோ. உஷா தேவி யாரே, செளக்கியந்தாஞ?

உஷா :-நீங்களா? நீங்கள், இங்கே இருப்பவர்களா எங்களைப் பார்க்காமல் இருக்கிறீர்கள்?

மனே :-நான் பம்பாயில் இருந்தேன். இரண்டு வாரங்களுக்கு முன்ஞல்தான் இங்கே இந்தக் காரியா லயத்திற்கு வந்தேன். இங்கேயே இருந்திருந்தால் இதுவரை உங்கள் இருவரையும் பார்க்காமல் இருப் பேஞ?

உஷா :-இருக்கட்டுமே, வந்து இரண்டு வாரங்களா கியும் பார்க்காமல் இருக்கிறீர்கள் அல்லவா? அதிலி ருந்தே எங்களைப் பார்க்க வேண்டுமென்ற நினைப்பு உங் களுக்கு இல்லை என்பது தெரிகிறதே!

மனே :-அப்படி யெல்லாம் கோபமாய்ச் சொல்லி விடக் கூடாது.

சந் :-போனதெல்லாம் போகட்டும். அடுத்த ஞாயி றன்று பகல் சாப்பாட்டிற்கு நம் வீட்டிற்கு வந்துவிட வேண்டும்.

மனே :-புதுத் தம்பதிகளுக்கு நானல்லவா விருந்து வைக்க வேண்டும்?

உஷா :-விருந்து வைப்பதுதான் இரண்டு வாரங்க ளாகத் தெரிந்து போயிற்றே! முதலில் எங்கள் வீட்டிற்கு வாருங்கள். அப்புறம் உங்கள் வீட்டிற்கு வருகிருேம்.

மனே :-உத்தரவு.

சந் :-ரொம்ப சந்தோஷம். இனி மோட்டார் காரைப் பற்றிய கவலை விட்டது.

வெளியூர்களுக்கு அனுப்பவிருந்த கார்களில் ஒன்றை மறுநாளே சந்திரனுக்குக் கொடுக்கும்படி மனேகரன் ஏற்பாடு செய்தான். ஆனால், உஷா பயந்தபடியே அவள் தகப்பனர் சுவாமிரத்தினம் வெகுண்டார்..தமக்கு நிகராகத் தமது மருமகனும் சொந்த மோட்டார் கார் வைத்துக் கொள்ளுவதா என்ற நினைப்பு அவருக்குத் தோன்றியது. உடனே மகளைக் கூப்பிட்டனுப்பினர்.

சுவாமி :-உஷா, உன்னைப் புத்திசாலி என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன். இப்படி நடந்து கொண்டாயா?

உஷாவுக்கு விஷயம் என்ன வென்பது தெரிந்திருந்தாலும், தெரியாதது போல், "என்னப்பா, என்ன சமாசாரம்?" என்று கேட்டாள்.

சுவாமி :-சமாசாரமா? வேறு என்ன சமாசாரம், கார் வாங்கின சமாசாரம்தான்.

உஷா :-அதெற்கென்ன அப்பா?

சுவாமி :-என்னவா? சொந்தமாய்க் கார் வைத்தால் அதில் எவ்வளவு சங்கடங்கள் இருக்கும் என்பது உங்களுக்கு என்ன தெரியும்? முதலில் டிரைவர் நல்லவனய்க் கிடைக்கவேண்டும். அப்புறம் காரில் அந்தச் சாமான் போச்சு, இந்தச் சாமான் போச்சு என்று சொல்லிச் செலவை இழுத்து வைத்துக்கொண்டே இருப்பார்கள். ஆக அப்படியும் இப்படியுமாக மாதம் நானூறு ரூபாய்க்குச் செலவு வைத்துவிடுவார்கள். எதற்காக இந்த நானூறு ரூபாய் அனுவசியச் செலவு என்று கேட்கிறேன்.

உஷா ஒன்றும் பதில் சொல்லவில்லை.

சுவாமி :-நம்ம கார், ஒன்றுக்கு ரெண்டாய் இருக்கும் போது ஏன் உங்களுக்கென்று இன்னொரு கார் வேண்டும்?

உஷா :-சில சமயங்களில் அவசரத்துக்குக் கிடைப்பதில்லை என்று அத்தான் சொல்லுகிறார்.

சுவாமி :-கொஞ்சம் முன்ன பின்ன கிடைப்பதால் என்ன காரியம் முழுகிப்போகிறதாம்?

உஷா பதில் பேசவில்லை.

சுவாமி :-சரி, காரை விற்றுவிடச் சொல்லு. இப்பொழுது சுலபமாகக் கார் கிடைப்பதில்லை. வாங்கின விலைக்கு மேலே ஆயிரம் ரூபாய் லாபத்திற்கு விற்றுவிடலாம். நான் ஏற்பாடு செய்கிறேன்.

உஷா :-அது நன்றாயிருக்காது அப்பா. நாம் பிளாக் மார்க்கெட்டில் விற்று விட்டோம் என்ற கெட்ட பெயர் ஏற்படும்.

சுவாமி :-பொல்லாத கெட்டபெயரைக் கண்டுவிட்டே! பிளாக் மார்க்கெட்டில் சம்பந்தப்படாதவன் யார் இருக்கிறான் ?

உஷா :-நம் பெயரோடு மட்டும் போகாது. அவர் பெயரும் கெடும்.

சுவாமி :-எவர் பெயர்?

உஷா :-மனோகரன்.

சுவாமி :-யார் மனோகரனா, அவன் எங்கே வந்தான்? அவனுக்கும் இதற்கும் என்ன?

உஷா :- அவர் இங்கேதான் பர்வதம் மோட்டார் கம்பெனிக்கு மானேஜராய் இருக்கிறார். அவரால்தான் எங்களுக்கு உடனே கார் கிடைத்தது.

சுவாமி :-ஓஹோ ! அப்படியா சமாசாரம் ! அவன் உங்கள் தலையில் ஒரு காரைக் கட்டிவைத்து விட்டான். அப்படிச் சொல்லு. அதனால்தான், நீங்கள் கார் வாங்கியிருக்கிறீர்கள்!

உஷா :-என்னப்பா இப்படிப் பேசுகிறீர்கள்? நாங்களல்லவா கார் வேண்டுமென்று கேட்டோம். அவரா எங்களிடம் வந்து வாங்கச் சொன்னார்? நீங்களே ஆயிரம் ரூபாய் லாபத்திற்கு விற்கலாமென்று சொல்லுகிறீர்கள். பிறகு எதற்காகக் கார் விற்பதற்கு ஆட்களை அவர் தேடப் போகிறார்?

சுவாமி :-உனக்கென்ன தெரியும், அந்த வியாபாரத்தைப் பற்றி? இருந்திருந்து அகம்பாவம் பிடித்த மனோ

கரனிட்மா போய்க் கார் வாங்க வேண்டும்? சரி, நீ மாப் பிள்ளையிடம் கேட்டுச்சொல்லு. நான் விற்றுத் தருகி றேன்.

"கேட்டுச் சொல்லுகிறேன்" என்று கூறிவிட்டு உஷா அந்த இடத்தைவிட்டு அகன்றுள்.

உஷா போனவுடன் தம்முடைய மானேஜர் கதிர் வேலுவைச் சுவாமிரத்னம் கூப்பிட்டார். அவன் பல வருஷங்களாகச் சுவாமிரத்தினத்திடம் வேலை பார்த்து வருகிறான். அவருடைய சுழிவு, நெளிவுகளை யெல்லாம் தெரிந்தவன். உஷாவைத் தான் கல்யாணம் செய்து கொண்டால் வீட்டுக்கு எஜமானனுகிவிடலாமே என்று அவன் நினைத்தது கூட உண்டு. அது நடக்காமல் போகவே உஷாவை விவாகம் செய்த சந்திரன் மீது அவன் வெறுப்பு திரும்பியது. சுவாமிரத்னம் அவனைப் பார்த்து, "என்னப்பா நான் சொல்லியதைக் கேட்டுக் கொண்டிருந்தாயல்லவா?" என்றார்.

கதிர்வேலு :-கேட்டேன் கேட்டேன். சிறு பிள்ளை கள்தானே. பொறுப்பு தெரிய இன்னம் கொஞ்சகாலம் ஆகுமல்லவா?

சுவாமி :-கார் என்ன கார்? டாம் டீம்னு தலைகீழா நடக்கிறதைப் பார்க்கலையா? எத்தனை வருஷம் கழித்து நான் கார் வாங்கினேன்? நாற்பத்தைந்து வயதுக்கு மேலல்லவா வாங்கினேன்?

கதிர் :-உங்க போக்கோடவா இதுகளை ஒப்பிடறீங்க? அதுக்கும், இதுக்கும் எள்ளுத்தான் வித்தியாசம். விட்டுத் தள்ளுங்கள்.

சுவாமி :-நாளைக்கே காரை விற்றுப்போட வேண் டும்.

கதிர் :-அதென்ன பெரிய வேலை? நாளுச்சு, ஒரு மணி நேரத்தில் விற்றுத் தருகிறேன்.

## 2

ஞாயிறன்று சந்திரன் வீட்டில் மனோகரனுக்குத் தடபுடலாக விருந்து நடந்தது. அன்று காலையிலிருந்தே விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை உஷா கவனிக்க ஆரம்பித்தாள். மனோகரனுக்கு என்னென்ன கறி வகைகள் பிடிக்குமோ அவ்வளவும் தயாராய் இருந்தன. மனோகரன் வருவதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்பே உஷா தன்னை அலங்காரம் செய்துகொள்ள ஆரம்பித்தாள். மனோகரனுக்கு என்ன வர்ணம் பிடிக்குமோ அந்த வர்ண ஆடைகளையும், அவனுக்குப் பிடித்தமான நகைகளையும் அணிந்தாள். எதற்காக அம்மாதிரி செய்ய வேண்டுமென்பது அவளுக்கே புரியவில்லை. தன்னை அலட்சியம் செய்துவிட்டதாக மனோகரன்மீது கொண்டிருந்த கோபமும் போனவிடம் தெரியவில்லை.

விருந்து நடந்து முடிந்தது. மோட்டார் வர்த்தகம், சிமெண்ட் வர்த்தகத்தைப் பற்றிப் பேச்சு நடந்தது. இரண்டிலும் கள்ள மார்க்கெட் இருக்கிறது என்பதை இருவரும் ஒப்புக் கொண்டார்கள். ஆனால், தாங்கள் இருவர் மட்டும் அந்தக் கள்ள மார்க்கெட் தொழிலில் இறங்கவில்லை என்பதையும் பேசிக் கொண்டார்கள்.

" கள்ள மார்க்கெட்டில் பணம் சம்பாத்தியம் செய்து என்ன பிரயோஜனம்?" என்றான் மனோகரன்.

சந்திரன் :-பணத்திற்குப் பிரயோசனமில்லையென்று சொல்லிவிட முடியுமா? கொள்கையைப் பொறுத்த வரையில் கள்ள மார்க்கெட் கூடாது என்பதுதான் என்னுடைய கருத்து.

மனோகரன் :-நீங்கள் சொல்லுகிற கொள்கை என்னவோ எனக்குப் பிடிக்கவில்லை. ஒரு நல்ல காரியத்திற்குப் பணம் வேண்டியிருந்தால் விலையைக் கூட்டி விற்பதால் என்ன கெடுதல்? எனக்குப் பணம் வேண்டியதில்லை. வருகிற பணம் போதும். எவ்வளவு பணம் வந்தால்தான் மனிதருக்குத் திருப்தி ஏது?

சந்திரன் :-வேதாந்தி மாதிரி பேசுகிறீர்களே?

மனோ :-நான் சன்னியாசியல்ல. உள்ளதைத்தான் சொல்லுகிறேன். தம்முடைய சுயநலத்திற்காகக் கள்ள மார்க்கெட் செய்வது என்பது பெரிய குற்றம்.

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போது அங்கே கதிர்வேலு வந்தான். கள்ள மார்க்கெட்டைப் பற்றி மனோகரன் சொல்லிக் கொண்டிருந்தது அவன் காதில் விழுந்தது.

மோட்டார் வியாபாரத்தைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்று அவன் நினைத்துக் கொண்டான். அதனால் உள்ளே வராமல் வந்த வழியே திரும்பி விட்டான். அவன் வந்ததையும், திரும்பியதையும் யாரும் கவனிக்கவில்லை. மேஜைமீது வைத்திருந்த திராக்ஷைப் பழத்தை எடுத்து மனோகரன் வாயில் போட்டுக் கொண்டிருக்கும் போது டெலிபோன் மணி அடித்தது. சந்திரன் எழுந்துபோனான். மனோகரனும் உஷாவும் மட்டும் தனித்திருந்தார்கள்.

மனோகரன் அங்கு வந்ததிலிருந்து அவர்கள் தனித்திருந்தது அப்பொழுதுதான். உஷாவைப் பார்த்தான். உஷாவும் இவனைப் பார்த்தாள். இருவர் முகத்திலும் மகிழ்ச்சியும் திருப்தியும் தாண்டவமாடின. மனோகரன் தன்னை அலட்சியம் செய்யவில்லை என்று உஷா நினைத்தாள். உஷா தன்னை வெறுத்துத் தள்ளிவிடவில்லை என்று மனோகரன் நினைத்தான். அவ்வளவுதான். தன்னை அறியாமலேயே தன் கையிலிருந்த ஒரு திராக்ஷைப் பழத்தை உஷாவிடம் நீட்டினான். உஷா வேண்டாமென்று தலையை அசைத்தாள். இருவரும் வாய் திறக்கவில்லை. அவள் தலையை அசைப்பதைப் பார்த்த மனோகரன் மறுபடியும் நீட்டினான். உஷா வாங்கவில்லை. முகத்தைக் கொஞ்சம் கடுமையாக வைத்துக் கொண்டு நீட்டிப் பார்த்தான். அப்பொழுதும் அவள் வாங்கவில்லை.

ஆனால், மனோகரன் முகம் கடுமையானதைப் பார்த்து உஷாவின் முகம் கொஞ்சமும் மாறவில்லை. அவள் முகத்தில் புன்சிரிப்பு தவழ்ந்து கொண்டுதான்

இருந்தது. மனோகரனுக்கு ஒன்றும் புரியவில்லை. இதற்குள் டெலிபோன் பேசச் சென்ற சந்திரன் திரும்பி வரும் சப்தம் கேட்டது. உடனே கோபமாகக் கையில் இருந்த திராக்ஷைப் பழத்தை மேஜைமீதிருந்த தட்டில் போட்டு விட்டு மற்றொரு பக்கம் திரும்பிக் கொண்டான்.

சந்திரன் திரும்பி வந்ததும், "சரி. நான் போய்வரட்டுமா?" என்று கேட்டான் மனோகரன். "அதற்குள்ளாகவா? அவ்வளவு அவுசரம் என்ன?" என்றாள் உஷா. மனோகரனுக்கு ஆச்சர்யமாக இருந்தது. திராக்ஷைப் பழத்தை வாங்க மறுத்தாலும் தன்னைப் போக விடவும் மறுக்கிறாளே என்று நினைத்தான். உஷா தன் புருஷனைப் பார்த்து, "சினிமாவுக்கோ நாடகத்திற்கோ போக வேண்டும் என்கிறீர்களே?" என்று கேட்டாள்.

"ஆமாம். நாம் மூவரும் போவோம்" என்றான் சந்திரன்.

அதை மறுக்க மனோகரனுக்கு விருப்பம் இல்லை. உஷாவுடன் இருப்பதைவிட வேறு அவனுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியது எதுவும் இல்லை. ஆகவே திருப்தியுடன் சம்மதித்தான்.

## 3

காரை விற்க முடியாதென்று சந்திரன் சொல்லி விட்டதைக் கதிர்வேலு சுவாமி ரத்னத்திடம் வந்து சொன்னான். இதைக் கேட்டதும் அவர் ஒரு துள்ளுத் துள்ளினார். "இதெல்லாம் அந்த மனோகரன் போதனைங்க. என் காதாலேயே அவர் பேசினதை நான் கேட்டேன். ரொம்ப ஆவேசமாய்க் கள்ளமார்க்கெட்டைக் கண்டித்து அன்றைக்கு பேசிக்கிட்டு இருந்தாரு" என்று கதிர்வேலு மெதுவாக வத்தி வைத்தான்.

அதைக் காதில் வாங்கியதும் ஒரு உறுமல் உறுமினார் சுவாமிரத்னம். "இருக்கட்டும் வழி செய்கிறேன்" என்று கர்ஜித்தார், மேலும் தொண்டையைக் கனைத்துக் கொண்டு.

"அவாளெல்லாம் சினிமா, நாடகமின்னு சேர்ந்தாப்பலே இல்லாபோறாக" என்று மேலும் கதிர்வேலு தூபம் போட்டான்.

சுவாமிரத்தினத்திற்குத் தாங்கவே முடியாத கோபம் வந்தது. "சரி, சரி, அந்த வெற்றிலைப் பெட்டியை எடு" என்றார். கோபம் அதிகமாய் வளர்ந்தது. அதற்குத் தக்க வார்த்தைகள் தமது பாஷையில் கிடையாதென்றால் உடனே வெற்றிலை பாக்கு, புகையிலை போடுவது அவர் வழக்கம்.

புகையிலையின் காரம் ஏறிக் கொண்டிருந்தபோது, அங்கே அம்பலவாணன் வந்தார். யுத்த காலத்தில் ஏற்பட்ட திடீர்ப் புரட்சிகளால் பணக்காரர்களான வர்களில் அவர் ஒருவர். அவரைப் பார்த்ததும் சுவாமி ரத்னம் முகத்தில் இருந்த கோபம் திடீரென்று இறங்கியது. சுவாமிரத்னம் டிபன் கொண்டுவரச் சொல்லி உபசாரம் செய்தார். டிபன் சாப்பிட்டு முடிந்ததும் "என்ன பிரதர், அந்த மோட்டார் வண்டியைக் கொடுக்க முடியாதென்று சொல்லிவிட்டீர்களாமே? கொஞ்சம் கூடக்குறைய விலை போட வேண்டுமானாலும் போட்டுக்கிடுங்க. நம்ம மாப்பிள்ளை ரொம்ப பிரியமாய்க் கேட்கிறார். அதற்காகத்தான் நான் வற்புறுத்துகிறேன்" என்றார்.

சுவாமிரத்னம் தன் நெஞ்சில் கிளம்பிய புயலை அடக்கிக் கொண்டு, "அந்த வயிற்றெரிச்சலைக் கிளப்பாதேங்க. உருப்படுகிற பிள்ளைகளாய் இருந்தால்தானே. வீட்டில் ஒன்றுக்கு மூன்று கார்கள் இருக்கின்றன. இருந்தும் அவாளுக்குத் தனியாகக் கார் வேண்டுமாம். இப்பத் தான் அதைப் பற்றிப் பேசிக்கிட்டிருந்தோம்" என்று பதில் சொன்னார்,

அம்பலவாணன் :—அது போனால் போகட்டும். இன்னொரு முக்கியமான பேரம். இந்த விஷயத்தில் நீங்கள் என் வார்த்தையைத் தட்டவே கூடாது. என்ன?

சுவாமிரத்னம் :—விஷயத்தைச் சொல்லுங்கள்.

அ :—விஷயம் என்ன விஷயம். எல்லாம் உங்கள் கைக்குள் இருக்கிற விஷயந்தான். கொஞ்சம் சிமெண்ட் வேண்டும். அவ்வளவுதான்.

11

சு :—சிமெண்டா? அடேயப்பா, என் உயிரை வேண்டுமானாலும் கொடுத்து விடுகிறேன். அதை மட்டும் கேட்காதீர்கள். திடீர் திடீர்னு வந்து சோதனை போடுகிறார்களே, எப்படி ஐயா கொடுக்க முடியும்?

அ :—மனமிருந்தால் இடமுண்டையா. உங்களுக்குத் தெரியாத யோசனையா?

சு :—நம்மாலே அதெல்லாம் முடியாது. என்னை மன்னிச்சிடுங்க. என்னை ஆபத்திலே மாட்டிவைக்க வேண்டும் என்பது உங்கள் நினைப்பாய் இருந்தால் சொல்லுங்கள்.

அ :—உங்களை ஆபத்தில் மாட்டி வைப்பதாவது? அதற்கு ஒருவன் பிறந்தா இருப்பான்? உங்க கிட்டத்திலே ஒரு கழுதை நெருங்க முடியுமா? இந்தாங்க பத்தாயிரம் ரூபாய் இருக்கு. வைத்துக் கொள்ளுங்க. மற்ற விஷயங்களை அப்புறம் பேசிக் கொள்வோம்.

அ :—ரூபாய் உங்க ரூபாயாக என்னிடம் இருக்கும். அதற்கு மேலே நான் ஒன்றும் வாக்குக் கொடுக்க முடியாது.

அம்பலவாணன் விடைபெற்றுக் கொண்டு போய் விட்டார். அம்பலவாணன் போனதும் கதிர்வேலைக் கடைக் கண்ணால் சுவாமிரத்னம் பார்த்தார். மேல் வேஷ்டியை இடுப்பில் சுற்றிக் கொண்டு முழங்கையைச் சொறிந்து கொண்டு நாய்கள் எலும்புத் துண்டை எவ்வளவு ஆவலோடு பார்க்குமோ அவ்வளவு ஆவலோடு பத்தாயிரம் ரூபாயைப் பார்த்துக் கொண்டு நின்றான். அதில் ஒரு தம்பிடி கூடத் தனக்குக் கிடையாது என்று தெரிந்தாலும் அந்தப் பணத்தைப் பார்ப்பதில் அவனுக்கு அவ்வளவு ஆசை. "இந்தா. இந்தப் பணத்தைப் பெட்டியில் எடுத்து வை. இது ஒரு சனியன். அவன் கேட்கிறபடி செய்கிறதற்கு என்ன வழி இருங்கிறது? பிராணனை வாங்குகிறான்கள்" என்று சுவாமிரத்னம் முணுமுணுத்தார்.

கதிர் :—எல்லாம் சேருகிற இடத்தில்தானே பணம் சேரும்? உங்களுடைய பணத்தை அவர் எப்படி வைத்

துக் கொண்டிருக்க முடியும்? அதுதான் கொண்டுவந்து தள்ளிவிட்டுப் போகிருர். மற்றப்படி அவர் கேட்டபடி செய்வதற்கு வழி இல்லாமல் என்ன ?

சுவாமி :—நம்ம மாப்பிள்ளை சம்மதிக்கணுமே அப்பா. அவர் ஒழுங்கு கிழுங்கு எல்லாம் பேசுகிறவராச்சே?

கதிர் :—ஹும். இதுக்கா இப்படிப் பயப்படறீங்க. எனக்கு உத்தரவு கொடுங்க. நான் முடித்து விடுகிறேன் காரியத்தை.

பின்னுல் எந்த விதமாகச் சரக்கை உற்பத்தி செய்வது என்பதைப் பற்றி இருவரும் பேசிக் கொண்டிருக்கும் போதே பெண்கள் சங்கக் காரியதரிசி அங்கே வந்தாள். தங்கள் சங்கத்தின் நிதிக்காக டிக்கட் வாங்கிக் கொள்ளவேண்டும் என்று அவள் கேட்டாள்.

சுவாமி :—அதற்கென்ன வாங்கினுல் போச்சு. இந்தாப்பா கதிர்வேலு, ஒரு நாலணு டிக்கட் ஒன்று வாங்கிக்கோ.

காரியதரிசி :-என்ன நாலணுவா?

சுவா :-சும்மா தரை டிக்கட் போதும்.

காரிய :-தரை டிக்கட்டே கிடையாதே! குறைந்த டிக்கட்டே பத்து ரூபாய்தான்.

சுவாமி :-அடேயப்பா! பத்து ரூபாயா?

காரிய :-அதென்ன அப்படி ஏங்குகிறீர்கள்?

சுவாமி :-கஷ்டப்பட்டுச் சம்பாத்தியம் பண்ணினுல் தானே தெரியுமம்மா! பத்து ரூபாய் என்ருல் என்ன, கிள்ளுக்கீரையா?

காரி :-ஜவுளிக்கடை ம. சு. கூட நூறு ரூபாய் டிக்கட் வாங்கி இருக்கிருர்கள். நீங்களும் நூறு ரூபாய்க்காவது டிக்கட் வாங்க வேண்டும்.

சுவாமி :-நாங்க என்ன கறுப்பு மார்க்கெட்டிலே கஷ்டப்படாமே சம்பாதிக்கிருேம் என்று நினைக்கிறீர்களா, நூறு இருநூறு கொடுக்கிறதற்கு?

காரி:-உஹூம்! நாங்க அப்படி நினைப்போமா? ஊரிலே சொல்லிக் கொண்டாலும் நாங்கள் அதை நம்பு வது இல்லை.

சுவாமி:-ஊரிலே சொல்லுவாங்க சோம்பேறிகள். சம்பாதிக்கத் திறமையில்லாதவங்களுக் கெல்லாம் சம்பா திக்கிறவங்களைக் கண்டால் பொருமை. முட்டாள்கள்! தள்ளுங்க அவங்க பேச்சை.

கடைசியில் நாலணுவிலிருந்து பத்து ரூபாய் வரை யில் உயர்ந்தது. அதற்குமேல் ஏற மறுத்து விட்டது. இந்த விவாதம் நடந்து கொண்டிருக்கும்போது அந்த ஊர் போலீஸ் இன்ஸ்பெக்டர் அங்கே வந்தார். காரிய தரிசியைப் பார்த்ததும், "என்னம்மா விமலா, இங்கே எங்கே வந்தாய்?" என்று கேட்டார். இன்ஸ்பெக்டர் என்றுலே சுவாமிரத்தினத்திற்கு உள்ளூற நடுக்கம். காரியதரிசியோடு இன்ஸ்பெக்டர் பேசிய உடனேயே விமலாவைப் பற்றிய மதிப்பு சுவாமிரத்தினத்திடம் கப் பென்று மேலே ஏறியது. "விமலா யார் தெரியுமா ஸார்? என் மனைவியினுடைய பெரிய தாயாரின் மருமானின் மைத்துனனின் ஒன்றுவிட்ட சகோதரி" என்ருர் இன்ஸ் பெக்டர்.

சுவாமி:-அப்படிங்களா? ரொம்ப சந்தோஷம். இவ் வளவு நெருங்கிய உறவு என்பது இதுவரை எனக்குத் தெரியாமல் போயிற்றே! அவங்க சங்கத்து நாடகத் திற்கு டிக்கட் வாங்கணும் என்று சொல்கிருர்கள். அதற்கென்ன வாங்கினுல் போச்சு. இந்தப்பா கதிர் வேலு ஒரு இருநூறு கொடுத்து அவங்க கொடுக்கற டிக்கட்டுகளை வாங்கி வையப்பா. இன்ஸ்பெக்டர்வாள் இவ்வளவு சொன்னதற்கப்புறம் டிராமாவைப் பார்க்கா மல் இருக்கலாமா?

## 4

**நா**டகம் அற்புதமாய் இருந்தது. கூட்டம் ஏராளம். சுவாமிரத்னமும் வந்திருந்தார். கோவலன் நாடகம். உஷா, மாதவியாய் நடித்தாள். கண்ணகியாய் நடிக்காமல்

நாட்டியக்காரியாக நடித்தாளே என்று சுவாமிரத்தினம் நினைத்தார். நாடகம் முடிந்ததும் மனோகரன் மேடைக்குப் போய் உஷாவைச் சந்தித்து, "நடிப்பு ரொம்பப் பிரமாதம்" என்றான். மனோகரன் புகழ்ச்சியைக் கேட்டு மகிழ்ந்த உஷா, "நீங்கள் அப்படிச் சொல்லாமல் வேறு என்னதான் சொல்லுவீர்கள்?" என்றாள். இதற்குள் சந்திரனும் அங்கே வந்தான்.

"இவ்வளவு நன்றாய் நடிப்பாய் என்று எனக்கு இதுவரை தெரியாதே" என்றான் சந்திரன்.

உஷா சந்திரனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, "இருவரும் ஒன்று பேசிக்கொண்டு வந்தீர்களா?" என்று கேட்டாள். மனோகரன் தனது ஜேபியிலிருந்து ஒரு சிறு பெட்டியை எடுத்து உஷாவிடம் நீட்டினான். உஷா ஆச்சர்யத்தோடு அதைத் திறந்து பார்த்தாள். பார்த்த போது அதில் ஒரு வைர மோதிரம் இருக்கக் கண்டாள். "உங்களது சிறந்த நடிப்பிற்குப் பரிசு" என்றான் மனோகரன். சந்திரனும் ஆனந்தம் அடைந்தான்.

அவன் மனோகரனைப் பார்த்து, "பரிசு கொடுத்தவர்களே விரலில் போடவேண்டும்" என்றான். மனோகரனின் நிலைமை தர்ம சங்கடமாய் இருந்தது. அன்று கொடுத்த திராக்ஷைப் பழத்தையே வாங்க மறுத்தவள் இன்று மோதிரத்தை விரலில் போடச் சம்மதிப்பாளா என்று நினைத்தான். அவனுடைய சந்தேகத்தைப் போக்குகிற மாதிரி உஷாவே மோதிரப் பெட்டியை மனோகரனிடம் நீட்டினாள்.

பெட்டியிலிருந்து மோதிரத்தை எடுத்து உஷாவின் விரலில் போட்டான். அப்படிப் போடும்போது ஏதோ தேவலோகத்தில் இருப்பதுபோல பெருமிதமடைந்தான். பின்னால் மூவரும் சந்திரன் வீட்டுக்குப்போய்ச் சாப்பிட்டார்கள். சாப்பிடும்போது நாடகங்கள், நடிப்புகள், அன்றைய நாடகத்திலுள்ள குணதோஷங்கள் ஆகியவைகளைப் பற்றிப் பேசினார்கள். திடீரென்று உஷா மனோகரனைப் பார்த்து, "நான் இன்று நன்றாய் நடிப்பேனென்று

முன்னாடியே எப்படி உங்களுக்குத் தெரிந்துவிட்டது?'' என்று கேட்டாள்.

மனோ :-எனக்குத் தெரியாதா? முன்னால் பள்ளிக் கூட நாடகங்களில் நீ நடித்ததை நான் பார்த்த தில்லையா?

சந் :-அப்போ ரொம்ப அநுபவமுள்ள நடிகை என்று சொல்லுங்கள்.

மனோ :-சந்தேகமில்லாமல்.

உஷா :-நான் கேட்டதற்குப் பதில் சொல்லவில்லை. இந்த நாடகத்தில் நன்றாய் நடிப்பேனென்று முன்னா லேயே எப்படி உங்களுக்குத் தெரியும் என்று கேட்டேன். அதற்குப் பதில் சொல்லாமல் இருவரும் சேர்ந்து கேலி செய்து மழுப்புகிறீர்கள்.

மனோ :-உஷா தேவியாரே, கோபம் வேண்டாம். நன்றாய் நடிப்பதைத் தவிர வேறு ஒன்றும் உங்களுக்குத் தெரியாதென்பதை நான் அறிவேன்.

உஷா :-மறுபடியும் மழுப்பல். காரணத்தை நான் சொல்லட்டுமா ?

சந்திரன் :—என்ன ரொம்பப் பயமுறுத்துகிற மாதிரி இருக்கிறதே ?

உஷா :—பயமுறுத்தல் மாதிரி என்ன ? அசல் பய முறுத்தல்தான். அவர் உண்மைக் காரணத்தைச் சொல்லாவிட்டால் நான் சொல்லி விடுகிறேன்.

மனோ :—நேசத் துருப்புக்கள் முன்னேற்பாட்டின் படி ரொம்ப ஒழுங்காய் வெற்றிகரமாய்ப் பின் வாங்கின.

உஷா :—அப்படி ஒப்புக்கொள்ளுங்கள்.

சந் :—உன்னுடைய வெற்றி புரிகிறது. ஆனால், காரணம் புரியவில்லையே.

உஷா :—அப்படி வாருங்கள் வழிக்கு. நீங்களும் உங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டீர்களா ?

சந் :—அதுதான் ஒப்புக்கொண்டாய் விட்டதே. காரணத்தைச் சொல்லம்மா.

உஷா :—என்ன அவசரம்? மழையா பெய்கிறது? காரணம் என்ன என்பதைத்தான் யோசனை செய்து கொண்டிருக்கிறேன்.

மனோகரனும் சந்திரனும் சிரித்துக்கொண்டு, "ரொம்பச் சுலபமாக எங்களை ஏமாற்றிவிட்டாயே அம்மா" என்று ஏக காலத்தில் பேசினார்கள். இச்சமயத்தில் கதிர்வேலு அங்கே வந்தான். அவனைப் பார்த்ததுமே உஷா முகத்தில் இருந்த சந்தோஷம் மறைந்தது. சந்திரனைத் தனியாகக் கூட்டிக்கொண்டு போய்க் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தான்.

மறுநாள் உஷாவின் தாயார் உஷா வீட்டிற்கு வந்தாள். முதல் நாள் நாடகத்தைப் பற்றிப் பேச்சு வந்த போது நாடகம் முடிந்தபின் சந்திரன் அங்கு வந்திருந்ததையும் கேட்டாள். "ராத்திரியே கதிர்வேலு உன் அப்பாவிடம் சொல்லிவிட்டான். அவர் ரொம்பக் கோபித்துக் கொண்டார்" என்றாள்.

உஷா :—இதில் என்னம்மா தவறு இருக்கிறது?

தாயார் :—உன்னைப் பற்றி எனக்கு நல்லாத் தெரியும் உஷா. உன் அப்பாவின் குணம் உனக்குத் தெரியாதா?

உஷா :—அவருக்கு ஒருவரைப் பிடிக்கவில்லையென்றால் அதற்காக நானும் அவருக்குப் பிடிக்காத ஆளோடு பேசக்கூடாதா? இது நல்ல நியாயம்.

தாயார் :—அவரை எதிர்த்துக்கொள்வது நல்லதல்ல. அவர் சொல்லுவது தப்பாய் இருந்தாலும் நாம் பணிந்துதானே போகவேண்டும்?

உஷா :—உங்களுக்கு அது கடமை. எனக்கு ஒன்றும் அப்படிச் செய்ய வேண்டியதில்லை.

தாயார் :—இந்தா உஷா, எனக்கு ஒரு காரியம் கடமையாய் இருந்தால் உனக்கும் அது கடமையல்லவா?

உஷா :—உங்கள் கணவர் சொல்லுவதைக் கேட்பது உங்களுக்குக் கடமை. என் கணவர் சொல்லுவதைக் கேட்பதுதானே எனக்குக் கடமை?

தாயார் :—அப்படிச் சொல்லுகிருயா? நீ நல்ல புத்திசாலி. உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஏதோ உன் அப்பா சொல்லுவதை அனுசரித்துப் போவது தான் நல்லதென்று எனக்குத் தோன்றுகிறது.

உஷா :—என் இஷ்டம் இதில் என்னம்மா இருக்கிறது? அத்தான் வரட்டும். அவரிடம் சொல்லுகிறேன். அவர் எப்படிச் சொல்லுகிருரோ அப்படிச் செய்கிறேன்.

தாயார் :—நல்ல பெண்ணம்மா நீ. அவர் வரைக்கும் இந்த விஷயம் எதற்காகப் போகவேண்டும்?

உஷா :—எங்களுக்குள் ஒளி மறைவு எதுவும் கிடையாதம்மா. அவரிடம் நான் எதையும் ஒளிப்பதில்லை. மனேகரனை நான் கல்யாணம் செய்யவேண்டுமென்று நினைத்திருந்தது நீங்களெல்லோரும் அறிந்த விஷயம். ஆனால் என்று இவரைக் கலியாணம் செய்தேனே அன்றே அந்த நினைப்பை மறந்துவிட்டேன். கலியாணமான விநாடியிலிருந்து இவர்தான் எனக்குத் தெய்வம்.

தாயார் :—உன் போக்கு எனக்குத் தெரியாதா அம்மா? ஏதோ அந்த மீனும்பிகை கிருபையாலே க்ஷேமமாயிருக்கவேண்டுமம்மா. நான் போய்வருகிறேன்.

இந்த விஷயத்தைத் தன் கணவனிடம் சொல்ல வேண்டுமா, வேண்டாமா என்பதைப் பற்றி உஷா வெகு நேரம் யோசித்துக் கொண்டிருந்தாள். தன்னைப் பற்றிக் கணவன் சந்தேகமாய் நினைத்தால் என்னசெய்வது என்ற யோசனை ஒரு பக்கம் தோன்றியது. இருந்தாலும் தன் மனத்தில் துரோக சிந்தனை இல்லாதபடியால் எதற்கும் பயப்பட வேண்டியதில்லை என முடிவு செய்தாள். சந்திரன் வந்து இருவரும் சாப்பிட்டு முடிந்தபின்பு மெதுவாக இந்தப் பேச்சை ஆரம்பித்தாள்.

உஷா :—உங்களிடம் ஒன்று சொல்லப்போகிறேன். கவனமாய்க் கேட்டு அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்.

சந் :—காத்திருக்கிறேன்.

உஷா :—உண்மையிலேயே சொல்லுகிறேன் கொஞ்சம் கவனமாய்க் கேளுங்கள். எனக்கு நீங்கள் தான் தெய்வம். என் தந்தை எவ்வளவு பெரிய பணக்காரராய் இருந்தாலும் சரி, அந்தப் பணமெல்லாம் எனக்கே வருவதாய் இருந்தாலும் சரி, எந்த விநாடி உங்களைக் கல்யாணம் செய்தேனே அதிலிருந்து நீங்கள் தான் எனக்குத் தெய்வம், சொத்து எல்லாம்.

சந் :—ஏதேது பூர்வ பீடிகை பலமாய் இருக்கிறதே, விஷயத்திற்கு வா.

உஷா :—வருகிறேன். இன்று காலை தாயார் வந்திருந்தார்கள். அவர்கள் ஒரு விஷயம் சொன்னார்கள். உங்களைக் கேட்டு, உங்கள் இஷ்டப்படி நடப்பதாகச் சொல்லி அனுப்பினேன்.

சந் :—இவ்வளவுதானா, விஷயம் ? நானும் அதைப் பற்றி உன்னிடம் பேச வேண்டுமென்றுதான் இருந்தேன்.

உஷா :—எதைப்பற்றி ?

சந் :—சிமெண்ட் விஷயந்தானே ?

உஷா :—அல்ல. மனோகரன் விஷயம்.

சந் :—மனோகரன் விஷயமா ? அதற்கும் சிமெண்டுக்கும் என்ன சம்பந்தம் ?

உஷா:- சம்பந்தமே இல்லை.

சந்:- அடிபடியானால் சொல்லு.

உஷா:- மனோகரன் இங்கே வரக்கூடாதாம். அப்பா சொன்னாராம்.

சந் :- என்ன? மனோகரன் வரக்கூடாதா ? ஏனாம் ?

உஷா:- அப்பா அபிப்பிராயம் அது என்று அம்மா சொன்னார்கள். நான் உங்களிடம் சொல்லுவதாகப் பதில் சொன்னேன்.

சந்:- அடேடேடே, ரொம்ப நன்றாயிருக்கிறதே விஷயம். ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து, மனிதனைக் கடித்தது என்பார்களே, அந்த மாதிரி யல்லவா இருக்கிறது காரியம். அதிருக்கட்டும், உன் அபிப்பிராயம் என்ன சொல்லு.

உஷா:- எனக்கு இதில் அபிப்பிராயம் கிடையாது. வீட்டு விஷயமாய் அபிப்பிராயம் கேளுங்கள். சொல்லு கிறேன். வெளி விஷயங்களில் அபிப்பிராயம் சொல்ல வேண்டியவர்கள் நீங்கள் தான்.

சந்:- ஓஹோ, உள்நாட்டு நிர்வாகம் உன்னைச் சேர்ந்தது; வெளிநாட்டு விவகாரங்கள் என்னைச் சேர்ந்தவை ; அப்படித்தானே ? மோட்டார் கார் வாங்கு வதிலும் பொறுக்குவதிலும் நீயும் சேர்ந்துகொண்டாயே, அது என்ன உள்நாடா வெளிநாடா ?

உஷா:- அது இரண்டிலும் சம்பந்தப்படாத பொது விஷயம்.

சந்:- பலே, பலே ! இப்படித்தான் உஷாவின் புத்தி பூர்ண பொலிவுடன் பிரகாசிக்கிறது. அது கிடக் கட்டும். உன் அபிப்பிராயத்தைச் சொல்லம்மா...

உஷா:- நான் ஒன்றும் சொல்ல முடியாது. நீங்கள் தான் சொல்லவேண்டும்.

இச்சமயம் அங்கே கதிர்வேலு வந்தான். அவனைக் கண்டதும் இருவரும் பேச்சை நிறுத்திக்கொண்டார்கள். " அய்யா உங்களைப் பார்த்து வரச்சொன்னார்கள் " என் றான். " காலையில் வாருங்களேன், பேசிக்கொள்ளலாம் " என்று சந்திரன் சொல்லி அவனை அனுப்பினான்.

சுவாமிரத்தினம் சொல்லியபடி சிமென்டை உற்பத்தி செய்ய சந்திரன் மறுத்துவிட்டான். சுவாமிரத்தினத்தின் சிமெண்ட் உற்பத்திக்குத் தொழிற்சாலையோ யந்திரங் களோ தேவை இல்லை. ரொம்பச் சுலபமான வேலை. வேண்டிய மூலப் பொருள் எல்லாம் சாம்பல் ஒன்றுதான்!

ராத்தலுக்கு ராத்தல் இந்த மூலப்பொருளைக் கலந்து விட்டால் போதும். ஆயிரம் மூட்டைகள் இரண்டாயிரம்

மூட்டைகளாகிவிடும். ரூபாயோ பத்தாயிரம் இருபதாயிரம் எனக் கிடைக்கும். வெறும் சாம்பலைக் கொண்டு ஆயிரக்கணக்காகச் சம்பாதிக்கக் கூடிய தந்திரத்தை விஞ்ஞானிகள் யாரும் கண்டுபிடித்துச் சொல்லிவிடவில்லை. சுவாமிரத்தினத்தைப் போன்ற வர்த்தக நிபுணர்களுக்குத்தான் இந்த வழிகள் எல்லாம் தாமாகவே தோன்றுவதுண்டு.

திடீரென்று மூளையில் தோன்றும் விஷயங்களை அருள் பிரசாதம் என்று சொல்லுவது வழக்கம். காடுகளில் கந்த மூலாதிகளைப் புசித்து வருஷக்கணக்காக நிஷ்டையில் அமர்ந்து பல உண்மைகளை ரிஷிகள் அறிந்தார்கள் என்று கூறுவதுண்டு.

சுவாமிரத்தினம் கோஷ்டியார் அம்மாதிரி நிஷ்டையிலோ நித்திரையிலோ உபாயங்களைக் கண்டு பிடிப்பதில்லை. ரிஷிகளை விட இவர்கள் ஒரு படி உயர்ந்தவர்கள். கண்மூடி மௌனியாக வேண்டிய அவசியமில்லாமல் கண் திறந்து வாய் ஓயாமல் பேசி, சம்பந்தப்பட்டவர்களுக்குப் பண பூஜை செய்வதன் மூலமாக வேண்டிய உபாயங்களைச் சுலபமாகப் புரிந்து கொள்கிறார்கள்.

ஒரே ஒரு வித்தியாசம்தான் உண்டு. ரிஷிகள் ஆத்ம உண்மைகளைக் கண்டு பிடித்தால் அவர்களை மகாத்மாக்கள் என்று மக்கள் போற்றுகிறார்கள். சுவாமிரத்தினம் கோஷ்டியார் கண்டுபிடிக்கும் உண்மைகளை மட்டும், இந்த முட்டாள் ஜனங்கள் போற்றுவதில்லை. அதற்குப் பதிலாகக் கள்ளமார்க்கெட்காரர்கள் என்றும், பெருச்சாளிகள் என்றும் திட்டுகிறார்கள்.

ஆனால், அந்தப் பாரபட்சத்தைக் கண்டு சுவாமிரத்தினம் கோஷ்டியார் கொஞ்சமும் மனவருத்தம் கொள்வதில்லை. ஐந்து வருஷத் திட்டம், பத்து வருஷத் திட்டமென்று போட்டு எப்படி சர்க்கார் உற்பத்தியைப் பெருக்க முயற்சிக்கிறார்களோ, அதேமாதிரி இவர்களும் ஐந்துவாரத் திட்டம், பத்து வாரத் திட்டம் என்று போட்டுப் பணத்தை பெருக்குவார்கள். அதில் தோல்வி என்பது மட்டும் கிடையாது. வெற்றி மேல் வெற்றி

தான். சுவாமிரத்தினம் தம் யோசனையைச் சந்திரன் கேட்க மறுத்து விட்டான் என்பதைக் கேட்டதும் ரொம்பக் கோபமடைந்தார். “நாம் வைத்த வாழ்வு தானே இவனுக்கு? இவ்வளவு அகம்பாவமா?” என்று எரிந்து விழுந்தார்.

பத்தாயிரம் ரூபாயை அம்பலவாணனிடம் வாங்காமல் இருந்திருந்தாலும் அவ்வளவு கோபம் வந்திருக்காது. சிமெண்ட் கொடுக்காவிட்டால் ரூபாயைத் திரும்பக் கொடுக்க வேண்டும். திரும்ப கொடுப்பதென்றால் தமது பணம் பத்தாயிரம் போகிற மாதிரி நினைப்பு. வரவு கணக்கு முன்பே ஏற்பட்டுவிட்டபடியால் செலவு கணக்கு வரும்போது நஷ்டம் மாதிரி அவருக்குத் தோன்றியது. “பத்தாயிரம் ரூபாய் நஷ்டப்படுவதா?” என்று உறுமிக் கொண்டே குறுக்கும் நெடுக்குமாக நடந்தார்.

கடைசியாக மனைவியைக் கூப்பிட்டு, “நாளை ஒரு நாள் வாய்தா கொடுக்கிறேன். அதற்குள் நம்ப மாப்பிள்ளை சம்மதிக்காவிட்டால் நாளை மறுநாள் முதல் அந்தத் தொழிலை விட்டு அவர் விலகிவிட வேண்டும். ஆமாம்; சொல்லிவிட்டேன்” என்று கத்தினார். சிமெண்ட் ஏஜென்ஸி எடுக்கும்போதே கதிர்வேலு பெயருக்குத் தான் எடுத்திருந்தார். ஏதாவது கன்ட்ரோல் தகராறுகள் வந்தாலும் கதிர்வேலுவோடு தொலையட்டும் என்பது அவர் எண்ணம். எனவே, சந்திரனை விட்டு, நிர்வாகத்தை மாற்றுவதற்கு இடையூறு எதுவும் இல்லை.

மாமாவின் யோசனைக்குச் சந்திரன் சம்மதிக்கவில்லை. ஆகவே, தொழிலிலிருந்து விலகிக் கொண்டான். இதில் சந்திரனுக்கு வந்த கோபத்தைவிட உஷாவுக்குத்தான் அதிகமாய்க் கோபம் வந்தது. வேறு என்ன வர்த்தகம் செய்வது என்பதைப் பற்றி இருவரும் யோசித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் சந்திரன் வெளியே போயிருக்கும்போது கதிர்வேலு அங்கே வந்தான். சந்திரனுக்கு அவமானம் ஏற்பட்டதைக் கண்டு அவனுக்கு ரொம்பச் சந்தோஷம். அந்தச் சந்தோஷத்தைப் பூரணமாக்குவதற்காக உஷாவிடம் பேச விரும்பினான். அவனி

டம் பேசுவதற்கு உஷாவுக்குப் பிரியமே இல்லே. இருந்தாலும் வீட்டுக்கு வந்தவனே எப்படி வெளியேபோகச் சொல்வது என்ற நினைப்பில் சும்மா இருந்தாள். உபயோகமில்லாத பேச்சுகளை எல்லாம் கதிர்வேலு பேசிவிட்டுக்கடைசியாகச் சிமெண்ட்வியாபாரத்திற்கு வந்தான்.

உஷா:- உன் பாடு யோகம்தான். பெரிய சிமெண்ட் வியாபாரியாய் விட்டாய். இனி என்ன குறை ?

கதிர்:- எனக்கென்ன யோகம் ? கிடைக்கிற லாபமெல்லாம் உன் அப்பாவிற்குத்தானே ?

உஷா:- நடத்துங்கள், நடத்துங்கள்.

கதிர்:- ஐயா இப்போ என்ன தொழில் செய்யப் போகிருர் ?

உஷா:- இன்னம் நிச்சயமாக வில்லே. மோட்டார் தொழில் செய்யலாமா என்று ஒரு யோசனே. அதற்கு இருபத்து ஐந்தாயிரம் ரூபாய் வேண்டும். அதற்கு என்ன செய்வது என்பதுதான் கவலே.

கதிர்:- ' கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுகிற மாதிரி இருக்கிறது. உன் அப்பா சொல்வதைக் கேட்டிருந்தால் இந்தக் கவலே யெல்லாம் வேண்டாமே ? இந்தக் காலத்தில் இருபத்தைந்தாயிரம் ரூபாய் என்ருல் சுலபமானதா ? மனேகரன் தயவில் மோட்டார் தொழில் கிடைத்தாலும் பணத்திற்கு அவனுல் என்ன செய்து விட முடியும் ?

உஷா :—(கோபமாய்) அதை யெல்லாம் உன்னிடம் யார் கேட்டது ?

கதிர் :—இருபத்தி ஐயாயிரம் ரூபாய் வேண்டுமென்று நீ சொன்னதால் நான் சொல்ல வந்தேன். இல்லேயாளுல் எனக்கென்ன இதைப் பற்றிக் கவலே ?

உஷா :—சரி, சரி.

கதிர் :—இம்மாதிரிக் கோபப் படுவதால் காரியம் நடந்துவிடாது. நான் சொல்வதைக் கேள். தனிக்-

குடித்தனம் நீங்கள் நடத்துவதற்குப் பணம் எங்கிருந்து வரப்போகிறது? உன் கணவரை அவர் ஊருக்கு அனுப்பி விட்டு நீ உன் அப்பா வீட்டிற்கு வந்துவிடு. அவருக்கு ஏதாவது தொழில் கிடைத்த பின்னுல் தனிக் குடித்தனம் போட்டுக் கொள்ளலாம்.

உஷா :—அவர் எங்கிருப்பாரோ அங்குதான் நானும் இருப்பேன். நாங்கள் செலவுக்கு என்ன செய்வோம் என்பதை பற்றி நீ கவலைப்பட வேண்டிய தில்லை.

கதிர் :—நான் கவலைப்பட வேண்டாம் என்று சுலப மாய்ச் சொல்லி விடலாம். என் மனம் கேட்குமா? நீதான் அலட்சியப் படுத்தினுலும் நான் செய்யமுடியுமா ?

உஷா :—ஏது பேச்செல்லாம் ஒரு மாதிரியாய்ப் போகிறது ?

கதிர் :—என்ன மாதிரி? ஒரு மாதிரியும் இல்லை. உனக்குத் தெரியாதது என்ன இருக்கிறது ?

உஷா :—ஓஹோ, சரி பேச்சை அதோடு விடு.

கதிர் :—எப்படி விடுவேன் ? எனக்கு நீ செய்த துரோகத்தை நான் சாகிற வரை மறக்க முடியுமா ? ஒரு வார்த்தை நீ சொல்லி இருந்தால் உன்னை எனக்கு உன் அப்பா கலியாணம் செய்திருக்க மாட்டாரா ?

உஷா :—துரோகம் ! கலியாணம் ! உன்னை நான் கலியாணம் செய்வதா ?

கதிர் :—எனக்கு என்ன குறை ? உன் புருஷனைப் போல வேலையில்லாமல் திண்டாடுகிறவனு ?

உஷா :—(இதற்கு மேல் உஷாவால் சகிக்க முடிய வில்லை.) இந்த ஆபாசங்களை எல்லாம் என்னுல் கேட்க முடியாது. நீ வெளியே போ.

கதிர் :—அடேயப்பா, கோபம் ரொம்ப வருகிறதே. இதோ போகிறேன். ஆனுல், நீ என்னதான் முயற்சி செய்தாலும் சரி, உன் புருஷனுக்கு வேலை கிடைக்காமல் செய்ய இந்தக் கதிர்வேலுவால் முடியும். அப்புறம் நீயே என்னை வலியக் கூப்பிடுவாய்.

உஷா :—என்னதான் வந்தாலும் சரி. உன் முகத்திலேயே நான் இனி விழிக்கமாட்டேன். அதை மட்டும் நிச்சயமாய் நினைத்துக்கொள். பேச்சைப் பாரு பேச்சை. போ, போ.

இதைக் கேட்டுக் கொண்டே வந்த சந்திரனுக்குக் கோபம் பொங்கியது. “ என்ன மிஸ்டர் கதிர்வேலு, நீர் மனிதராஞல் இனி இந்த வீட்டிற்குள் காலடி எடுத்து வைக்கக் கூடாது ” என்று கடுமையாகச் சொன்ஞன்.

கதிர்வேலுவின் வைராக்கியம் பலமாயிற்று. சுவாமிரத்தினத்தின் மனப் போக்கை அவன் அறிவான். அவரை மீறி நடப்பவர்கள் தெருவில் நின்று திண்டாட வேண்டும் என்பதுதான் அவருடைய வாழ்க்கையின் ஒரே லட்சியம். எதிர்த்தவர் பெற்ற பிள்ளையாய் இருந்தாலும் அவருக்குக் கவலை யில்லை. இந்த மனப் போக்கை உபயோகித்துக் கொண்டு சந்திரனுக்கு எந்தப் பாங்கியிலும் பண வசதி கிடைக்க முடியாதபடி கதிர்வேலு தடுத்து வந்தான்.

சந்திரன், உஷா, மஞேகரன் மூவரும் இந்தக் கதிர் வேலின் அக்கிரமங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். சுவாமிரத்தினத்தின் பேச்சை எடுத்தால் உஷாவுக்குத் தர்ம சங்கடமாய் இருக்கும் என்று நினைத்துச் சந்திரனும் மஞேகரனும் அவர் பேச்சை எடுக்கவே இல்லை. உஷாவுக்கும் இது புரியாமல் இல்லை. பண வசதி கிடைக்க வில்லை யென்ருல் தொழில் செய்யாமல் சும்மா இருப்பதா என்பதைப் பற்றிப் பேசிஞர்கள்.

உஷா :—சும்மா எப்படி இருக்கமுடியும் ? முதலில் செலவுக்குப் பணம் வேண்டும். இரண்டாவதாகச் செலவுக்குப் பணமே இருந்த போதிலும், வேலை ஒன்றும் செய்யாமல் சும்மா எப்படி இருக்க முடியும் ? ஏதாவது செய்துதான் ஆக வேண்டும்.

சந்திரன் :—பூரண உடன்பாடு.

மஞேகரன் :—அப்படியாஞல் இப்பொழுது சபை முன்புள்ள பிரேரணை என்ன வென்ருல், மூலதனத்தைக்

கண்டு பிடிக்க ஒரு கமிட்டியை அமைப்போமா, வேண்டாமா என்பதுதான்.

உஷா :—என்ன சட்ட சபைப் பாணியில் திரும்பி விட்டார் போலிருக்கிறதே!

மனோ :—பிரேரணையை வோட்டுக்கு விடட்டுமா?

உஷா :—ஒற்றை ஆள் கமிட்டியை நியமிப்பதாயிருந்தால் நான் பிரேரணையை ஆதரிக்கறேன். அந்த ஒரு ஆளும் நானேதான்.

சந் :—ஏதேது, அலாவுதீன் விளக்குக் கிடைத்திருக்கிறது போலிருக்கிறதே?

உஷா :—உங்கள் தயவும் அவர் ஆதரவும் இருக்கிற வரையில் ஆயிரம் அலாவுதீன் விளக்குகள் கையிலே இருக்கின்றன.

மனோ :—எனக்குப் புரியவில்லையே உஷா. ஏதோ வழி கண்டு பிடித்திருக்கிற மாதிரி யல்லவா இருக்கிறது? எனக்குத் தெரியவில்லையே.

சந் :—எனக்கும்தான் தெரிய வில்லை.

உஷா :—உங்களுக்கு வேண்டியது பணம்தானே? அதற்கு நான் பொறுப்பு. மற்ற வேலைகளை நீங்கள் நடத்துங்கள்.

சந் :—உன் அப்பா கொடுக்கிறதாக—

உஷா :—என்னைப் பற்றி இன்னும் அறியாமல் இருப்பதற்காக நான் வருத்தப்படுகிறேன்.

மனோ :—உஷா தேவியார் ஜான்ஸி ராணி பரம்பரையைச் சேர்ந்தவர்கள். முன் வைத்த காலைப் பின் வாங்கமாட்டார்கள். அப்படி யெல்லாம் பேசாதீர்கள்.

உஷா :—இப்படிக் கேலிசெய்வதை மட்டும் விட மாட்டீர்கள்.

மனோ :—நான் கேலி ஒன்றும் செய்ய வில்லை உஷா. பணத்தைப் பற்றிக் கவலை யில்லை என்று நீ சொல்லு

வதைக் கேட்டு அவரை விட எனக்குத்தான் சந்தோஷம் அதிகமாய் இருக்கிறது. சீக்கிரம் சொல்லம்மா. எப்படிப் பணத்திற்கு வழி இருக்கிறது ?

உஷா :—உங்கள் பிடிவாதத்தை விட மாட்டீர்கள். பணத்திற்கு நானுச்சு என்ருல் அப்புறம் உங்களுக்கு என்ன யோசனை ?

சந் :—சரி, அது கிடக்கட்டும். எத்தனை நாளில் கிடைக்கும் என்பதையாவது சொல்லு.

உஷா :—எத்தனை நாளா ? எத்தனை மணி என்று கேளுங்கள். நீங்கள் எப்பொழுது சொல்லுகிறீர்களோ அதிலிருந்து இரண்டு மணி நேரத்திற்குள் கிடைக்கும் !

சந் :—நம்ப முடியவில்லையே !

மனே :—நம்பித்தானே ஆக வேண்டி இருக்கிறது.

சந் :—எந்தப் பாங்கியில் போட்டு வைத்திருக்கிருய் சொல்லு.

உஷா :—பாங்கியாவது ஒன்ருவது. நானேதான் பாங்கி.

மனே :—(விஷயம் புரிந்துவிட்டது. ஆச்சரியத்தினுல்) உஷா !

உஷா :—இதில் என்ன தப்பு ? நான் உடம்பில் சுமந்து கொண்டோ, இரும்புப் பெட்டியில் காவல் காத்துக் கொண்டோ இருப்பதை விட இந்தக் காரியத்திற்கு உபயோகப்படுத்தினுல் நமது தொழிலாவது நடக்கு மல்லவா ?

இப்பொழுதுதான் சந்திரனுக்கு விஷயம் புரிந்தது.

மனே :—ஜான்ஸி ராணியின் பரம்பரை என்று நான் சொன்னதை நீ மெய்ப்பித்து விட்டாய் உஷா !

சந்திரனின் வர்த்தகத்திற்கான ஏற்பாடுகள் ஆரம்பம் ஆயின. சந்திரனுக்குப் பணம் கிடைத்த மர்மம் புரியாமல் கதிர்வேலுவும் சுவாமிரத்னமும் திகைத்தார்

கள். இருந்தாலும் தங்கள் ஏமாற்றத்தை ஒப்பக்கொள்ள விரும்பவில்லை. ஆகவே, "எத்தனை நாளைக்கு இந்த வியாபாரம் நடந்துவிடப் போகிறது?" என்று கேலி செய்து தங்கள் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண் டார்கள்.

வர்த்தக ஆரம்ப விழாவிற்கு உஷாவும் போயிருந் தாள். திரும்ப அவளை வீட்டில் கொண்டு விடுவதற்கு மனோகரன் தன் மோட்டாரில் அழைத்து வரும்போது வழியில் கதிர்வேலுவைத் தெருவில் பார்த்தார்கள். கோபத்தோடு இவர்களை அவன் விழித்துக் கொண்டிருந் ததை இருவரும் கவனித்தார்கள். "ஏன் உஷா, எதற் காக நம்மை இப்படிப் பார்க்கிறான் இவன்?" என்று கேட் டான் மனோகரன்.

உஷா :—உங்களுக்குத் தெரியாதோ? என்னிடம் கேட்கிறீர்கள்?

மனோகரன் உஷாவைத் திரும்பிப் பார்த்தான். இருவர் கண்களிலும் விஷமச் சிரிப்பு தாண்டவம் ஆடிற்று.

மனோ :—விஷயம் புரிந்தது. அவன் எண்ணிய படியே நமக்குள் கல்யாணம் நடக்காமல் போயிற்று. ஆனால், இப்பொழுதும் எதற்காகக் கோபம்?

உஷா :—(ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டு) அந்தப் பாவிக்கு அதோடு திருப்தி ஆகவில்லை. இப் பொழுது நாம் அடிக்கடி சந்திப்பது அவனுக்கு வயிற் றெரிச்சலாய் இருக்கிறது. அவனை நினைக்கும்போ தெல்லாம் இன்னம் என்னென்ன கெடுதல் செய்வானோ என்ற பயம் எனக்கு ஏற்படுகிறது.

இதற்குள் வீட்டிற்கு வந்துவிட்டார்கள். "குளிர்ந்த பானம் சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்று மனோகரனை உஷா வீட்டிற்குள் அழைத்தாள். பானம் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது மனோகரன் உஷாவைப் பார்த்து, "கதிர்வேலுவைக் கண்டு பயப்

படுவதாகச் சொன்னயே, அவனென்ன கெடுதல் செய்து விட முடியும்?'' என்று கேட்டான்.

உஷா :—ஏன் முடியாது ? அத்தான் தங்கமான குணமுள்ளவர். உங்களைப் பற்றி ஏதோ வந்து அவரிடம் விஷமம் செய்தால் என்ன செய்வது ?

குளிர்ந்த பானக் கோப்பையை மேஜை மீது மனோகரன் வைத்து விட்டு, "என் உயிர் போனலும் நீ கஷ்டப்படுவதை நான் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன்" என்று சொன்னன்.

உஷா :—அது எனக்குத் தெரியும் மனோகர். அவர் மனத்தில் சந்தேகம் ஏற்பட்டால் அப்புறம் எங்கள் குடும்ப வாழ்க்கை என்னவது ? அவர் மனம் நோக விடலாமா ? அது எனக்குத் தர்மமா ?

உடனே மனோகரன் உஷாவின் கையைப் பிடித்துக் கொண்டு, "என் மீது உனக்கு அன்பு இல்லையா உஷா ?'' என்று கேட்டான்.

உஷா :—என்ன இப்படிக் கேட்கிறீர்கள் ? என் இருதயத்தில் நீங்கள்தான் எழுந்தருளி யிருக்கிறீர்கள். இதில் என்ன சந்தேகம் ?

இதைக் கேட்டதும் மனோகரன் தைரியம் அடைந்து, "அப்படியானல் உனக்கு ஏன் கலக்கம் ?'' என்று சொல்லிக்கொண்டே அவளைத் தன் அருகில் இழுத்தான்.

உஷா :—வேண்டாம் மனோகர். உங்களைத் தெய்வமாய் என் நெஞ்சில் வைத்திருக்கிறேன். அதுதான் உங்கள் ஸ்தானம். அதைக் கெடுக்கிற மாதிரி எதுவும் செய்யாதீர்கள் மனோகர்.

உஷா முகத்தை மனோகரன் பார்த்தான். காதலைக் காணவில்லை. இரக்கமும் கண்ணீரும் இருந்தன. பதறிப் போனன். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. உடனே கையை விட்டுவிட்டான். மெதுவாய்த் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "நான் போய் வரட்டுமா உஷா ?'' என்று கேட்டான். உஷா பதில் சொல்லவில்லை. கண்ணீரைத்

துடைத்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரம் கழித்து, "நான் போய் வரட்டுமா?" என்று மறுபடியும் கேட்டான். உஷா தன் அகன்ற விழிகளால் அவனைப் பார்த்து, "என்மீது கோபமா?" என்றாள்.

மனோ:—உன் மீது நான் எப்படிக் கோபப்பட முடியும்? நான் விரும்பினாலும் என் மனம் கேட்காதே! உன் போக்குத்தான் எனக்குத் தெரியவில்லை. உன்னை நான் ஒருக்காலும் வருத்தப்படுத்த மாட்டேன். உன் முன்பு உட்கார்ந்து கொண்டு உன்னைத் தொடாமல் நான் எப்படி இருக்க முடியும்? அது முடியாத காரியம். ஆகவே, நான் இங்கு வருவதை நிறுத்துவது ஒன்றுதான் வழி.

உஷா:—அதை மட்டும் செய்யாதீர்கள்.

மனோகரனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. "ஏன்?" என்று கேட்டான்.

உஷா:—உங்களைப் பார்ப்பதால் என் மனத்திற்கு அளவிட முடியாத உற்சாகமும் சாந்தமும் ஏற்படுகின்றன. அவற்றைக்கூட நீங்கள் கொடுக்கக் கூடாதா?

மனோ:—நானா கொடுக்க மறுக்கிறேன்? என்னிடம் உள்ளவையெல்லாம் உனக்குத்தானே. நீதானே வாங்க மறுக்கிறாய்.

உஷா:—மானசீகமாய் உங்களிடமிருந்து எதைப் பெறமுடியுமோ அதைப் பெற்றுக்கொண்டுதானே இருக்கிறேன்.

மனோ:—மானசீகம், ஸ்தூலம்! எவ்வளவு பெரிய விஷயங்களைப் பேசுகிறாய் உஷா! உன் அறிவுக் கடலை இதுவரை நான் அறியவில்லையே. அப்படியானால் என்னை முத்தமிடுவதாக மானசீகமாய் நினைத்துக் கொள்ளுவாயா?

உஷா:—என்ன இப்படிப் பேசுகிறீர்கள். மனோகர்? உங்கள் மீது நான் வைத்திருக்கும் அன்பு அதற்கெல்லாம் அப்பாற்பட்டது.

மனோ :—உன் வயதிற்குத் தகுந்தபடி நீ பேசவில்லை. பெரிய ஞானி மாதிரி பேசுகிருய்.

உஷா :—எல்லாம் உங்களால் ஏற்பட்ட நன்மை தானே?

மனோ :—நான் எப்படி இதற்குக் காரணமாக இருக்க முடியும் உஷா?

உஷா :—நீங்கள் என்று என்னை மறந்து ஒரு வருஷமாகக் கண்ணில் படாமல் இருந்தீர்களோ அன்றிருந்துதான் இந்த வழியில் என் மனம் செல்ல ஆரம்பித்தது. மீண்டும் உங்களைச் சந்தித்த பின்புதான் என மனத்தில் பூரிப்பும் சாந்தியும் ஏற்பட்டது.

மனோ :—உஷா, அப்படியானுல் உனக்கு என்னைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று தோன்றுகிறது. ஆச்சரியமாய் இருக்கிறது உஷா. உன் தாயார் ஒன்றும் என்னைப் பற்றிச் சொல்லவில்லையா?

உஷாவுக்கு ஏதோ ஒரு புது விஷயத்தைக் கேட்கப் போவது போன்ற பரபரப்பு ஏற்பட்டது. "என்ன விஷயம் சொல்லுங்கள். எதைப் பற்றித் தாயார் சொன் ஞர்களா என்று கேட்கிறீர்கள்?" என்று ஆவலோடு கேட்டாள்.

மனோ :—நான் உன்னை மறந்துவிடவில்லை உஷா. எப்படி மறக்க முடியும்? நான் உன் கண்ணில் படாமல் திரிந்தேன் என்ருல் அது என் தவறல்ல உஷா. வேறு வழி எனக்கில்லை. நான் உன்னை விவாகம் செய்யாமல் கை விட்டேனென்று நீ சொல்லுவதும் சரியல்ல. உன்னை விவாகம் செய்துகொடுக்கும்படி நான் கேட் டேன். உஷா, உன் தந்தை மறுத்துவிட்டார். அதற் கப்புறம் உன் கண்ணில் படாமல் இருப்பதைத் தவிர வேறு நான் என்ன செய்ய முடியும் உஷா?

உஷா :—(ஆச்சரியத்தோடு திடீரென்று எழுந்து) நீங்கள் கேட்டீர்களா? மறுத்துவிட்டார்களா? என் னிடம் ஏன் சொல்லவில்லை?

மனோ :—உன்னிடம் சொல்லுவதை விட சொல்லாமல் இருப்பதே நல்லது என்று நினைத்தேன். உன் தந்தையின் பிடிவாதம் எனக்குத் தெரியாதா? உன் தந்தைக்கு நீ ஒரே பெண். உன்னிடம் விஷயத்தைச் சொல்லி உன் அமைதியான வாழ்க்கையைக் குலைப்பதை விட உனக்குக் கல்யாணம் ஆகிற வரையில் உன் கண்ணில் படாமல் மறைந்து விடுவதே நல்லது என்று நினைத்தேன். இதில் தவறிருக்கிறதா உஷா ?

"தவறு? நீங்களா? உங்களைப் போன்ற உத்தமர் கிடையாது என்று இதுவரை நான் நினைத்து வந்தது இன்று மீண்டும் பலமாயிற்று. எனக்காக உங்கள் இல்லற வாழ்க்கையையே தியாகம் செய்த உங்களை என்னென்று சொல்லிப் புகழுவேன்?" என்று கூறி அவன் பாதங்களைத் தொட்டுக் கண்ணில் வைத்துக் கொண்டாள்.

மனோ :—நீ என் காலைத் தொடுவது என்றால் நான் ஏன் உன் கையைத் தொடக்கூடாது? கையைக் கொடு.

உஷா தன் கையை நீட்டினாள். மனோஹரன் இரண்டு கைகளாலும் அதைப் பிடித்துக் கண்களில் ஒற்றிக்கொண்டான். "உன்னைப் போன்ற ஒரு உத்தமியின் அன்பை மானசீகமாய் நான் பெறுவது என்றால் நான் சிறந்த பாக்கியசாலி என்பதில் என்ன சந்தேகம்?" என்று கூறினான். உஷாவின் கண்களிலிருந்து நீர் வடிந்தது. திடீரென்று அவள் முகம் அடுத்த விநாடியே மலர்ந்தது. கடகடவென்று சிரித்தாள்.

மனோ :—(திகைப்படைந்து) ஏன் சிரிக்கிறாய் உஷா?

உஷா :—உங்களின் பூர்ண அன்பைப் பெற்ற நான் எவ்வளவு பெரிய பாக்கியசாலி என்பதை நினைத்ததும் எனக்கு ஆனந்தம் பொங்குகிறது.

மோட்டாரில் மனோகரனும் உஷாவும் சிரித்துப் பேசிக்கொண்டு போவதைப் பார்த்ததும் கதிர்வேலுவுக்குப் பொறாமைக்கோபம் மேலே கிளம்பியது. இந்த உஷா

வுக்கு இவ்வளவா? அவள் நினைத்தபடி மனோகரன் அவளோடு சேர்ந்துவிட்டான். அவள் ஆசை பூர்த்தி யாயிற்று. ஆனால் நான்? என் எண்ணத்தில் மண் விழுந்தது. என் பெயரால் சிமெண்ட் வியாபாரம்! அந்த லாபத்தில் ஒரு தம்படிகூட எனக்குக் கிடையாது. அந்த லாபத்தையெல்லாம் அனுபவிக்கப் போவது உஷாவும் சந்திரனும்! சே, சே, இது என்ன வாழ்க்கை!

"எனக்கு லாபம் கிடைக்காவிட்டாலும் எனக்குக் கிடைக்காத இந்த உஷா அவள் விருப்பப்படி சந்தோஷ மாய் இருப்பதா? இதைச் சகிக்க முடியாது. இந்த மனோகரனையும் அவளையும் இனிச் சந்திக்க முடியாதபடி செய்யாவிட்டால் நான் கதிர்வேலுவல்ல" என்று தனக் குள்ளேயே குமுறிக்கொண்டு சந்திரனின் புதிய கம்பெனி முன்பு நடந்தான்.

வருகிறவர்கள் போகிறவர்களை உபசாரம் செய்து கொண்டு சந்திரன் நின்றபடியால் கதிர்வேலுவின் வேலைக்கு அது சரியான நேரமாய்த் தோன்றவில்லை. கோபத்தை அடக்கிக்கொண்டு அப்புறம் போனான்.

போகும்போதும் கம்பெனியைப் பார்த்துக்கொண்டே போனதால் எதிரே வந்தவனைக் கவனியாமல் அவன் மீது இடித்தான். அவன் இவனுடைய தோளைப் பிடித்துக்கொண்டு, "என்ன மிஸ்டர் சிமெண்ட் வியா பாரம், தடபுடலாய் நடக்கிற மாதிரி இருக்கிறதே?" என்றான்.

சட்டென்று கதிர்வேலு திரும்பிப் பார்த்ததும் போலீஸ் முருகேசம் தன்னைப் பிடித்திருப்பதை உணர்ந் தான். உடனே அவன் உடல் நடுங்க ஆரம்பித்தது. தொண்டையை விட்டு வார்த்தை வெளியே வரவில்லை. "வாங்க வாங்க" என்று சிரமத்தோடு சொல்லிப் பல்லைக் காட்டினான்.

"நான் கேட்டதற்குப் பதில் சொல்லவில்லையே?" என்றான் முருகேசம். "என்னாங்க, உங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கு? பெயர்தான் என் பெயரே

தவிர எனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்?" என்ருன் கதிர்வேலு நடுங்கிக்கொண்டே.

முரு :—சரிதானப்பா. நீ முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைத்துவிடுவாயே! ஊரெல்லாம் சிமெண்டாய்க் கிடக்கு, உனக்கு ஒன்றும் தெரியாதுங்கறே.

கதிர் :—என்னுங்க, சத்தியமாச் சொல்றேன். ஒரு தம்பிடிகூட அந்த லாபத்தில் எனக்குக் கிடையாது.

முரு :—என்னவோ அப்பா. புகார் பெரிசா கிளம்புது. கொஞ்சம் பார்த்து நடந்துக்கோ.

கதிர் :—நல்லதுங்கோ, கொஞ்சம் காபி சாப்பிட்டு விட்டுப் போகலாமே!

முரு:—பின்னலே பாத்துக்கிடுவோம். ஆமா, இந்தச் சந்திரன் புதுக் கம்பெனி ஆரம்பிச்சிருக்காரே, பணமெல்லாம் மாமனர் பணம்தானே?

கதிர் :—என்னுங்க இப்படிச் சொல்றீங்க. மாமனர் தான் அவரிடம் பேசுவதே இல்லையே!

முரு :—சிமென்ட் வியாபாரத்தை விட்டு ஏன் விலகி விட்டார்?

இங்கேதான் கதிர்வேலு ஆந்தை மாதிரி விழித்தான். திடீரென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. "சொந்தமா காரு கீருனு வச்சுக்கொள்ள ஆரம்பிச்சாரு. அது மாமாவுக்குப் பிடிக்கவில்லை" என்ருன்.

"ஓஹோ, அதுதானு காரணம்?" என்று சொல்லிக்கொண்டே கதிர்வேலுவிடம் போய்வருகிறேன் என்றுகூடக் கூருமல் கம்பியை நீட்டினன் போலீஸ் முருகேசன். ஏதோ ஒரு பெரிய பூதத்தின் பிடியிலிருந்து தப்பியதுபோல, கதிர்வேலு பெருமூச்சு விட்டான். நேராக பக்கத்தில் உள்ள ஒரு காப்பி ஓட்டலுக்குள் நுழைந்து சூடாகக் கொஞ்சம் காப்பி சாப்பிட்ட பின்பு தான் அவனுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது.

ஒரு நாள் சந்திரன், உஷா, மனோகரன் மூவரும் சந்திரன் வீட்டில் பேசிக்கொண்டிருந்தார்கள்.

பல பேச்சுகளுக்கிடையில் திடீரென்று சந்திரன், "இன்று ஒரு அதிசயம் நடந்தது" என்றான். "என்ன அதிசயம்?" என்று ஏககாலத்தில் உஷாவும் மனோகரனும் கேட்டார்கள்.

சந் :—கதிர்வேலு இன்று கம்பெனிக்கு வந்திருந்தான்.

உஷாவுக்கு மனத்தில் "பக்" என்று ஒரு திகில் ஏற்பட்டது. அந்த பயத்தோடு "கதிர்வேலுவா? நம்ம கம்பெனிக்கா?" என்றாள்.

சந் :—கதிர்வேலுவேதான். நம்ம கம்பெனிக்குத்தான்.

மனோகரன் குனிந்துகொண்டே இருந்தான். ஒன்றும் பேசவில்லை. திறப்பு விழாவன்று கதிர்வேலுவை உஷா பார்த்ததும் சொன்ன விஷயங்கள் அவன் மனத்தில் ஓடிக்கொண்டிருந்தன.

உஷா :—எதற்காக வந்தான்?

சந் :—தெரியாதா, அவன் நாரதர்தானே! நல்ல எண்ணம் என்பது அவன் பிறந்த ஊரிலேயே இருக்காதே. நாம் மூவரும் ஒன்றாய் சந்தோஷமாய் இருப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை.

இச் சமயம் உஷாவும் மனோகரனும் ஒருவரையொருவர் பார்த்தார்கள். உஷாவின் கண்களில் பீதி நிறைந்திருந்தது. 'நான், அன்று சொல்லியது நிஜமாயிற்றல்லவா?' என்று கேட்டது போலிருந்தது. உஷா, மனோகரன் கண்கள் சந்திப்பதைச் சந்திரனும் கவனித்தான்.

உஷா :—விஷம வேலையை அவன் இன்னும் விடவில்லையா?

சந் :—விஷமம் செய்வது அவன் உடம்போடு பிறந்த வியாதியாயிற்றே! அதை எப்படி அவனுல் விட முடியும் ?

உஷா :—மறுபடியும் ஏதாவது கள்ளமார்க்கெட் செய்ய விதை போடுகிருனு ?

சந் :—அதில்லே உஷா. மனோகரனை அவனுக்குப் பிடிக்கவில்லை.

உஷா :—ஓஹோ, உங்களைப்பற்றி என்னிடம் சொன்ஞன். இப்போ மனோகரனைப்பற்றி உங்களிடம் சொல்லுகிருனுக்கும் ?

மனோகரனைப்பற்றி என்ன சொன்ஞன் என்று கேட்க உஷாவுக்குத் தைரியமில்லை. மனோகரனுக்கோ அங்கிருப்பது தர்மசங்கடமாய் இருந்தது.

சந் :—என்ன மனோகர் மௌனமாய் இருக்கிறீர்களே ?

மனோ :—நான் என்ன சொல்வது ? உங்கள் இருவருடைய நன்மைதான் எனக்கு முக்கியம். அதைப் பங்கப்படுத்தக்கூடிய எதையும் நான் செய்யமாட்டேன். அதற்கு ஒரே வழி நான் இந்த ஊரைவிட்டுப் போவதுதான்.

உஷா திடுக்கிட்டாள் ; சந்திரனும் திடுக்கிட்டான்.

சந் :—என்ன மனோகர், இப்படிப் பேசுகிறீர்கள் ?

மனோ :—நான் பேசுவதில் அதிசயம் ஒன்றும் இல்லை. கதிர்வேலு என்ன சொல்லியிருப்பான் என்பதை நான் யூகிக்க முடியாதா ?

சந் :—அதனுல் என்ன ? நான் ஏதாவது அதை நம்பினுல்தானே ?

மனோ :—நீங்கள் நம்பமாட்டீர்கள் என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். என்ருலும் கதிர்வேலு உங்களிடம் சொல்லியது விஷ வித்து. அது உங்கள் மனத்தில் இருந்து கொண்டே இருக்கும். அநாவசியமாக உங்க

ளுக்கு மனக் கஷ்டத்தைக் கொடுக்க நான் விரும்பவில்லை. நீங்கள் இருவரும் க்ஷேமமாய் இருக்கவேண்டும் என்பதே என் விருப்பம். அதற்காகவாவது இனி நான் இங்கிருக்கக் கூடாது.

சந்:—என்னை அவ்வளவு மோசமானவன் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? என்ன உஷா, பேசாமல் இருக்கிறாய் ?

உஷா ஒன்றும் பேசவில்லை. ஆனால், விம்மி விம்மி அழுதாள். "போய் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு பதிலை எதிர் பாராமல் மனோகரன் போய்விட்டான். அப்புறம் மனோகரன் அவர்கள் வீட்டிற்கு வருவதே இல்லை. மனோகரனும் சந்திரனும் தங்கள் வியாபார ஸ்தலங்களில் சந்தித்துக் கொள்ளுவார்கள். ஆனால், சந்திரன் வீட்டிற்கு மனோகரன் வருவதில்லை.

தங்கள் வீட்டிற்கு வரும்படி சந்திரன் எத்தனையோ தடவை கூப்பிட்டும் மனோகரன் தட்டிக் கழித்தான். மனோகரனைக் காணாமல் உஷா தவித்தாள். டெலிபோனிலாவது பேசலாமா என்று எண்ணினாள். அப்படிப் பேசுவது சரியல்ல வென்று அவள் மனத்தின் ஒரு பகுதி சொல்லிற்று. மற்றொரு பகுதி பேசுவது சரிதான் என்று சொல்லிற்று. இரண்டிற்கும் மத்தியில் ஊசலாடிக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் துணிந்து டெலிபோன் செய்தாள். அன்று இருவர் மனமும் அடைந்த ஆனந்தத்திற்கு அளவில்லை. அடிக்கடி மனோகரனுக்கு டெலிபோன் செய்யவேண்டும் என்று உஷா விரும்பினாள். மனோகரனும் அப்படியே விரும்பினான் என்றாலும் அவர்கள் மனத்தில் தோன்றிய ஆசைப்படி அவர்களால் செய்ய முடியவில்லை. சமய சந்தர்ப்பங்கள் இடங் கொடுக்காததால் சாத்தியமான போது டெலிபோன் செய்தாலும் மனத்தில் குறைப்பட்டுக் கொண்டுதான் இருந்தார்கள்.

கதிர்வேலு செய்த விஷமத்தால் மனோகரன் தன் வீட்டுக்கு வராமல் இருப்பதைப் பற்றிச் சந்திரனுக்கு ரொம்ப வருத்தந்தான். உஷா தன்மீது ரொம்பப் பிரிய

மாய் இருப்பதால் கதிர்வேலு விஷமத்தால் உஷா மீது அவனுக்குச் சந்தேகமோ வெறுப்போ வரவில்லை. மனோகரன் ரொம்பப் பரந்த நோக்கத்தோடு நடந்து வருவதை அவன் உணர்ந்திருந்தபடியால், அவன்மீது பொறாமையும் ஏற்படவில்லை. 'தனக்கு விவாகமாகு முன்பு உஷாவுக்கும் மனோகரனுக்கும் விவாகப் பேச்சு நடந்திருக்கலாம். அதனால் என்ன? கல்யாணமாகு முன்பு ஒரு பெண்ணுக்கு எத்தனையோ இடங்களில் மாப்பிள்ளைகள் பார்க்கிறார்கள். ஒரு மாப்பிள்ளைக்கு எத்தனையோ இடங்களில் பெண்கள் பார்க்கிறார்கள். அதில் என்ன தவறு? அந்த மாதிரிதானே உஷா-மனோகரன் விஷயமும்?' என்று சந்திரன் நினைத்தான்.

மனோகரன் பம்பாய்க்குப் போன பின்பு சந்திரனுக்கு வலது கையை இழந்த மாதிரி அதைரியம் ஏற்பட்டது. கதிர்வேலு மூலம் சந்திரனின் வர்த்தகத்தைப்பற்றி விடாமல் சுவாமிரத்னம் பொய்ப் பிரசாரம் செய்துவந்தார். இதனால் வர்த்தகமும் சந்திரனின் மனமும் சோர்வடைந்தன. இந்த அயோக்கியன் கதிர்வேலுவோடு சேர்ந்து கொண்டு இம்மாதிரி அக்கிரமங்கள் செய்யலாமா என்று சுவாமிரத்னத்தைப் பற்றி உஷாவும் சந்திரனும் ஒருநாள் பேசிக் கொண்டிருந்தபோது திடீரென்று உஷாவின் தாயார் வேகமாய் அங்கே வந்தாள்.

தன் வீட்டுக்கே வராதவள் இப்பொழுது வருவதைப் பார்த்ததும் 'என்ன விபத்தோ' என்று நினைத்து உஷா நடுங்கினாள். "அம்மா, அம்மா, என்ன விசேஷம் அம்மா?" என்று வேகமாய்க் கேட்டாள்.

தாயார்:—என்ன விசேஷமா? பெரிய ஆபத்தடி, ஆபத்து! இந்தக் கதிர்வேலுப் பயல் துரோகம் செய்து விட்டான். போலீஸில் எல்லாவற்றையும் சொல்லி வாக்குமூலம் கொடுத்து விட்டானும். அப்பாவுக்கு ஆபத்து வந்துவிட்டதடி அம்மா, நான் என்ன செய்யப் போகிறேன்?

தாயாரை நாற்காலியில் அமரச் செய்து அவளுக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தாள் உஷா. ஒரு பக்கம் தந்தைக்கு வந்திருக்கும் ஆபத்தைப் பற்றி உஷா வின் மனம் வருந்தியது. மற்ருெரு பக்கம் தன் புருஷன் இதிலிருந்து தப்பியதை நினைத்துச் சந்தோஷமடைந் தது. சிமெண்ட் வியாபாரத்திலிருந்து முன்பே தன் புருஷன் விலகும்படி செய்ததற்காகத் தன் இஷ்ட தெய் வத்தைப் பிரார்த்தித்தாள்.

கள்ளத்தனமாய்ச் சிமெண்ட் விற்பனையாவதாக அதி காரிகளுக்கும் புகார்கள் போனதால் தலைநகரிலிருந்து போலீசார் வந்து விசாரித்து சுவாமிரத்னம் கிடங்கைச் சோதனைபோட்டு, சிமெண்ட் மூட்டைகளைக் கைப்பற்றி ஞர்கள். இதை அறிந்த அம்பலவாணன் பாதாள லோகத்திற்குப் பறந்துவிட்டான். கதிர்வேலு அகப் பட்டான். அவனைப் போலீசார் பிடித்துக்கொண்டு போய் ஒரு நாள் உபவாசத்தில் போட்டு விசாரித்ததில் உள்ளதையெல்லாம் சொல்லிவிட்டான். அவன் வாக்கு மூலத்தின் பேரில் சுவாமிரத்னம் கைது செய்யப்பட்டார். அந்தச் சம்பவம் ஊரில் பரபரப்பை உச்ச நிலையில் கொண்டு வைத்தது.

சந்திரன் ஜாமீன் கொடுத்து சுவாமிரத்னத்தை விடுதலை செய்தான். ஆயிரக் கணக்காக ரூபாய் செல விட்டு, பெரிய பெரிய வக்கீல்களை யெல்லாம் சுவாமி ரத்னம் ஏற்பாடு செய்தார். ஆனால், கதிர்வேலு மட்டும் சுவாமிரத்னத்தோடு ஒத்து வேலை செய்ய மறுத்து விட்டான். சுவாமிரத்னம் இந்த வழக்கில் தப்பமுடியாது என்று தெரிந்ததும் இனி அவர் தயவு எதற்கு என்று நினைத்து, அவருக்கு விரோதமாக என்னென்ன சொல்ல முடியுமோ, அவ்வளவையும் போலீசுக்குச் சொல்லி வந்தான்.

வழக்கு பெரிய வழக்காய்விட்டபடியால் சந்திரனும் தனது வியாபாரத்தை மூட்டை கட்டிவைத்து வழக்கை நடத்த உதவி செய்ய வேண்டியதாயிற்று. வழக்கைப் பற்றி மனோகரன் அடிக்கடி விசாரித்து எழுதி வந்தான்.

கடைசியாக வழக்கும் முடிந்தது. சுவாமிரத்னத்தின் சொத்தில் முக்கால் பாகம் கரைந்தது. இரண்டு வருஷ தண்டனையும் கிடைத்தது. அப்பீலில் சுவாமிரத்னம் விடுதலை பெற்றார்.

ஆனால், அதற்கான செலவில் மீதமிருந்த சொத்தும் காலியாயிற்று. மேலே என்ன செய்வது என்று சந்திரன் யோசித்துக்கொண் டிருந்தபோது உஷா, "எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. உங்களுக்குச் சம்மதமானால், அதை முயற்சி செய்து பார்க்கலாம்" என்றாள்.

சந்திரன் :—சொல்லம்மா, சொல்லு. உனக்குப் பிடித்தது எனக்குப் பிடிக்காமல் எங்கே போய்விடும் ?

உஷா :—மனோகரனுக்குக் கடிதம் எழுதி ஏதாவது வேலை தேடிக்கொடுக்கச் சொன்னால் ?

சந் :—அதுதான் கேட்டேன். இன்றே எழுதிவிடுவோம். அவர் ஒருவரைத் தவிர நம்மீது நல்லெண்ணம் உள்ளவர்கள் வேறு யாரும் இல்லை. ஒரு விதத்தில் உன் அப்பா சொத்தெல்லாம் போய்விட்டது எனக்கு வருத்தமாய் இருக்கிறது. இன்னொரு விதத்தில் சந்தோஷமாய் இருக்கிறது. நான் சொல்லுவது உனக்குப் புரிகிறதா ?

உஷா :—ஊஹூம்.

சந் :—உன் பணத்திற்காக நான் உன்மீது ஆசைப் படவில்லை என்பதைக் காட்ட இது ஒரு நல்ல சந்தர்ப்பம் அல்லவா ?

உஷா :—அதை நீங்கள் சொல்லியா நான் தெரிந்து கொள்ள வேண்டும் ? அதிருக்கட்டும். நமது மாஜி நண்பர்களைப் பாருங்களேன் ? நம்மிடம் பணம் இருந்த போது ஈசல் மாதிரி வந்து கொண்டிருந்தவர்கள் இப் பொழுது இந்தப் பக்கமே எட்டிப் பார்ப்பதில்லையே ?

சந் :—அதுதானே சொன்னேன் ; உலகம் என்பது அதுதான். மனோகரன் ஒருவர்தான் இதில் தப்பிப்

பிறந்தவர். அதனால் அவரை எல்லாரும் கூறுகெட்டவன் என்கிறார்கள்.

உஷா :—சும்மா சொல்லட்டும். நிர்வாண நாட்டிலே கோவணம் கட்டியவனைப் பைத்தியக்காரன் என்பார்களாம். அந்த மாதிரி அநியாயக்காரர்களுக்கு மனோகர் பைத்தியக்காரராய்த் தோன்றுகிறார். எனக்கு என்னவோ, இந்தக் கோள் சொல்லும் கும்பலை விட்டுப் பம்பாய்க்குப் போய் நிம்மதியாய் இருந்தாலே போதும் என்று தோன்றுகிறது.

சந்திரன் :—அதுதான் நானும் சொன்னேன். மனோகருக்குக் கடிதம் எழுதுவோம். கடிதம் எழுதினால் நடக்கப்போவது தெரியாதா? வேலை நிச்சயமாகக் கிடைக்கும்.

இதைக் கேட்டதும் உஷாவுக்கு மகிழ்ச்சி பொங்கியது. சந்திரன் கடிதத்திற்கு மனோகரனிடமிருந்து பதில் வந்தது. உடனே புறப்பட்டு வரும்படி எழுதியிருந்தான். உஷாவும் சந்திரனும் பம்பாய் புறப்பட்டுச் சென்றார்கள். பம்பாயில் மாலதியும் இருந்தபடியால் அவளுக்கும் உஷா கடிதம் எழுதியிருந்தாள். பம்பாய் போய்ச் சேர்ந்ததும் ரயில்வே நிலையத்தில் மனோகரனும் மாலதியும் சந்தித்தார்கள். மனோகரனையும் உஷாவையும பார்த்து மாலதி குறும்புத்தனமாய்ச் சிரித்தாள். தன் வீட்டில் வந்து இறங்க வேண்டுமென்று மாலதி கேட்டாள். மனோகரன் அதற்கு விடவில்லை. "நீங்கள் விடமாட்டீர்கள் என்று தெரியும். என்றாலும் சில நாட்களாவது எங்கள் வீட்டில் இருக்கக் கூடாதா?" என்று மாலதி கேட்டாள்.

மனோ :—சில நாட்கள் என்ன? இங்கேயேதான் இருக்கப் போகிறார்கள். நான் வெளிநாடு போனபின்பு உங்கள் கூடவே வைத்துக் கொள்ளுங்களேன்.

வெளிநாடு என்று சொன்னதும் உஷாவுக்குத் தூக்கிவாரிப்போட்டது. "வெளி நாடா?" என்று கேட்டாள். பம்பாயில் இருந்தால் மனோகரனை அடிக்கடி பார்க்கலாம் என்ற அவளுடைய மனக்கோட்டை தகர்கிற மாதிரி தோன்றியது.

மனோ :—அதையெல்லாம் வீட்டுக்குப்போய்ப் பேசி கொள்ளலாமே. மாலதி அம்மையாரும் நம்முடனே வரட்டுமே. அப்புறம் அவர்கள் வீட்டுக்குப் போகலாம்.

உஷா :—ஆமாம், மாலதி; உன்னைத் தனியாகப் போகவிடமாட்டேன். எங்களுடன்தான் வரவேண்டும். நாம் இருவரும் எவ்வளவோ பேச வேண்டும்.

சந்திரன் :—அதுதான் நல்ல யோசனை. நாங்களும் எவ்வளவோ பேச வேண்டும். இனம் இனத்தைத் தானே சேரும்?

மாலதி இதைக் கேட்டு உஷாவிடம் கண்ணடித்தாள்.

உஷா :—ஆமாம். இப்போ ரொம்பப் பேசப் படித்திருக்கிறார். கல்யாணமாகும்போது இருந்தாரே, பேசா மடந்தையாக? அதெல்லாம் மாறிவிட்டது.

மனோ :—பூவுடன் சேர்ந்த நாரும் மணம் பெறும்.

உஷா உடனே மனோகரனைப் பார்த்துச் செல்லக் கோபத்துடன், "அப்போ என்னை வாயாடி என்று சொல்லுகிறீர்களாக்கும்?" என்று கேட்டாள்.

மனோ :—அப்படியா சொன்னேன் மாலதி தேவி? பூவுக்கு மணம் உண்டு என்று சொன்னேன். அதை வாயாடி என்று எப்படிச் சொல்ல முடியும்? உஷாவுக்கு நீங்களே பதில் சொல்லுங்கள்.

உஷா :—ஆமாம்; எப்பொழுதும் உங்களுக்குக் கேலி தான்.

மாலதி இந்த உஷா-மனோகரன் தர்க்கத்தை ஆச்சரியத்தோடு ரஸித்துக் கொண்டிருந்தாள். வீட்டிற்குப் போய் ஸ்நான பானாதிகள் முடிந்ததும் உஷாவும் மாலதியும் ஒரு தனி அறையை நாடிப்போனார்கள். சந்திரனும் மனோகரனும் அதே மாதிரி மற்றொரு அறையில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மாலதி :—உன் கடிதத்தைப் பார்த்ததும் எனக்கு ஒரே ஆச்சரியமாய் விட்டது. மனோகரனை எப்படிக் கண்டுபிடித்தாய்? அவர் வீட்டில் வந்திறங்க என்ன காரணம் என்றெல்லாம் யோசனை செய்தேன். இருந்தா

லும் உஷா நீ அதிருஷ்டசாலிதான். என்றாலும் நடை முறையில் உன் காதலும் கல்யாணமும் எப்படி ஒத்துப் போகின்றன என்பது எனக்குப் புதிராய் இருக்கிறது.

உஷா :—தற்செயலாய் ஒரு மோட்டார் கம்பெனியில் மனோகரனைப் பார்த்தேன். இன்னொன்று சொல்ல மறந்துவிட்டேன். என் கல்யாண தினத்தன்று மணப் பந்தலில் பார்த்தேன் என்று உன்னிடம் சொன்னேன் அல்லவா? அப்புறம் அவர் பம்பாய்க்கே வந்து விட்டாராம்.

மாலதி :—எதற்காக இப்படிப் பாதாள லோக வாசம் செய்து கொண்டிருந்தாராம்.

உஷா :—அதைக் கேளு மாலதி. என்னைக் கல்யாணம் செய்து கொடுக்கும்படி என் அப்பாவைக் கேட்டாராம். அவர் மறுத்ததால் இவர் தலைமறைவாய் விட்டாராம். மாலதி, இதைக் கேட்டதும் எனக்கு எப்படி இருந்தது தெரியுமா?

இச்சமயம் உஷாவுக்குக் கண்ணீர் ததும்பியது.

மாலாதி :—இதை எல்லாம் பார்த்தால் விதி என்று சொல்வதை நம்ப வேண்டியதாய்த்தான் இருக்கிறது.

சிறுது நேரம் இருவரும் பேசாமல் இருந்தார்கள்.

மாலதி :—இவ்வளவு அன்யோன்யமாய்ப் பழகுகிறாயே மனோகரனோடு. உன் கணவர் ஒன்றும் சொல்வதில்லையா?

உஷா :—இரண்டு பேரும் இரண்டு தெய்வங்கள் மாலதி. அதில்தான் எனக்கு அதிருஷ்டம் இருக்கிறது என்று தோன்றுகிறது. என்னை மனோகரன் கல்யாணம் செய்ய விரும்பினார் என்பதும் அவருக்குத் தெரியும். என்றாலும் இதுவரை அவர் பொறாமையையோ அதிருப்தியையோ காட்டியதில்லை.

மாலதி :—அது அவருடைய பெருந் தன்மையைக் காட்டுகிறது.

உஷா :—பெருந்தன்மை என்று சும்மா சொல்லி விட்டால் போதுமா ? தெய்வப் பிறவியம்மா, அசல் தெய்வப் பிறவி.

மாலதி :—ஆனால் உஷா, என்றாவது ஒரு நாள் இது சங்கடத்தில் கொண்டு விடாதா ?

உஷா :—நீ சந்தேகப்படுவது எனக்குப் புரிகிறது மாலதி. அம்மாதிரி நீ சந்தேகப்பட வேண்டாம்.

மாலதி :—உஷா, நீ மனோகர் மீது கொண்டிருக்கும் காதலை நான் அறிவேன். என்னிடம் நீ இப்படிப் பேசினால் நான் என்ன பதில் சொல்லுவது ?

உஷா :—நீயும் நானும் சிறந்த நண்பர்களல்லவா ? இதில் சந்தேகப்படுவதற்கு என்ன இருக்கிறது ?

மாலதி :—ஆணும் ஆணும் நண்பர்களாய் இருக்கலாம். பெண்ணும் பெண்ணும் நண்பர்களாய் இருக்கலாம். அதில் சந்தேகப்படுவதற்கு எதுவுமில்லை. ஆனால் ஆணும் பெண்ணும் சிறந்த நண்பர்களாகவும் இருந்து சந்தேகப்படுவதற்கு இடமில்லாமலும் இருக்க முடியுமா? இரும்பும் காந்தமும் நெருங்கும்போது ஒன்றையொன்று பற்றாமல் இருக்க முடியுமா ?

உஷா :—நீ சொல்லுவது சரிதான். ஆனால், மனித குணம், மிருக குணம் என்று இரண்டு உண்டல்லவா ? இச்சையை அடக்காமல் விடுவது மிருக குணம். அடக்குவது மனித குணம். நாமெல்லாம் மனிதராய் நடக்க முயற்சித்தால் முடியாதென்று சொல்லுகிறாய் ?

மாலதி :—எப்படி ?

உஷா :—தெய்வங்களை நாம் பிரார்த்தனை செய்யும் போது புருஷனாகவோ அல்லது மனைவியாகவோ நினைக்கிறோமா ? இல்லை. இல்வாழ்க்கைக்குப் புறம்பானதாக நினைக்கிறோம். இருந்தாலும் தெய்வங்கள் மீதுள்ள அன்பு புருஷன் மீதோ மனைவி மீதோ உள்ள அன்பை விட அதிகமானதாக இல்லையா? அதே மாதிரிதான் நான் மனோகரை நினைக்கிறேன். அவர் என் உள்ளத்தில் பதிந்து போனார். அதை விட்டு அவரைப் பெயர்க்க

முடியாது. அதனால்தான் அவரை உள்ளக் கடவுளாக்கி விட்டேன். என் கணவரை இல்லறக் கடவுளாக்கி விட்டேன். இருவருக்குள்ளும் முரண்பாடு ஏற்பட இடம் கிடையாது.

மாலதி :—அடே யம்மா. இது எனக்குப் புதுச் சித்தாந்தமாய் இருக்கிறதே ?

உஷா :—புதிது ஒன்றுமில்லை யம்மா. நான் சொல்லு வதை நீ சிந்தித்துப் பார். நீயே சரி என்று ஒப்புக் கொள்ளுவாய்.

மாலதி :—அன்போ இச்சையோ அதிகரித்தால் இரு பொருள் ஒரு பொருளாய் விடுமே ? எந்த இடத்தில் அதைத் தடுக்க முடியும் ?

உஷா :—தன்னடக்கமும், தியாக உணர்ச்சியும் இல்லாதவர்களுக்கு நீ சொல்லுவது சரி. இச்சை என்பது கட்டவிழ்ந்த கழுதை. அதை யாராலும் பிடித்து நிறுத்த முடியாது. அன்பு அப்படி யல்ல. தன்னடக்கமும் தியாக உணர்ச்சியும் அன்பிற்கு உண்டு. மற்றவர்கள் பட்டினி கிடந்தாலும் தான் மட்டும் வயிறு நிறையத் தின்றால் போதுமென்று நினைப்பதுதான் இச்சை. இதில் தியாகமோ தன்னடக்கமோ கிடையாது. தான் பட்டினி கிடந்தாலும் தன் குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டுமென்று தாய் நினைப்பதுதான் அன்பு. இதில் தியாகமும் தன்னடக்கமும் இருக்கின்றன. தான் அன்பு கொண்டவர்களின் நன்மையைத் தவிர வேறெதுவும் தனக்கு நினைப்பில்லை என்ற உள்ளம் வருமானால் அப்புறம் தவறுக்கு வழி எங்கே இருக்கும் ?

மாலதி ரொம்ப ரஸமாய்க் கேட்டுக் கொண்டிருந்தாள். இச்சமயம் திடீரென்று அவர்கள் இருந்த அறைக் கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. அன்பு லோகத்தில் ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த இருவரும் திடீரென்று அதிர்ச்சியுற்று விழிப்படைந்தார்கள். உஷா எழுந்து சென்று கதவைத் திறந்தாள். வெளியே சந்திரன் நின்றான்.

சந்திரன் :—மன்னிக்க வேண்டும் மாலதி தேவி. உங்கள் சம்பாஷணையைக் கலைத்துவிட்டேன்.

மாலதி :—கலைத்துவிட்டது உண்மைதான். என்ருலும் முக்கியமான விஷயமாய் இருந்தாலொழிய நீங்கள் கலைக்க மாட்டீர்கள் என்பது நிச்சயம்.

சந்திரன்:—(சிரித்துக் கொண்டே) இன்றிரவே நாம் புறப்பட வேண்டும்.

“ இன்றிரவே புறப்பட வேண்டுமா?” என்று உஷாவும் மாலதியும் ஏக காலத்தில் கேட்டார்கள்.

சந் :—ஆமாம். இந்த மனேகர் நடத்தை எனக்கு ஒன்றும் பிடிக்க வில்லை.

இதைக் கேட்டு இருவரும் திடுக்குற்ருர்கள். மாலதி உஷாவைப் பார்த்தாள்.

உஷா :—என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள் ?

சந் :—என்ன சொல்லுகிறேனு? சொல்ல வேண்டியதைச் சொல்லுகிறேன். எனக்கு இங்கே வேலை பார்க்க இஷ்டமில்லை உஷா.

உஷா:—நான் என்ன சொல்லுவது ? உங்கள் இஷ்டம்.

குறுக்கே பேசுவதற்கு மாலதிக்கும் தர்ம சங்கடமாய் இருந்தது. காரணம் என்ன என்று கேட்கவும் பயம். காரணம் தெரியாமல் சமாதானம் சொல்ல ஆரம்பிப்பதும், முடியாத காரியம். இருந்தாலும் எதையாவது பேசி வைப்போமே என்ற நினைப்பில், “ இந்த வேலை பிடிக்கா விட்டால் வேறு வேலைக்கு முயற்சி செய்கிறதுதானே ? அதற்காக இன்றே ஏன் புறப்பட வேண்டும் ?” என்று கேட்டாள். உஷாவுக்கும் அப்பொழுது தான் மனதில் தைரியம் தோன்ற ஆரம்பித்தது.

சந்:—நாங்கள் இங்கே இருந்தால் என் தலையில் வேலையைக் கட்டிவிட்டு மனேகர் போய் விடுவார்.

உஷா:—நீங்கள் சொல்லுவது ஒன்றும் புரிய வில்லையே ?

சந்:—சொல்லுகிறேன் கேள். வெளி நாட்டுக்குப் போகிறதாக மனோகரன் சொல்லுவதெல்லாம் நமக்காகத் தான். எனக்கு வேலை வேண்டுமே என்பதற்காகத் தமது வேலையை என்னிடம் கொடுத்து விட்டு அவர் வெளி நாடு போகிறார். அம்மாதிரி அவர் வேலையை நான் ஒப்புக் கொள்ளுவது நியாயமா ?

இப்பொழுதுதான் விஷயம் என்ன என்பது உஷா வுக்கும் மாலதிக்கும் புரிந்தது. விஷயத்தைக் கேட்டதும் ஒரு பெரிய பாரம் தன் மனத்தைவிட்டு நீங்கியது போல் உஷா பெருமூச்சு விட்டாள்.

உஷா:—இவ்வளவுதானா விஷயம் ? சாவகாசமாய்ப் பேசிக்கொள்ளுவோமே ? அவசரப்பட்டு இன்று புறப்படு வானேன் ?

மாலதி:—எனக்கும் அதுதான் சரியென்று தோன்று கிறது.

மாலதி, உஷா, சந்திரன் மூவரும் பம்பாயில் பார்க்க வேண்டிய காட்சிகளைக் கண்டு களிப்பதற்காக வெளியே போனார்கள். இரவு மாலதி வீட்டில் விருந்து சாப்பிட்டு வந்ததும் வெளிநாடு போவதற்கான ஏற்பாடுகளை மனோ கரன் கவனித்தான். இதைக் கவனித்த உஷா, "வேலையை ஒப்புக்கொள்வதா இல்லையா என்பதை அத்தான் இன்னமும் முடிவு செய்யவில்லை. அதற்குள், நீங்கள் புறப்பட ஏற்பாடு செய்கிறீர்களே ?" என்றாள்.

மனோ:—நீ இருக்கும் போது அதைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும் ? அவர் ஒப்புக்கொள்ளும்படி நீ செய்துவிடுவாய் என்பது எனக்குத் தெரியும்.

உஷா:—வேலையை ஒப்புக் கொண்டாலும் சரி. இல்லையானாலும் சரி, நீங்கள் நாளை மறுநாள் புறப்படக் கூடாது. ஒரு வாரம் கழித்துத்தான் புறப்பட வேண்டும். ஒரு வாரமாவது எல்லோரும் சேர்ந்து இருக்க வேண்டாமா ?

மனோ:—நான் எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டேனே ?

சந்:-அதனால் என்ன ? மாற்றி விட்டால் போகிறது.

இச்சமயம் கதவு தட்டுகிற சப்தம் கேட்டது. கதவைத் திறந்து பார்த்தபோது அங்கே கதிர்வேலு நின்றான். கிழிந்து அழுக்குப் படிந்த ஆடைகளும் குழிந்த கண்களும் அவன் நிலைமையை வெளிப்படுத்தின. அவனை உள்ளே வரச்சொல்லுவதா வேண்டாமா என்று மனோகரன் திகைத்து உஷாவையும் சந்திரனையும் பார்த்தான்.

உஷா அவனைப் பார்த்ததும், " ஓஹோ " என்றாள்.

சந்திரன் அவனைப் பார்த்து, " இங்கேயும் வந்து விட்டாயா ?" என்றான்.

" என் மீது கோபம் கொள்ளவேண்டாம். நான் செய்த தவறுகளுக்குப் பலனை அநுபவிக்கிறேன். என்னைக் காப்பாற்றுங்கள் " என்று உஷாவைப் பார்த்துக் கெஞ்சினான்.

உஷாவுக்குக் கோபம் பொங்கிற்று. என்றாலும் அவன் இருந்த நிலைமையைப் பார்த்து இரக்கங் கொண்டாள். இவனாலல்லவா மனோகரன் பம்பாய்க்கு வந்தார் என்பதை நினைத்தபோது மறுபடியும் கோபம் வந்தது. " வாழ்க்கையில் சுகத்தையும் இன்பத்தையும் அநுபவிக்க வேண்டியதுதானே?" என்று நினைத்து மனத்தைச் சமாதானப் படுத்திக்கொண்டாள்.

சிமெண்ட் கம்பெனியிலிருந்து தன்னை வெளியே தள்ளிய பயலல்லவா என்று நினைத்த போது சந்திரனுக்குக் கோபம் வந்தது. இப்பொழுது கதிர்வேலு இருக்கும் நிலைமையைப் பார்த்ததும், "இவன் என்ன வாழ்ந்து விட்டான் ?" என நினைத்து மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டான்.

மனோகரன் அவனைப் பற்றி ஒன்றுமே நினைக்கவில்லை. ' ஏதோ தெருவில் காற்று பலமாய் அடித்தால் வீட்டுக்குள் குப்பை கூளங்களைக்கொண்டு வந்து தள்ளுவதில்லையா ? அதற்காகக் குப்பை கூளங்கள் மீது கோபிப்பதில் என்ன பிரயோஜனம் ? அந்த மாதிரி,

இதுவும் ஒரு குப்பை. இதை ஒரு பொருட்டாக மதித்து நடக்கவேண்டுமா ?' என்ற மாதிரி மனோகரன் மனத்தில் சிந்தனைகள் கிளம்பின.

உஷாவும் சந்திரனும் பேசாமல் இருப்பதைப் பார்த்த மனோகரன், "அப்புறம்?" என்றான். மறுபடியும் ஒருவரும் பேசாமல் இருக்கவே மனோகரன் அவனைப் பார்த்து, "உனக்கு என்ன வேண்டும் ?" என்று கேட்டான்.

கதிர்:—சாப்பாட்டுக்குக் கஷ்டமாய் இருக்கிறது. இங்கே ஒருவரை நம்பி வந்தேன். அவர் ஏமாற்றி விட்டார்.

மனோ:—சரி, சரி, உன்னைக் கூட ஏமாற்றுகிறவர்கள் இருக்கிறார்களா? இதோ பார், இனி இந்தப் பக்கம் வருவதில்லை என்று உறுதி கூறினால் பத்து ரூபாய் தருகிறேன்.

கதிர்:—நல்லதுங்க.

கதிர்வேலுவிடம் ரூபாயைக் கொடுத்தனுப்பி விட்டான்.

உஷா:—பெருமூச்சு விட்டுக் கொண்டு, "இந்தப் பாவி எந்த நேரத்தில் என் அப்பாவிடம் வந்து சேர்ந்தானோ, எல்லாவற்றையும் காலிசெய்து விட்டான்" என்றாள்.

மனோ:—அப்படிச் சொல்லக்கூடாது உஷா. இவன் என்ன செய்வான் ? இவன் இல்லாவிடில் இன்னொருவன் அந்த இடத்தில் வந்து சேருவான். நாம் நடப்பது சரியாய் இருக்கவேண்டும். வேறு நம்மால் என்ன செய்ய முடியும்? இன்று பணக்காரனாய் இருக்கிறவன் நாளை ஏழையாகிறான். இன்று ஏழையாய் இருக்கிறவன் நாளை பணக்காரனாகிறான். என்ன ஏற்றத் தாழ்வு ஏற்பட்டாலும் நாம் நியாயமாய் நடந்தால் அது ஒன்றுதான் நம்முடைய மனதிற்கு நிம்மதியைக் கொடுக்கும்.

சந்திரன்:—செய்த காரியத்திற்கான பலனை அநுபவித்துத்தானே ஆகவேண்டும் ?

உஷா:—என்ன இருந்தாலும் இந்தக் கதிர்வேலு மாதிரி உள்ள ஆட்களை கடவுள் படைக்கவே வேண்டாம்.

சந்:—அவர் அம்மாதிரி படைப்பதால்தான் நல்லவர்களின் அருமை நமக்குத் தெரிகிறது. அது கிடக்கட்டும். நேரமாகிறது தூங்கலாமா ?

உஷா:—போவோம்.

கடைசியில் வேலையை ஒப்புக்கொள்ளுவ தென்று சந்திரன் தீர்மானித்தான். உஷாவுக்காகத்தான் மனோகரன் தனக்கு இவ்வளவு உதவிகளைச் செய்கிறான் என்பது சந்திரனுக்குத் தெரியாமல் இல்லை. தனக்காகச் செய்யாமல் உஷாவுக்காகச் செய்கிறான் என்பது சந்திரனின் சுயமதிப்பைப் புண்படுத்துவதாய் இருந்தது. அந்த வேகம் அதிகமாய் இருந்த சமயத்தில்தான் 'வேலையே வேண்டாம், ஊருக்குத் திரும்பலாம்' என்ற நினைப்புப் பலமாக இருந்தது.

ஒருவருக்கு நன்றி காட்ட வேண்டிய நிலைமையில் இருப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. அந்தத் தளையிலிருந்து விடுபட முயற்சிக்கும்போதுதான் நன்மை செய்தவன் மீது ஏதாவது குற்றஞ் சாட்டி அவனுக்குக் கெடுதல் செய்ய மனித உள்ளம் பெரும்பாலும் நினைக்கிறது. சந்திரனும் அந்தக் கட்டத்தில்தான் அச்சமயத்தில் இருந்தான்.

ஆனால், மனோகரன் வெளி நாடு போவதாய் இருந்ததால் அவன் உள்ளம் அதை நினைத்துத் திருப்தியடைந்தது. இந்த நாட்டில் மனோகரன் இல்லாதவரையில் அவனுக்கு நன்றி காட்ட வேண்டும் என்ற கடமை இல்லை யல்லவா என்று நினைத்துச் சந்திரன் மகிழ்ச்சியடைந்தான்.

உஷா மீது அவனுக்குச் சந்தேகமோ கோபமோ இல்லா விட்டாலும் உஷாவின் அன்பையோ அபிமானத்தையோ மற்றொருவன் தன்னோடு பங்கு போடுவதை அவன் விரும்பவில்லை. அதனால் அந்த வகையிலும் மனோ

கரன் வெளி நாடு போவதைப் பற்றி அவன் சந்தோஷப் பட்டான். உஷாவின் பூரண அபிமானத்தையும் பெறு வது, தனக்கு மனோகரன் செய்த உதவிகளுக்கு நன்றி காட்ட வேண்டிய அவசிய மில்லாமல் செய்வது ஆகிய இரு காரியங்களுக்கும் மனோகரன் வெளி நாடு போவது ஒரு பெரிய வரப்பிரசாத மென்று சந்திரன் மகிழ்ந்தான்.

உஷாவின் மனம் ஒரு பக்கம் வருத்தத்திலும் மற் றொரு பக்கம் சந்தோஷத்திலும் அகப்பட்டு ஊசலாடியது. மனோகரனை அடிக்கடி பார்க்க முடியாதபடி அவன் வெளி நாடு போவது அவளுக்கு வருத்தத்தைக் கொடுத்தது. மற்றொரு பக்கம் சந்தோஷத்திற்குக் காரணம் என்ன? மனோகரன் அங்கேயே இருந்தால் ஒரு வேளை மனோகர னுக்கும் சந்திரனுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டு விட்டால் அப்புறம் மனோகரனைப் பார்க்கவே முடியாது என்று எண்ணினாள். அதோடு தன்னுடைய உறுதி என்றாவது மனோகரனிடம் தளர்ந்துவிட்டால் என்ன செய்வது என்ற பயம் அவளுக்கு இருந்து கொண்டே இருந்தது.

இந்த இரண்டு காரணங்களினாலும் மனோகரன் வெளி நாடு போவதைக் கண்டு சந்தோஷ மடைந்தாள். இந்தச் சந்தோஷம் அதிகமாய் இருக்கிறதா, வருத்தம் அதிகமாய் இருக்கிறதா என்பதை அவளால் அறிய முடிய வில்லை.

மனோகரன் புறப்படுவதற்கு முதல் நாள் உஷா விடம் ஒரு பொட்டலத்தைக் கொடுத்தான். "இது என்ன?" என்று கேட்டாள் உஷா. "உன் பெட்டியில் வைத்துக்கொள். இந்த ஊருக்கு நீங்கள் புதிது. திடீ ரென்று ஏதாவது அவசரச் செலவு ஏற்படுமானால் அப் பொழுது அதை உபயோகித்துக்கொள்" என்றான் மனோகரன்.

உஷா:—வேண்டாம் மனோகர். உங்களுக்கு அதே போலப் போகிற இடங்களில் அவசரச் செலவும் ஏற்பட லாம். அதற்கு வைத்துக் கொள்ளுங்கள்.

மனோ:—நான் சமாளித்துக் கொள்ளுவேன்.

உஷா:—இல்லே மனேகர்.

மனே:—உனக்கு நான் வேறு என்ன செய்யப் போகிறேன்? ஆட்சேபணே சொல்லாதே.

உஷா:—வேறு நீங்கள் எனக்கு என்ன செய்ய வேண்டும்? உங்கள் அன்பு ஒன்று போதாதா? அது தான் எனக்கு எல்லாம்.

உஷா அந்தப் பொட்டலத்தைத் திரும்பவும் மனே கரனிடம் நீட்டினுள். அந்த நீட்டிய கையைப் பற்றிய மனேகரன், "உஷா" என்ருன். உஷா தலே நிமிர்ந் தாள். அவள் கண்களில் நீர் மல்கி நின்றது.

மனே:—நான் போய் வரட்டுமா?

உஷா பதில் சொல்லவும் இல்லே. மனேகரனிடம் இருந்து தன் கையை விடுவிக்கவுமில்லே.

மனே:—அப்போ?

உஷா:—(குரல் நடுக்கத்தோடு) நீங்கள் என் தெய் வம். அவர் என் கணவர்.

மனேகரன் பெரு மூச்சு விட்டுக் கொண்டு, "உன் விருப்பப்படியே இருக்கட்டும் உஷா. நீ க்ஷேமமாய் இருக்க வேண்டும். அவ்வளவுதான் என் பிரார்த்தனே" என்று சொல்லி அவள் கையைத் தூக்கி முத்தமிட்டான். அச்சமயம் அவள் கையிலிருந்து பொட்டலமும் ஒரு லாக்கெட்டும் கீழே விழுந்தன. லாக்கெட்டை ஆச்சரி யத்தோடு எடுத்துத் திறந்தான். அதில் உஷாவின் படம்—கல்யாணமாகும் முன்பு எடுத்த படம்—இருந்தது. அவன் திகைப்புக்கு அளவே யில்லே. உடனே "உஷா" என்ருன். அவள் தலே நிமிர்ந்து பார்த்தாள். முகத்தில் புன்னகை பூத்திருந்தது. லாக்கெட்டைத் தன் நெஞ் சோடு அழுத்திக்கொண்டு, "இது எனக்கா? எனக்கே எனக்குத்தாஞ?" என்ருன். உஷா தலேயை ஆட்டி ஞள். மனேகரனுக்கு ஆனந்தக் கண்ணீர் வந்தது.

மறு நாள் காலேயில் மனேகரன் வெளி நாடு புறப் பட்டுப் போஞன்.

# சிகிச்சை எதற்கு ?

நாச்சியாரம்மாளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்ட தென்று வீட்டிலே எல்லோரும் நினைத்தார்கள். முதல் நாள் இரவு படுக்கப் போகிற வரையில் அழுதுகொண் டிருந்தவள், காலையில் எழுந்ததிலிருந்து சந்தோஷமாய்க் கலகலப்பாய் இருப்ப தென்றால், யாருக்குத்தான் சந்தேகம் தோன்றாது ?

நாச்சியாரம்மாளுக்கு ஒரே மகன். அவன் பெயர் பரந்தாமன். கணவனும் இறந்துபோய் விட்டார். ஆஸ்தியும் ஏராளம். மகனுக்குக் கல்யாணத்துக்கு முயற்சி நடந்துகொண்டிருந்தபோதுதான் திடீரென்று பரந்தாமனைக் கைது செய்து அவன் மீது வழக்குத் தொடர்ந்தார்கள். வழக்கென்றால் சாதாரண வழக்கல்ல ; ஒரு வெள்ளைக்கார அதிகாரியைக் கொலை செய்ததாக வழக்கு. அதுவும் வெள்ளைக்கார சர்க்கார் காலத்தில் நடந்த வழக்கு. பரந்தாமனோடு இன்னும் நாலு பேரையும் கைது செய்து கொலைக் குற்றத்தையும் அதோடு பிரிட்டிஷ் சர்க்காரைக் கவிழ்க்கச் சதியாலோ சனை செய்த குற்றத்தையும் சாட்டினார்கள்.

விசாரணை முடிந்துவிட்டது. தீர்ப்புக் கூறவேண் டியதுதான் பாக்கி.

தண்டனையைப் பற்றி ஒருவருக்கும் சந்தேகம் கிடையாது. ஒன்று, தூக்குத் தண்டனை அல்லது தீவாந்தர சிட்சை. இதை நினைத்துத்தான் நாச்சியா ரம்மாள் அழுது புலம்பிக்கொண்டிருந்தாள். தன் அருமை மகனைத் தூக்கு மரத்தில் ஏற்றுவதை யார்தான் சகிக்க முடியும் ?

தூக்குத் தண்டனை இல்லை ; ஆயுள் தண்டனை என்றாலும் பரந்தாமன் விடுதலையடைந்து வருகிறவரை

யில் தான் உயிரோடு இருக்கப்போவதில்லை என்று நினைத்துப் புலம்பினாள். இரண்டில் எதுவானாலும் மீண்டும் பரந்தாமன் சுதந்தரமாய் நடமாடுவதையோ அவன் கலியாண வைபவத்தையோ தான் பார்க்கப் போவதில்லை என்று நாச்சியாரம்மாள் நினைத்தபடியால் துடிதுடித்துப் போனாள். அவ்வளவு துக்கமாய் இருந்த நாச்சியாரம்மாள் காலையில் எழுந்ததிலிருந்து சிரித்துக் கொண்டே இருந்தால், யாருக்குத்தான் சந்தேகம் ஏற்படாது ?

அதிகாலையில் எழுந்து ஸ்நானம் செய்துவிட்டு பூஜை, நைவேத்தியத்திற்குத் தன் மகனுக்குப் பிடித்த மான சர்க்கரைப் பொங்கல் போடும்படி சமையல் காரிக்கு உத்தரவிட்டாள். பூஜை முடிந்ததும் பக்கத்து வீட்டுக்காரர்களுக்குச் சர்க்கரைப் பொங்கல் பிரசாதத்தை அனுப்பினாள். அவர்களுக் கெல்லாம் ஆச்சரியமா யிருந்தது.

பரந்தாமனுக்கு விடுதலை கிடைத்துவிட்டதா என்று ஒருவரை யொருவர் கேட்டுக்கொண்டார்கள். "விடு தலையா? கொலை வழக்கிலா? உனக்கென்ன பைத் தியமா?" என்று வழக்கு விசாரணையை விடாமல் பத்திரிகையில் படித்து வந்தவர்கள் பதில் சொன்னார்கள். இந்தக் கேள்வியும் பதிலும் ஊர் பூராவாகப் பரவின. இதைத் தொடர்ந்து நாச்சியாரம்மாள் எப்பொழுதும் சிரித்துக்கொண்டிருக்கிறாள் என்ற பேச்சும் பரவவே அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்ற வதந்தியை எல்லாருமே தலையாட்டி. ஊர்ஜிதம் செய்தார்கள்.

நாச்சியாரம்மாளின் சகோதரர் திருமலைசாமிக்கு இது பெரிய அதிர்ச்சியாய் இருந்தது. வீட்டுக் காரியங் களிலோ வழக்கு நடத்துவதிலோ நாச்சியாரம்மாவுக்கு உதவியாய் இருந்து வருவது திருமலைசாமிதான். தன் சகோதரிக்குப் பைத்தியம் என்ற பேச்சைக் கேட்டவுடன் திருமலைசாமிக்கு இடி விழுந்தமாதிரியாயிற்று.

நேரே டாக்டர் வீட்டுக்கு ஓடினுன். போகிற வழியில் சித்தி விநாயகர் கோவிலுக்குள் நுழைந்தான். விநாயகர் சந்நிதியில் தேங்காய்க் கடை நடேசன் ரொம்ப உருக்கமாக விநாயகரை வேண்டிக்கொண்டிருந் தான். நடேசன் பரந்தாமனுக்குத் தாயாதிக்காரன். பரந்தாமன் சொத்துக்கு நேர் வாரிசு இல்லாவிட்டால் நடேசனுக்குத்தான் சொத்துச் சேரும். திருமலேசாமி வந்ததை நடேசன் பார்க்கவில்லே.

நடேசன் விநாயகரைப் பார்த்து, கரங்கூப்பி, "ஏ விநாயகா, இதுவரை என் விருப்பங்களேப் பூர்த்தி செய்து வருகிருய். நானும் வஞ்சமில்லாமல் உனக்கு விடலே போட்டு வருகிறேன். நாச்சியாரம்மாளேப் பற்றி இன்று நான் கேள்விப்படுவதை உண்மையாக்கி விடு. உனக்கு நூறு தேங்காய் விடலே போடுகிறேன். பரந்தாமன் சொத்தெல்லாம் என் கைக்கு வந்ததும் உனக்குப் பெரிய கோயிலே கட்டிவைத்து விடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

இதைக் . கேட்டுக்கொண்டிருந்த திருமலேசாமிக்கு நடேசன் மண்டையில் .ஒரு அடி போடலாமா என்று தோன்றியது. இச்சமயம் திருமலேசாமியின் கண்களுக்கு ஏதோ ஒன்று நெளிவதுபோல் தெரிந்தது. கூர்ந்து கவனித்தான். அது பாம்பு! நடேசன் பக்கமாகத் தலே தூக்கிக்கொண்டு போய்க்கொண்டிருந்தது. நடேசனேக் கடிக்கட்டுமே என்று ஒரு விநாடி நினேத்தான். அடுத்த விநாடியில் அவனுக்கு ஏற்பட்ட பயத்தில், "பாம்பு, பாம்பு" என்று கத்திக்கொண்டே வெளியே ஓடினுன்.

நடேசன் திரும்பினுன். பாம்பைக் கண்டதும் பரந்தாமன் சொத்தின்மேல் இருந்த ஆசையெல்லாம் பறந்து தன் உயிரின் மேலுள்ள ஆசையே அதிக மாயிற்று. தான் கேட்ட வரம் சித்தி விநாயகருக்கு விருப்பமில்லேயோ என்று நினேத்தான். அதனுல்தான் பாம்பை ஏவிவிட்டாரோ என்று எண்ணினுன். உடனே "வேண்டாம், வேண்டாம்" என்று கததிக்கொண்டே வெளியே ஓடினுன். வெளியே திருமலேசாமியிடம்

பேசுவதற்காக அவன் நிற்கவில்லை. ஒரே ஓட்டமாக ஓடினான்.

திருமலைசாமி அங்கிருந்து டாக்டர் வீட்டுக்குப் போய் அவரிடம் விஷயத்தைச் சொன்னான். டாக்டர் சங்கரன் தான் நாச்சியாரம்மாள் வீட்டாருக்கு வழக்கமாக வைத்தியம் செய்து வருகிறார். கொஞ்சம் சந்தேகப் பேர்வழி. விஷயத்தைக் கேட்டதும் அவர் தலை ஆட்டினார். "பைத்தியம் பிடித்திருக்கலாம்" என்று அவர் வாய் முணுமுணுத்தது. மேலும் அவர் திருமலை சாமியைப் பார்த்துச் சொன்னதாவது: அந்த அம்மாள் நிலைமையில் யார் இருந்தாலும் பைத்தியம்தான் பிடிக்கும். எப்பேர்ப்பட்ட குடும்பம், எவ்வளவு செல்வாக்காய் இருந்த குடும்பம், திடீரென்று இடி விழுந்த மாதிரி கஷ்டம் வந்துவிட்டதே! வழக்குத்தான் என்ன லேசான வழக்கா? ஒன்று தூக்கு அல்லது ஜன்ம தண்டனை, இவற்றையெல்லாம் பார்த்தால் ஏன் பைத்தியம் பிடிக்காது? திடீரென்று ஏற்பட்ட அதிர்ச்சியால் மூளை புரண்டுவிட்டது. நேற்று இரவு படுக்கப் போகிறவரையில் அழுதுகொண்டுதானே அந்த அம்மா இருந்தது?

திருமலைசாமி :—ஆமாங்க.

டாக்டர் :—பார்த்தீர்களா. இரவு பூராவாகத் தூக்கம் வந்திருக்காது. மகனைப்பற்றி நினைத்துக்கொண்டே இருந்திருப்பாள். அதன் பலன் சித்தப்பிரமை ஏற்பட்டு விட்டது.

திருமலை :—நீங்கள் நேராகப் பார்த்துவிட்டு அப்புறம் என்ன செய்யலாமென்று சொல்லுங்கள். எப்படியாவது குணப்படுத்திவிட வேண்டும்.

டாக்டர் பதில் சொல்லவில்லை.

திருமலை :—என்ன டாக்டர், பதில் சொல்லாமல் இருக்கிறீர்களே?

டாக்டர் எங்கேயோ பார்த்துக்கொண்டு ஆழ்ந்த யோசனையில் இருந்தார். திருமலைசாமியின் ஆவல்

அதிகரித்தது. "என்ன டாக்டர் பதில் பேசவில்லை?" என்று மறுபடியும் கேட்டான். டாக்டர் அவனைப் பார்க்காமலேயே, "உனக்கு என்னப்பா அவ்வளவு ஆவல்?" என்று கேட்டார்.

திருமலைசாமி:—என்ன டாக்டர், இப்படிக் கேட்கிறீர்கள்? அவள் என் சகோதரியல்லவா?

டாக்டர்:—அது எனக்குத் தெரியாதா? நம்மால் செய்கிறதைச் செய்து பார்ப்போம். ஆனால், இந்த வியாதியைச் சீக்கிரமாய்க் குணப்படுத்திவிட முடியாது. நாளடைவில்தான் குணப்படுத்த முடியும். அதுவும் பரந்தாமன் வந்தால்தான் பூரணமாய்க் குணமாக முடியும்.

திருமலை:—பரந்தாமன் எப்போ வருவானென்று எப்படிச் சொல்ல முடியும் டாக்டர்?

டாக்டர்:—அதனால் என்னப்பா? இப்போ அந்த வீட்டுக் காரியங்களை எல்லாம் நீதானே பார்த்து வருகிறாய். அதைப்போல இனியும் நீயே பார்த்துக் கொள்ளேன்.

திருமலை:—அதுதானே முடியாது.

டாக்டர்:—ஏன் முடியாது? கஷ்டம், சுகம் இரண்டும் கலந்ததுதானே யப்பா வாழ்க்கை? கஷ்டம் வந்தால் அதனால் மனமுடைந்து சும்மாயிருந்து விடுவார்களா? மனதைத் தைரியப்படுத்திக்கொள். எல்லாம் காலப் போக்கில் சரியாய்விடும். நான் இப்படிச் சொல்லுவதால் உனக்கு ஏற்பட்டுள்ள கஷ்டத்தை அறியாமல் பேசுகிறேன் என்று நினைக்காதே. அல்லது உன்னைவிட ரொம்ப மனதிடம் எனக்கு இருப்பதாகவும் அர்த்தமில்லை. ஒருவருக்குக் கஷ்டம் வந்தால் மற்றவர்கள் தைரியம் சொல்ல வேண்டியது மனிதர்கள் கடமை. அதை அநுசரித்துத்தான் சொல்லுகிறேன். நீ தைரியமாய் இருக்க வேண்டும். நாச்சியாரம்மாளைக் குணப்படுத்தும் வைத்தியத்தை நான் கவனித்துக் கொள்கிறேன். குற்றாலத்துக்குப் போய் ஒரு மாதம் தங்கி தினம் அருவி

யில் குளித்து வந்தாலே குணமாய்விடுமென்று நினைக் கிறேன்.

திருமலைசாமி :—அவற்றிற்கெல்லாம் பணத்திற்கு நான் எங்கே போவேன் டாக்டர் ?

டாக்டருக்கு ஆச்சரியமாய் இருந்தது. "இந்த ஊரிலேயே பெரும் பணம் படைத்த குடும்பம் உங்கள் குடும்பம். பணத்திற்கு எங்கே போவது என்று நீ பேசுவது ஆச்சரியமாய் இருக்கிறதே!" என்று கேட்டார். கண்ணில் தேங்கிய நீரைத் திருமலைசாமி துடைத்துக் கொண்டு, "நாச்சியாரம்மாள் கையில் சொத்து இருக்கிற வரையில்தானே பணம் கிடைக்கும் ?" என்று கேட்டார்.

டாக்டர் :—ஆச்சரியத்தோடு சொத்து அந்த அம்மாள் கையில் இல்லாமல் எங்கே பறந்துவிடும் ?

திருமலைசாமி :—அம்மாளுக்குப் பைத்தியம் என்று தெரிந்ததும் வாரிஸ்காரர்கள் வந்து பிடுங்கிக்கொள்வார் களே டாக்டர் ! ஜீவனத்திற்கு நான் என்ன செய்வேன்? இவளை நம்பியே இதுவரை காலங் கழித்துவிட்டேன். இப்போது திடீரென்று என்னை நடுத்தெருவில் விட்டு விட்டாளே !

இப்பொழுதுதான் டாக்டருக்கு விஷயம் புரிந்தது. நாச்சியாரம்மாளுக்குப் பைத்தியம் பிடித்தது பற்றி திருமலைசாமிக்கு அவ்வளவு கவலையில்லை. பைத்தியம் பிடித்தால் சொத்துக்கள் அவள் கையைவிட்டுப் போய் அதனால் தனக்கு சுகஜீவனத்திற்கு வழியில்லாமல் போகுமே என்பதுதான் அவனுக்குப் பெரிய கவலை. இதை நினைத்ததும் டாக்டருக்குச் சிரிப்பு வந்தது.

பரநலமே உலகத்தில் கிடையாதா என்று நினைத் தார். இன்றிருந்து நாளைக்கு மாளுகிறவர்கள் எதற்காக இம்மாதிரி சுயநலம் பிடித்து அலைய வேண்டும் என்று ஒரு பெரிய கேள்வியைத் தனக்குத்தானே போட்டுக் கொண்டார். உடனே நாச்சியாரம்மாள் வீட்டிலிருந்து தமக்கு 500 ரூபாய் பாக்கி வரவேண்டும் என்ற நினைப்பு தோன்றவே அவர் நெஞ்சில் பக் என்று பீதி ஏற்பட்டது.

அவருடைய சுயநல-பரநல ஆராய்ச்சிகள் உடனே ஸ்தம்பித்துவிட்டன. அம்மாளுக்குப் பைத்தியம் பிடித்தால், சொத்துக்களை வாரீஸ்காரன் கைப்பற்றினால், தமக்கு வரவேண்டிய பாக்கி என்னாவது என்ற கவலை ஏற்பட்டது. திருமலைசாமியைப் பார்த்து, "உன் யோசனை என்ன ?" என்று கேட்டார்.

திருமலைசாமி :—நாச்சியாரம்மாளின் பைத்தியம் உடனே குணமாக வேண்டும். குணமாகாவிட்டாலும் குணமாய்விட்டதாகச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதுதான் சொத்துக்கள் நம் கையை விட்டுப் போகாமல் இருக்கும்.

டாக்டர் யோசித்தார். அவருக்கும் அந்த யோசனை பலனுள்ளதாய்த் தோன்றியது. திருமலைசாமியைப் பார்த்து, "நீ சொல்லுகிறபடியே செய்வோம். ஆனால்,ஒரு விஷயம். என் பணத்தை உடனுக்குடன் முன்னதாகவே கொடுத்துவிட வேண்டும். என் பணத்திற்கு நான் போய்த் தொங்கிக்கொண்டிருக்க முடியாது" என்று கூறினார்.

திருமலைசாமி :—இது என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள் டாக்டர் ? இந்தக் கைகளினாலேயே உங்களுக்கு இதுவரை பதினாயிரக்கணக்காய்க் கொடுத்திருக்கிறேனே! இப்பொழுது ஏற்பட்டிருக்கிற கஷ்ட காலத்தில் நீங்கள் உதவி செய்வது கடமையல்லவா ?

டாக்டர் :—கடமை கிடமை எல்லாம் கிடக்கட்டும். உங்கள் குடும்பத்திற்கு ஏற்பட்டிருக்கிற கஷ்டங்களைப் பார்த்து உண்மையிலேயே நான் ரொம்ப வருத்தப்படுகிறேன். என்னைப் போல உண்மையாக வருத்தப்படுகிறவர்கள் இந்த ஊரில் வேறு யாருமே இருக்கமுடியாது. இருந்தாலும் பீஸ் இல்லாமல் நான் எதுவும் செய்வதில்லை. அது என்னுடைய உறுதியான கொள்கை.

டாக்டரின் பேச்சைக் கேட்ட திருமலைசாமிக்கு உலகமே நன்றிகெட்டுப் போனதாய்த் தோன்றிற்று. டாக்டரிடம் கோபித்துக்கொள்ள அது சரியான சமயமில்லை என்று நினைத்து, டாக்டர் சொல்லுகிறபடியே

செய்வதாக ஒப்புக்கொண்டார். டாக்டரும் திருமலைசாமியும் நாச்சியாரம்மாளின் வீட்டுக்குப் புறப்பட்டார்கள்.

பாம்பைக் கண்டு பயந்தோடிய தேங்காய்க் கடை நடேசன் குதிகால் பிடரியில் படும்படி இன்னமும் ஓடிக் கொண்டே இருந்தான். திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்த " பேராசை பெரும் நஷ்டம் ", என்ற வாக்கியம் அவன் மன ஓட்டத்தின் வேகத்திற்குமேல் வேகமாக சுழன்று கொண்டிருந்தது. எதிரே வந்த வட்டிக்காரக் கந்தசாமி நடேசனைப் பிடித்து நிறுத்தி, " என்னப்பா உனக்கு அதிருஷ்டம் வந்துவிட்டதென்றால் இப்படித் தானா ஓடுகிறது?" என்று கேட்டான். நடேசனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது

கந்தசாமி :—நீதான் பெரிய பணக்காரனாய் விட்டாயே, ஏன் இப்படி ஓடுகிறாய் ?

நடேசன் :—பணக்காரனா ? ஐயோ எனக்கு வேண்டாம். பேராசை பெரு நஷ்டம். எனக்குத் தற்சமயம் இருப்பதே போதும். எனக்குப் பிறர் சொத்து வேண்டாம்.

கந்தசாமி :—பிறர் சொத்தா ? நீ தாயாதிக்காரன் தானே. எப்படி அன்னியனாய் விடுவாய்? அதெல்லாம் இருக்கட்டுமப்பா, எனக்கு ஒரு வாக்குறுதி கொடு. அந்த நாச்சியாரம்மாள் கைமாற்றாக ஐயாயிரம் ரூபாய் என்னிடம் வாங்கினார்கள். அதற்கு எழுத்து குத்து ஒன்றுமே கிடையாது. திடீரென்று அந்த அம்மாளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாம். நான் என்ன செய்வேன் ? சொல்லு. நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும். ரூபாய்க்கு மாதம் இரண்டணா வட்டி கிடைக்கிறதே என்று ஆசைப்பட்டு கொடுத்தேன். இப்போ தெருவில் நிற்கிறேன். நீதான் காப்பாற்ற வேண்டும்.

நடேசன் :—எனக்கு அதெல்லாம் ஒன்றும் தெரியாது. அந்தச் சொத்தே எனக்கு வேண்டாம்.

கந்தசாமி :—அப்படி நீ சொல்லக்கூடாது. வட்டியில் வேண்டுமானாலும் அரையணா குறைத்துச் கொள்ளப்பா. ரூபாய்க்கு ஒன்றரையணா போதும்.

நடேசன் :—என்னை விடப்பா. நான் போகிறேன். எனக்கு ஒருவர் சொத்தும் வேண்டாம்.

கந்தசாமி :—அப்படிச் சொல்லாதே யப்பா. வட்டியை ஒரு அணுவாக வேண்டுமானாலும் போட்டுக் கொள்கிறேன்.

நடேசன் :—என்னை விடு என்று சொன்னால் விட மாட்டேன் என்கிறாய். அந்தச் சொத்து வேண்டாம் என்று சொன்னாலும் அதைப்பற்றியே பேசிக் கொண்டிருக்கிறாய். ஏன், என்னைப் பாம்பு கடிக்கச் சொல்லு கிறாயா ?

கந்தசாமி :—பாம்பா ?

நடேசன் :—ஆமாம். என்னை விரட்டிக் கொண்டு வந்தது. நான் ஓடி வந்துவிட்டேன். என்னை விடு, என்னை விடு.

கந்தசாமி :—என்னப்பா பாம்பா ? எங்கே ?

இச்சமயம் ஒரு காய்ந்த வாழைச் சருகு காற்றடித்து அங்கே வந்து விழுந்தது. அதைக் கண்டு பதறிய நடேசன், "இதோ பாம்பு, இதோ பாம்பு" என்று கதறிக் கொண்டே அவன் பிடியிலிருந்து திமிறி அங்கிருந்து ஓடினான்.

டாக்டரைச் சந்தோஷத்தோடு நாச்சியாரம்மாள் வரவேற்றாள். கலியாண வீடுகளில் நடமாடுகிற மாதிரி அவ்வளவு சந்தோஷமாய் நாச்சியாரம்மாள் காணப் பட்டாள். மகன் வழக்கில் தீர்ப்புச் சொல்லுவதற்கு இன்னம் நான்கு நாட்கள் இருக்கின்றன. ஆவலோடும் பதட்டத்தோடும் இருக்க வேண்டிய சமயத்தில் சந்தோ ஷத்தோடு சாவதானமாய் நடமாடுவதைப் பார்த்ததும் டாக்டர் உதட்டைப் பிதுக்கிக்கொண்டு மெதுவாய்த் தலையை ஆட்டினார். டாக்டருக்குக் காப்பியும், சர்க்கரைப் பொங்கல் பிரசாதமும் கொண்டுவந்து கொடுக்கச் சொல்லிவிட்டு நாச்சியாரம்மாள் உள்ளே போனாள். அச் சமயம் திருமலைசாமியைப் பார்த்து, "சந்தேகமில்லை." என்று மெதுவாய் டாக்டர் சொன்னார். சர்க்கரைப்

பொங்கலையும் காப்பியையும் வேலைக்காரி கொண்டு வந்து டாக்டர் முன்பு வைத்தாள்.

வேலைக்காரியைப் பார்த்து டாக்டர், " அம்மா எப்படி இருக்கிறார்கள் ?" என்று கேட்டார். கேள்வியின் அர்த்தத்தை வேலைக்காரி புரிந்து கொண்டாள். " ஏன், எப்பொழுதும் போலத்தான் இருக்கிறார்கள். அம்மாவுக்கு இருக்கிற தெய்வபக்தி யாருக்கும் கிடையாது. அதனால் தான் நேற்றுவரை அதைரியமாய் இருந்தவர்கள் இன்று தைரியமாய் இருக்கிறார்கள். இதை அறியாதவர்கள் ஏதேதோ பேசி வருகிறார்கள். பேசட்டுமே ! பேசுகிறவர்கள்தான் ஏமாறப் போகிறார்கள் " என்று வேலைக்காரி பதில் சொன்னாள். இந்தப் பதில் டாக்டரை அசைக்கவில்லை. அவள் படிப்பில்லாத ஒரு ஜென்மம் என்று நினைத்தார். தெய்வ பக்தியாவது, தைரியமாவது என்று முணுமுணுத்துக் கொண்டார். இதற்குள் நாச்சியாரம்மாள் வெளியே வந்து டாக்டரிடம் ஐநூறு ரூபாயைக் கொடுத்தாள்.

டாக்டர் :—இதற்கு இப்பொழுது என்ன அவசரம் ?

நாச்சி :—கொடுக்க வேண்டிய பாக்கியைக் கொடுத்தால்தானே தீரும். நேற்றுவரை மனசே சரியாய் இல்லை. அதனால் ஞாபகமில்லாமல் போயிற்று. இன்று தான் மனம் சாந்தியடைந்தது.

டாக்டர் நாச்சியாரம்மாளின் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் நேருக்கு நேராகப் பார்க்க முடியவில்லை. " தீர்ப்பைப்பற்றிச் சென்னையிலிருந்து ஏதாவது தகவல் வந்திருக்கிறதோ ? நீங்கள் சொல்லுவது எனக்குப் புரியவில்லையே !" என்றார் டாக்டர்.

நாச்சி :—தீர்ப்பைப் பற்றிய தகவலா ? வந்திருக்கிறது. இல்லையானால் நான் இப்படிச் சந்தோஷமாய் இருப்பேனா ?

டாக்டர் :—அதெப்படித் தகவல் கிடைத்ததம்மா ? தீர்ப்பே இன்னம் கூறவில்லையே !

நாச்சி :—கடவுள் தீர்ப்பு முடிந்துவிட்டதே. அவரை மீறியா இந்த நீதிபதிகள் தீர்ப்புக் கூறிவிட முடியும் ?

டாக்டர் யோசித்தார். பைத்தியத்தின் சின்னம் நிச்சயமாய் இருப்பதாய் நினைத்தார். கடவுளாவது, தீர்ப்பாவது ?

நாச்சி :—என்ன யோசிக்கிறீர்கள் டாக்டர் ? நான் பேசுவது ஒரு மாதிரியா யிருக்கிறதே என்று பார்க்கிறீர் களா ?

டாக்டர் :—அப்படி யெல்லாம் ஒன்றும் இல்லையம்மா, எனக்கு ஒன்றும் புரியவில்லை.

நாச்சி :—விஷயம் இதுதான். கடவுள் தீர்ப்புக் கூறி விட்டார்.

டாக்டர் :—கோபித்துக் கொள்ளக்கூடாது அம்மா. கடவுள் செய்கிறது நமக்கு எப்படித் தெரிய முடியும் ?

நாச்சியார் :—நம்பிக்கை இருந்தால், நமக்குப் பக்கு வம் ஏற்பட்டிருந்தால் தெரிய முடியும்.

டாக்டர் :—எனக்கென்னவோ, அவை யெல்லாம் பிரமையென்றே தோன்றுகிறது. ஒரு விஷயத்தைத் தீவிர மாய்ச் சிந்திக்கும்போது நாம் பார்க்கும் இடமெல்லாம் அதாகவே தோன்றுகிறது. அதை எப்படிக் கடவுளின் செய்கை என்று கூற முடியும் ? நீங்கள் ஒரு மாதம் குற்ருலத்தில் போய் இருந்தால் உங்கள் மனதில் ஏற்பட் டுள்ள கஷ்டங்கள் எல்லாம் போய்விடும் என்று நினைக் கிறேன்.

நாச்சியார் :—அடுத்த வருஷம் குற்ருலம் போவ தென்று நான்தான் முடிவு செய்திருக்கிறேனே ! என் மகன் பரந்தாமன் வந்ததும் அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்து ஒரு மாதம் எல்லோருமாகக் குற்ருலம் போயிருப்பதாக முடிவு செய்திருக்கிறேன்.

டாக்டர் யோசித்தார். ஒரு வருஷத்தில் பரந்தாம னுவது வெளியில் வருவதாவது, இதென்ன ஆசை ? நிச்சயம் இது பிரமைதான். சந்தேகமே இல்லை என்று நினைத்தார்.

டாக்டர் :—ஒரு வருஷத்திற்குள் பரந்தாமன் எப்படி அம்மா வெளியில் வர முடியும் ?

நாச்சியார் :—அதுதான் சொன்னேனே, அவனுக்கு ஒரு வருஷந்தான் தண்டனை கொடுக்கப் போகிறார்கள்.

திருமலைசாமி :—ஒரு வருஷமா ?

டாக்டர் :—அவர் மேல் உள்ள குற்றச்சாட்டுகளின் கடுமை என்ன என்று யோசித்தால், ஒரு வருஷம் கொடுத்தால் விடுதலைசெய்கிற மாதிரிதானே ?

நாச்சியார் :—அதெல்லாம் எனக்குத் தெரியாது. தண்டனை ஒரு வருஷம்தான் என்று கடவுள் தீர்ப்புக் கூறிவிட்டார். அந்தப்படிதான் நடக்கப் போகிறது.

டாக்டர் :—கடவுள் மனிதரிடம் வந்து பேசுவதென்றால் அப்புறம் வேறென்ன வேண்டியிருக்கிறது ? உலகத்தையே ஆட்டி வைத்து விடலாமே ?

நாச்சியார் :—அம்மாதிரி ஆசை யுள்ளவர்களிடம் கடவுள் எதற்காக வந்து பேசப் போகிறார் ? தன்னை மறந்து அவரிடம் ஐக்கியப்படுபவர்களிடம்தான் அவர் பேசுவார். என்னுடைய துக்கத்தை அவரிடம் எடுத்துச் சொல்லி என் மகனுக்கு என்ன தண்டனை கிடைக்கும் என்று கேட்டேன். ஒரு வருஷம் என்று சொன்னார். அப்புறம்தான் என் மனம் சமாதானம் அடைந்தது. ஆளையே இந்த ஜன்மத்தில் பார்க்கப் போகிறேமா என்று கலங்கிய எனக்கு அதைக் கேட்டதும் உள்ளம் குளிர்ந்தது.

டாக்டரின் மூளை குழம்பியது. மருந்துகளினால் வியாதிகளையும் ரூபா அணா பைசாவினால் குடும்பப் பொருளாதாரத்தையும் சமாளித்து வந்த டாக்டருக்கு இது புரியாத பிரச்னையாகத் தோன்றியது.

கோவில் பூசாரி வந்திருப்பதாக இச்சமயம் வேலைக்காரி வந்து சொன்னாள்.

நாச்சியார் :—அப்படியா, ரொம்ப சந்தோஷம். இங்கே அழைத்து வா.

பூசாரி வந்து எல்லோருக்கும் விபூதிப் பிரசாதம் கொடுத்துவிட்டு அமர்ந்தார். ஊரில் உள்ள வதந்திகள் பூசாரிக்கும் தெரியும். அதற்காக அவர் வராமல் இருக்க வில்லை. பெரிய வீட்டுக்காரர் கூப்பிட்டனுப்பினால் போக வேண்டியதுதானே என்று வந்தார். பைத்தியமா யிருந்தால் என்ன, தெளிவாய் இருந்தால் என்ன, வரும்படி வந்தால் சரிதான் என்பதுதான் பூசாரியின் நினைப்பு.

நாச்சியார் :—தீர்ப்பு தினத்தன்று சுவாமிக்கும் அம்மனுக்கும் அபிஷேகம் ஆராதனைகள் செய்ய வேண் டும். அதற்காகத்தான் உங்களைக் கூப்பிட்டனுப்பினேன். வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். அவற்றிற்கான பணத்தை அண்ணாவிடம் வாங்கிக் கொள்ளுங்கள்.

பூசாரி :—தீர்ப்பு தினத்திலா ?

திருமலைசாமி :—மறுநாள் வைத்துக்கொள்வோமே ?

டாக்டர் :—அப்படிச் செய்வதுதான் நல்லது.

நாச்சியார் :—ஏன் இப்படிச் சந்தேகப்படுகிறீர்கள்? கடவுள் கிருபையால் நான் சொல்கிறபடிதான் எல்லாம் நடக்கும். தடை செய்யாதீர்கள்.

தூக்குத் தண்டனை தீர்ப்பாகிற தினத்தில் அபிஷேக மாவது ஆராதனையாவது, எல்லாம் பைத்தியமாய் இருக் கிறதே என்று பூசாரி நினைத்தார்.

பூசாரி :—தீர்ப்பு தினத்தில் செய்வது அவ்வளவு —

டாக்டர் :—அதிருக்கட்டும். அம்மா, உங்கள் இஷ்டப் படியே செய்வோம். ஒரு வருஷம்தான் தண்டனை என்று சொன்னீர்களே, உங்களுக்கு எப்படித் தெரிந்தது சொல் லுங்கள்.

நாச்சியார் :--நான் சொப்பனம் கண்டேன்.

டாக்டர் :--சொப்பனத்தை நம்பி யாராவது நடக்க முடியுமா அம்மா ?

நாச்சியார் :—என் விஷயத்தில் சொப்பனம்தான் இதுவரை எனக்கு வழிகாட்டியாய் இருந்து வந்திருக்

கிறது. மனதிற்கு ரொம்ப கஷ்டம் ஏற்படுகிற போதெல்லாம் பகவானைப் பிரார்த்தித்துவிட்டுப் படுப்பேன். அன்றிரவு சொப்பனத்தில் எனக்குப் பதில் கிடைக்கும். இதுவரை அந்தச் சொப்பனங்கள் பலித்தே வந்திருக்கின்றன.

டாக்டர் :—உங்கள் நம்பிக்கையை நாங்கள் குலைப்பதாக நினைக்க வேண்டாம். இவற்றிலெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது. ஒன்று செய்யுங்கள். நாளைக்கு எனக்கு எவ்வளவு பணம் கிடைக்கும் என்று சொல்லுங்கள். அது உண்மையாய் விட்டால் நீங்கள் சொல்வதை நான் நம்புகிறேன்.

நாச்சியார் :—டாக்டர்வாள், நீங்கள் நம்புவதோ நம்பாததோ இப்பொழுது பேச்சில்லை. நான் நம்புகிறேன். எனக்கு இதுவரை அந்த நம்பிக்கை சரியாய் வந்திருக்கிறது. மேலும், கடவுள் என்ன நம்ம வீட்டு வேலைக்காரனா? நாம் சொல்கிறபடி வேலைக்காரனை கேட்பதில்லை. அப்படியிருக்க நம்முடைய கேள்விகளுக்கு எல்லாம் பதில் சொல்ல வேண்டுமென்று கூட கடவுளைக் கட்டாயப்படுத்த நாம் யார்?

அதற்குமேல் டாக்டருக்குப் பேச வேண்டிய விஷயம் இல்லை. 'போய் வருகிறேன்' என்று சொல்லி விடை பெற்றார். அவருடனேயே திருமலைசாமியும் வெளியே போனான். டாக்டரைப் பார்த்து, "என்ன நினைக்கிறீர்கள் டாக்டர்?" என்று கேட்டான்.

டாக்டர் :—என்னத்தையப்பா சொல்லுகிறது? பூரா பைத்தியமாகவும் இல்லை. பைத்தியம் இல்லாமலும் இல்லை. இதைத்தான் அரைப் பைத்தியம் என்று சொல்லுவது. இந்த நிலைமையில் நீ நினைக்கிறபடி வாரிசுக்காரன் வந்து சொத்துக்களைப் பிடுங்குவது என்பது நடக்காது. ஆனால், இந்த அரைப் பைத்தியம் தீர்ப்பைக் கேட்ட பின்பு முழுப் பைத்தியம் ஆனாலும் ஆகலாம். அப்பொழுதுதான் ஆபத்து இருக்கிறது. இப்போ நாம் செய்வதற்கு ஒன்றுமில்லை. தீர்ப்பு தினம் கழிகிறவரையில் பொறுத்திருப்போம்.

தீர்ப்பு தினம் வந்தது. காலையில் எழுந்து ஸ்நானம் செய்து பூஜைகளை முடித்துவிட்டுத் தந்தியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் நாச்சியாரம்மாள். அந்தக் காலத்தில் ரேடியோ கிடையாது. வழக்குப் பிரபலமான வழக்காய் இருந்தாலும் சென்னையிலிருந்து பத்திரிகைகள் வந்த பின்புதான் விவரங்களைத் தெரிந்துகொள்ள முடியும். ஆகவே, சம்பந்தப்பட்டவர்களின் குடும்பங்களுக்கு வருகிற தந்திகளைக் கொண்டுதான் அந்த ஊர்க்காரர்கள் தீர்ப்பைப்பற்றி அறிந்துகொள்ள முடியும். பகல் பூராவாக நாச்சியாரம்மாளுக்குத் தந்தி வரவில்லை. மாலையில் அபிஷேக ஆராதனைகளுக்கான காரியங்களைப் பூசாரி செய்து வந்தார். ஆராதனை முடியு முன்பு தந்தி வராமல் இருக்கவேண்டுமே என்று பூசாரி பிரார்த்தித்துக் கொண்டான்.

இரவு ஏழு மணிக்குச் சென்னை வக்கீலிடமிருந்து தந்தி வந்தது. பரந்தாமனுக்கு ஒரு வருஷ தண்டனை என்று தந்தியில் கண்டிருந்தது. தந்தியிலுள்ள விஷயத்தைக் கேட்டவுடன் நாச்சியாரம்மாள் பூஜை அறைக்குள் போய் தெய்வத்தின் முன்பு கீழே விழுந்து நமஸ்காரம் செய்தவள், அரை மணி வரை எழுந்திருக்கவில்லை. ஊராருக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. கோவில் பூஜைகள் பிரமாதமாய் நடந்தன.

மறுநாள் காலை சென்னையிலிருந்து பத்திரிகைகள் வந்தன. தீர்ப்பைப்பற்றி பூரா விவரங்களும் பிரசுரமாகியிருந்தன. கொலைக் குற்றத்தைப் பொறுத்தவரையில் எதிரிகள்மீது குற்றம் ருஜுவாகவில்லையென்று தள்ளிவிட்டார்கள். சதியாலோசனை வழக்கைப் பொறுத்தவரையில் நீதிபதிகளுக்குள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டுவிட்டது. மைனரிட்டியான இந்திய நீதிபதிகள் எல்லாரையும் விடுதலைசெய்ய வேண்டுமென்று தீர்ப்புக் கூறினார்கள். மெஜாரிட்டியான வெள்ளைக்கார ஜட்ஜுகள் தண்டனை கொடுத்தார்கள். அதன்படி பரந்தாமனுக்கு ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. வழக்கு இம்மாதிரி மாறும் என்று யாரும் எதிர்பார்க்க

வில்லை. அதனுல்தான் நாச்சியாரம்மாளின் சொப்ப னத்தை யாரும் லட்சியம் செய்யவில்லை.

டாக்டர் இன்னமும் அந்தச் சொப்பனப் பேச்சை நம்பவில்லை. ஏதோ தற்செயலாக நடந்ததென்றும், சொப்பனங்களை நம்புவது மூட நம்பிக்கை என்றும், இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிருர். நாச்சியாரம்மா ளுக்கு ஏற்பட்டிருந்த வியாதி, பிரமை என்ற அரைப் பைத்தியந்தான் என்று தீர்மானமாய்ச் சொல்லுகிருர். ஒரு வருஷ தண்டனை தற்செயலாய்க் கிடைத்ததால் அந்த அரைப் பைத்தியம் தீர்ந்துவிட்டதென்றும், அதிக தண்டனை கிடைத்திருந்தால் முழுப் பைத்தியமாயிருப் பது நிச்சயம் என்றும் கூறுகிருர்.

# சிக்கனப் பேச்சு

நடனசுந்தரம் கோப்பையிலிருந்த காபியில் பாதியைக் குடித்துவிட்டுக் கோப்பையை எதிரில் இருந்த மேஜையில் வைத்தார். கையில் இருந்த பத்திரிகையையும் அவரால் படிக்க முடியவில்லை. பத்திரிகையைக் கையில் பிடித்தவாறே அப்படியே நாற்காலியில் சாய்ந்து ஆழ்ந்த யோசனையில், இறங்கிவிட்டார். சிறிது நேரம் கழித்து அங்கே வந்த அவர் மனைவி செந்தாமரை, "இதென்ன காபிகூடக் குடிக்காமல் யோசனை? அடடா, காபி ஆறிப் போய்விட்டதே. இந்தக் காபி சூடாய் இருக்கிறது, இதைக் குடியுங்கள்" என்று தனக்காகக் கொண்டு வந்திருந்ததை நீட்டினாள்.

நடனசுந்தரம் :—ஊஹூம், எனக்கு வேண்டாம். போதும்.

செந்தாமரை :—ஹே, இதென்ன இது, காலையிலே காபி குடிக்காம இவ்வளவு பெரிய யோசனை ?

செந்தாமரையின் முகம் சந்தோஷத்தில் திளைத்திருந்தது. நடனசுந்தரத்தின் முகம் கவலையால் மூடி இருந்தது. நடனசுந்தரம் பதில் சொல்லாததைப் பார்த்து, "ஓஹோ, இப்போ புரிந்தது விஷயம். உங்கள் நண்பர் பாசுபதம் திவாலாகிவிட்டாரே, அதைக் கண்டு உங்களுக்கு அத்தனை கவலை ஏற்பட்டுவிட்டது" என்றாள்.

நடனசுந்தரம் :—இருக்காதா ?

செந்தாமரை:—இருக்காதாவா? நீங்களா பேசுகிறீர்கள்? பாசுபதத்தைப் போல அவ்வளவு டம்பமாய் வாழ்ந்தால் திவால் ஆகாமல் வேறு என்ன நடக்கும்?

நடன :—அவர் டம்பக்காரர் அல்லவே ?

செந் :—டம்பக்காரர் இல்லையா? இல்லாமலா இரண்டு மோட்டார் வைத்திருந்தார்? மாதம் நாலாயிரம்

ரூபாய் அவர் வீட்டிற்குச் செலவாகி வந்ததாமே? நம்ம வீட்டில் இருநூறு ரூபாய்கூட மாதச் செலவு கிடையாது.

நடன:—நீ இப்படிப் பேசக்கூடாது செந்தாமரை. எது எப்படி இருந்தாலும் நன்றி என்பதை மறக்கக் கூடாது. உன் தம்பிக்கு வேலே வாங்கிக் கொடுத்தவர் அவர்தானே?

செந் :—மகாப் பெரிய வேலே வாங்கிக் கொடுத்து விட்டார். இருநூறு ரூபாய் வேலேயை வாங்கிக்கொடுக்கச் சொன்னுல், நூறு ரூபாய் வேலேயை வாங்கிக் கொடுத்து ஏமாற்றிவிட்டார். இதிலே நன்றி வேறேயாம் நன்றி.

நடன:—ஐம்பது ரூபாய் வேலேகூடக் கிடைக்காமல் திண்டாடியவன்தானே, உன் தம்பி. நூறு ரூபாய் வேலே கிடைத்ததற்கு நன்றியாய் இருக்க வேண்டாமா ?

செந் :—இப்படி நீங்கள் பேசும்போதுதான் கம்யூனிஸ்டுகள் சொல்வது ரொம்பச் சரியென்று நினேக்க வேண்டி இருக்கிறது. இந்த நன்றி என்ற வார்த்தையே பணக்கார கோஷ்டி உண்டு பண்ணியதென்று அவர்கள் சொல்கிருர்கள். தங்களுடைய ஆதிக்கத்தில் சிலரை வைத்திருப்பதற்காக நன்றி என்ற வார்த்தையை உற்பத்தி செய்தார்களாம்.

நடன :—நன்ருய் இருக்கிறதே உன் வாதம் !

செந் :—இல்லேயா? ராமராஜ்யத்திலே பிச்சை கொடுப்பாரே இல்லே என்று கம்பர் சொல்லுகிருராம். எதற்காகத் தெரியுமா? பிச்சை கேட்பவரே அங்குக் கிடையாதாம். கேட்பவர்கள் இருந்தால் அல்லவா, கொடுப்பதற்கு ஆட்கள் வேண்டும். கேட்பவர்களும் கொடுப்பவர்களும் தோன்றினுல்தானே நன்றி என்ற வார்த்தைக்கும் அவசியம் ஏற்படும்? இல்லே என்ற பேச்சே இல்லாமல் காரியங்கள் நடந்தால் அப்புறம் நன்றிக்கு இடம் ஏது ?

நடன:—அம்மாதிரி நடந்தால்தானே! நடக்காத வரையில் நன்றி இருந்துதானே தீரும்.

இச் சமயத்தில் வாசலிலே ஒரு ஆள் வந்து ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனான். நடனசுந்தரம் கடிதத்தை உடைத்துப் பார்த்துவிட்டு, "அந்த ஆளைக் கூப்பிடு" என்று செந்தாமரையைப் பார்த்துச் சொன்னார். செந்தாமரை இருந்த இடத்தைவிட்டு அசையாமல், 'அது என்ன விஷயம்? சொல்லுங்களேன்' என்று சொல்லிவிட்டு, நடனசுந்தரத்தின் கையிலிருந்த கடிதத்தைப் பிடுங்கிப் படிக்க ஆரம்பித்தாள்.

செந்தாமரை அந்த ஆளைக் கூப்பிடப் போவதில்லை என்பதை அறிந்த நடனசுந்தரம் தாமே எழுந்து வாசலுக்குப் போனார். தெருவில் பார்த்தார். அந்த ஆளைக் காணவில்லை. விசனத்தோடு திரும்பி வந்து ஆசனத்தில் அமர்ந்தார். செந்தாமரை கடிதத்தைப் படித்துவிட்டு, மேஜைமீது வைத்தாள். "பாசுபதம் கேட்டபடி பத்து ரூபாய் கொடுக்கத்தானா அந்த ஆளைத் தேடினீர்கள்?" என்று கேட்டாள்.

நடனசுந்தரம் 'ஆம்' என்று தலையை ஆட்டினார்.

"நன்றாயிருக்கிறது உங்கள் பேச்சு. இங்கே வீட்டுச் செலவுக்கு ரூபாயைக் காணவில்லையாம். இதிலே இருக்கிறதைக் கடன் கொடுக்கப் போகிறார்களாம்" என்றாள் செந்தாமரை.

நடனசுந்தரம்:—பாசுபதத்திற்கு இன்று ரேஷன் வாங்கப் பணமில்லை, பத்து மணிக்குள் பத்து ரூபாய் வேண்டும் என்கிறார். நமக்கு அதைவிட அவசரச் செலவு என்ன இருக்கிறது?

செந்தாமரை :—செலவு இருக்கிறதா? இன்று கோழி புலவு செய்ய வேண்டும் என்று பேசிக்கொள்ளவில்லையா? அதற்கே பதினைந்து ரூபாய் ஆகுமே.

நடன:—கோழி புலவுக்கு இன்று என்ன அவசரம்? இன்று இல்லாவிட்டால் இன்னொரு நாள் செய்துகொள்ளலாமே! என்னிடம் இருப்பதே பதினைந்து ரூபாய்தான். அதில் பத்து ரூபாயைப் பாசுபதத்திற்குக் கொடுத்து அனுப்புவோம்.

செந் :—நீங்கள் என்ன செய்வீர்களோ என்க்குத் தெரியாது. இன்று எனக்குப் பதினைந்து ரூபாய் கொடுத்தாக வேண்டும். இன்றுதான் கோழிப் புலவு செய்தாக வேண்டும். யார் வீட்டில் ரேஷன் வாங்கினு லும் சரி, வாங்காவிட்டாலும் சரி.

நடன :—அப்படிச் சொல்லாதே செந்தாமரை. எவ் வளவு செல்வத்தோடு இருந்தவர்! ரேஷன் வாங்குவதற் குப் பணமில்லை என்ருல் அதற்கு நாம் உதவி செய்ய வேண்டாமா?

செந்:—ரேஷன் வாங்குவதற்குப் பணமில்லாதவர் அவர் ஒருவர்தானு? இன்னும் எத்தனையோ கோடிக் கணக்கான பேர் இருக்கிருர்களே! அவர்களுக்கெல்லாம் பணம் கொடுப்பதற்கு இங்கு பணம் என்ன கொட்டியா கிடக்கிறது?

நடனசுந்தரத்திற்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அவரால் பதில்பேச முடியவில்லை. பாசுபதத் தின் துயரமான முகம் அவருடைய மனக்' கண்முன் தோன்றவே, அவருடய துக்கம் இன்னும் அதிகமாயிற்று. பாசுபதத்தின் கஷ்டத்தைப் பார்த்துத் தம் மனைவி சந் தோஷப்படுவதில் அவர் எரிச்சல் கொண்டார். இதற் குள் அவருடைய மேஜையைத் திறந்து அதில் உள்ள பதினைந்து ரூபாயைச் செந்தாமரை முதலில் கைப்பற்றி ஞள். அப்புறம் அங்கிருந்த டெலிபோனை எடுத்து ஒரு லக்கத்தைத் திருப்பி "ஹலோ" என்ருள். அங்கிருந்து பதில் வந்ததும் இவள் பேச ஆரம்பித்தாள்.

செந்:—யாரு கல்யாணி அக்காளா ? நான் செந் தாமரை பேசகிறேன்.

கல் :—ஓஹோ! செந்தாமரையா?என்னம்மா, சௌக் கியமா ?

செந் :—ஆஹா சௌக்கியம். இன்று இரவு நீங்கள் சாப்பிட வரவேண்டும். நான் கோழிப் புலவு செய்யப் போகிறேன்.

கல் :—பலே பலே. உன் தம்பியின் வேலை விஷயமாக என் தம்பி தினகரனிடம் சொல்லிவிட்டேன் அம்மா. ஒரு வாரத்தில் முடித்துவிடுவதாகச் சொல்லியிருக்கிருன். திருப்திதானே ?

செந் :—ரொம்ப சந்தோஷம். நீங்கள் கட்டாயம் வரவேண்டும்.

கல் :—உனக்கு இந்த விஷயம் நேற்றே தெரியும் என்று தினகரன் சொன்னுனே ! நீ ஒன்றும் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லையே. ஓஹோ, அதற்காகத் தான் கோழிப் புலவு விருந்தோ?

செந் :—எத்தனை மணிக்கு வருவீர்கள் ?

கல் :—என்ன நான் சொல்லுவதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லையே ?

செந் :—உங்கள் தம்பிக்காக நீங்கள் தனியாகச் சமையல் செய்ய வேண்டாம். அவர்களையும் கூட்டிவந்து விடுங்கள்.

கல்:—நான் ஒன்று கேட்டால் நீ ஒன்று பேசுகிருயே ?

செந்:—இங்கே வீட்டில்தான் இருக்கிருர்கள். இப்போ பக்கத்திலேயே இருக்கிருர்கள்.

கல்:—யாரு என் தம்பியா ? அவன் அங்கே எங்கே வந்தான்.

செந் :— ஆபீஸுக்குப் பத்தரை மணிக்குத்தானே போவார்கள்.

கல்:—அதற்காக உன் வீட்டில் என்ன வேலை ?

செந்தாமரைக்குத் தர்மசங்கடமாய் விட்டது. நடன சுந்தரம் பக்கத்திலேயே இருந்தபடியால் விளக்கமாய்ப் பேச முடியவில்லை. கல்யாணியோ விடுவதாயில்லை. ஆகவே, வேறு வழியில் பேச்சைத் திருப்ப நினைத்தாள்.

செந் :—பாசுபதத்தைச் சாப்பிடக் கூப்பிடவில்லை.

கல்:—அதை யார் உன்னிடம் கேட்டது? தினகரன் இப்போ ஏன் அங்கே வந்திருக்கிருன் என்று கேட்டால்

அதற்குப் பதில் சொல்லவில்லை. உன் கணவர் அங்கே இல்லையா ?

செந் :—பக்கத்தில் இருக்கிறார் என்று எத்தனை தடவை உங்களுக்குச் சொல்லுவது ?

கல் :—ஓஹோ, அவரைத்தான் சொன்னாயா ?

செந் :—ஆமாம். ஆமாம்.

கல்:—அப்போ என் தம்பி அங்கே இல்லையா?

செந் :—இல்லை.

கல்:—அப்பாடி !

செந்தாமரைக்கு இதைக் கேட்டதும் ரொம்ப கோபம் வந்தது. டெலிபோனை அப்படியே கல்யாணி மண்டையில் போடலாமா என்று தோன்றியது. முதலில் கல்யாணி தனக்கு முன்னால் இல்லை; எங்கேயோ இருக்கிறாள். அதனால் டெலிபோனைப் போட முடியாது. இரண்டாவதாகத் தன் தம்பிக்கு நல்ல வேலையாக ஒரு வேலை வேண்டும். அதற்காகத்தான் கோழிப் புலவு விருந்தே வைக்கிறாள். இச்சமயம் கோபப்பட்டால் காரியம் கெட்டு விடும் என்று நினைத்தாள். அதனால் கல்யாணியின் பேச்சால் ஏற்பட்ட எரிச்சல்களைத் தாங்கிக் கொண்டாள்.

தன் தம்பிக்கு வேலை வாங்கிக் கொடுப்பதாகத் தினகரன் வாக்குறுதி கொடுத்ததற்காகத்தான் செந்தாமரை கோழிப் புலவு விருந்துக்கு ஏற்பாடு செய்தாள். இந்த விஷயம் நடனசுந்தரத்திற்குத் தெரியக் கூடாது என்று நினைத்தாள். அதனால் டெலிபோனில் தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டு தவித்தாள். தன் தம்பிக்கு இரு நூறு ரூபாய் சம்பளத்தில் வேலை வாங்கிக் கொடுக்க வில்லை என்ற வருத்தம் பாசுபதத்தின் மீது அவளுக்கு ஏற்கெனவே உண்டு. ஆனால், அந்த வருத்தம் இலை மறைவு காய் மறைவாய் இருந்ததே ஒழிய, தீவிரமாக இல்லை. தீவிரமாக இல்லாத அந்த வருத்தம் பாசுபதம் திவால் ஆகி விட்டார் என்பதைக் கேட்டதும், ஆயிரம்

மடங்காகப் பெருகியது. கஷ்டத்தில் யாராவது அகப்பட்டுக் கொண்டால் இல்லாத கோபத்தை எல்லாம் அவர்மீது காட்டுவது மனித இயல்பு. செந்தாமரை அந்த மனித இயல்பை மீறி நடக்கவில்லை. நடனசுந்தரம் வேறு ரகம். ஆகவே, பாசுபதத்திற்கு ஏற்பட்டிருக்கும் வீழ்ச்சியை நினைத்து நினைத்து உருகினர். காலையில் பத்து மணியாயிற்று.

“ அடடா, ரேஷன் அரிசி வாங்கப் பணமில்லாமல் பாசுபதம் எப்படிக் கஷ்டப்படுவாரோ ” என்று நினைத்துப் பாசுபதத்தின் சோர்வான முகத்தை மனக் கண்ணல் யூகித்துப் பெருமூச்சு விட்டார். பசிக்குச் சாப்பாடு இல்லாமல் அவர் குழந்தைகள் வாடினல் எப்படி இருக்கும் என்று யூகித்து அதற்காக ஒரு பெருமூச்சுவிட்டார். இப்படியே நாலு நாட்கள் பட்டினி கிடந்தால் என்னவாகு மென்பதை மனத்தில் சித்தரித்தார்.

உடனே ஒரு பெரிய பெருமூச்சு வந்தது. இம்மாதிரி பெருமூச்சுத்தான் நடனசுந்தரத்திற்கு உள்ளத்திற்கு ஊக்கத்தைக் கொடுக்கும் அமிர்தமாய் விளங்கி வந்தது. தம்மிடம் பணம் இல்லாவிட்டாலும், வேறு யாரிடமாவது பத்து ரூபாய் வாங்கி, பாசுபதத்திற்கு அனுப்புவது நடனசுந்தரத்தால் முடியாத காரியமல்ல. அந்த வழியில் அவர் யோசனை போயிருந்தால் கண்டிப்பாய்ச் செய்திருப்பார். அப்படிப் போகவில்லை. அவர் யோசனை எல்லாம் பாசுபதம் பணம் இல்லாமல் படும் கஷ்டங்களை மனோராஜ்யம் செய்வதிலேயே போய்க் கொண்டிருந்தது.

பகல் இரண்டு மணி இருக்கும், பாசுபதத்தினிடம் இருந்து ஒருவன் நடனசுந்தரத்திற்குக் கடிதம் கொண்டு வந்தான். இதற்குப் பதில் வாங்கிக்கொண்டு வரச் சொன்னர் என்று அவன் சொன்னன். பத்து ரூபாய் கடன் விஷயமாகத்தான் இருக்கும் என்று நினைத்த செந்தாமரை, “அவர் தூங்கிக்கொண்டிருக்கிருர் ” என்று சொல்லி, கடிதத்தை வாங்காமல் திருப்பி அனுப்பினள். நடனசுந்தரம் தூங்கவில்லை. விழித்துக் கொண்டுதான் இருந்தார். செந்தாமரை உள்ளே வந்த

தும் "ஏன் இப்படிச் செய்தாய்? கடிதத்தை வாங்கிப் பார்த்திருக்கக் கூடாதா?" என்று கேட்டார்.

செந் :—அதில் பார்க்க வேண்டியது என்ன இருக்கிறது? புதையலா இருக்கப் போகிறது? கடன் இருக்கப் போகிறது? கடன் கேட்டிருப்பார். தெரியாதா?

நடன:—புதையல் இருந்தால்?

செந் :—ஆமாம். இவர் அதிருஷ்டத்திற்குப் புதையல் வேறு கேடா?

நடன :—செந்தாமரை, இப்படிப் பேசாதே. வாழ்வும் தாழ்வும் நமது கையில் இல்லை.

செந் :—யார் கையில் இருந்தால் என்ன? கண்டபடி செலவிடுவானேன், அப்புறம் திண்டாடுவானேன்? இந்த மாதிரியான ஊதாரிகளையே எனக்குப் பிடிக்காது.

நடன:—நீ இன்று திடீரென்று கோழிப் புலவு விருந்து வைப்பது ஊதாரித்தனமல்லவா?

செந் :—நானா ஊதாரி? காரணமில்லாமல் ஒரு தம்பிடி செலவிடுவேனா?

வீம்புப் பேச்சில் இம்மாதிரி செந்தாமரை பேசி விட்டாள். பேசிய பின்புதான் தவறு புரிந்தது. அப்புறம் என்ன செய்வது?

நடன:—அப்படியா? என்ன காரணம் சொல்லு. இதுவரை சொல்லவில்லையே!

செந்தாமரையால் இனிமேல் மறைக்க முடியவில்லை. கோபம் வந்தது. தனது அறிவீனத்தை நினைத்துப் பொருமினாள். பொருமி என்ன செய்ய? உள்ளதைச் சொல்லவேண்டியதாயிற்று.

செந்:—என் தம்பிக்கு நல்ல வேலையாகப் பார்த்துக் கொடுப்பதாகக் கல்யாணியம்மாள் சொல்லி யிருக்கிறார்கள். உங்களுக்குத் தெரியாதா?

நடன:—ஓஹோ, வேலை வாங்கிக் கொடுப்பதற்காக அட்வான்ஸ் விருந்தா? வேலை வாங்கிக் கொடுத்தவர்

அரிசியில்லாமல் திண்டாடுகிறார். அவருக்கு உதவியைக் காணவில்லை. என்ன நன்றி கெட்ட உலகம்!

செந் :—பேச்சை விடுங்கள். மறுபடியும் ஆரம்பித்து விட்டீர்களா? இந்த நன்றி கெட்ட பேச்சை.

தினகரன் மாலை வீட்டிற்கு வந்ததும் செந்தாமரை விருந்துக்கு அழைத்திருப்பதைக் கல்யாணியம்மாள் சொன்னாள். "விருந்தா? இன்றைக்கென்ன திடீர் விருந்து?" என்று தினகரன் கேட்டான்.

"அது எனக்குத் தெரியாதப்பா, நீ கட்டாயம் வர வேண்டும் என்று செந்தாமரை சொன்னாள்" என்றாள் கல்யாணி.

தினகரன் :—கட்டாயம் வரவேண்டுமா? அவர்கள் வீட்டில் ஏதாவது விசேஷம் என்றால் சரி. ஒன்றும் இல்லாமல் சும்மா விருந்தென்றால் எனக்கு ஒன்றும் புரியவில்லையே.

கல்யாணி:—ஒருவரை ஒருவர் வேண்டியவர்கள் சாப்பிட அழைப்பது இல்லையா? இதற்கு விசேஷமென்னப்பா வேண்டும்?

தினகரன் :—நானும் எத்தனையோ வருஷங்களாக இந்த ஊரில் இருக்கிறேன். இதுவரை ஒரு தடவை கூட அவர்கள் வீட்டில் சாப்பிடக் கூப்பிட்டதில்லையே! பாசுபதத்திற்கு நடத்தினார்களே பிரமாதமான விருந்து. அதற்குக்கூட என்னைக் கூப்பிடவில்லையே! இப்போது என்ன அவசியம் என்றுதான் கேட்கிறேன்.

கல்யாணி :—ஓஹோ, அப்படிக் கேட்கிறாயா? அதெல்லாம் காரியமாகத்தான் நடக்கும். செந்தாமரை, தம்பிக்கு உன் மூலம் வேலை கிடைக்கப் போகிறதல்லவா, அதற்காக உனக்கு விருந்து.

தின :—அப்படிச் சொல்லு. பாசுபதத்தால் வேலை கிடைத்தவுடன் அவருக்கு ஒரு விருந்து. அதற்கு என்னைக் கூப்பிடவில்லை. இப்போது என்னால் வேலை கிடைக்கப் போகிறது என்றால், எனக்கு ஒரு விருந்து.

நிச்சயமாக இந்த விருந்திற்குப் பாசுபதத்தை அழைக்கப் போவதில்லை. நீ வேண்டுமானால் பாரேன்.

கல் :—பாசுபதத்தைக் கூப்பிடவில்லை என்று அவளே சொல்லிவிட்டாளே.

தின :—பார்த்தாயா! இவர்கள் எல்லோரும் காக்காய் பிடிக்கிற கும்பல். இந்தக் கும்பலே ஜென்மத்திற்கும் எனக்குப் பிடிக்காது. நான் விருந்துக்கு வரப் போவதே இல்லை அக்கா. நான் வேறு ஒரு இடத்தில் சாப்பிட்டு விட்டு இரவு பத்து மணிக்குத்தான் வீட்டிற்கு வருவேன். அதற்கு முன்னால் வந்தால் கூட இந்தக் கும்பல் விடாது.

தினகரன் அக்காளின் பதிலை எதிர்பார்க்காமலேயே வெளியே போய்விட்டான். விருந்துக்கு வரமாட்டேன் என்று தினகரன் சொன்னதில் ஒரு விதத்தில் கல்யாணிக்குத் திருப்திதான். செந்தாமரையை மட்டந் தட்டுவதில் அவ்வளவு ஆவல்.

விருந்துக்குத் தினகரன் வராத செய்தி கேட்டு, செந்தாமரைக்கு ரொம்ப வருத்தம். வருத்தத்திற்கு இரண்டு காரணங்கள். ஒன்று தன் தம்பிக்கு நிச்சயமாகப் பெரிய வேலை கிடைக்கவேண்டுமே என்ற கவலை. இரண்டாவது தான் கூப்பிடும்போது வராமல் தன்னை மதிக்காமல், போய்விட்டானே என்பது. ஆனால், காலையில் டெலிபோனில் கல்யாணி அம்மாள் பேசிய தோரணையிலிருந்து அவளிடம் வெளிப்படையாகத் தன் வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்ள விரும்பவில்லை.

விருந்தில் பல பேச்சுக்கள் அடிபட்டன. பாசுபதத்தின் பேச்சும் வந்தது. "என்ன இருந்தாலும் மனிதருக்கு இவ்வளவு கஷ்டம் வரக்கூடாது" என்றார் நடனசுந்தரம். "நிதானமாய் நடந்தால் கஷ்டம் ஏன் வருகிறது?" என்றாள் செந்தாமரை. செந்தாமரையின் தம்பி பழனி, "எது எப்படி இருந்தாலும் சரி, ஆசாமி ரொம்பத் தைரியமானவர்" என்றான்.

கல்யாணி :—கஷ்டமும் துக்கமும் கலந்துதானே வரும்?

பழனி :—கஷ்டம் என்ன, சுகம் என்ன? பெயர் நல்ல பெயராய் இருந்தால் அது போதுமே.

செந்தாமரை :—என்ன நல்ல பெயரைக் கண்டு விட்டாய்? பணம் இருந்து விட்டால் தானே ஊரில் மதிப்பு இருக்கும்.

பழனி :—நீ சொல்லுவது சிலருக்குப் பொருந்தும். எல்லோருக்கும் அல்ல. பாசுபதத்தினிடம் பணம் இருக்கிறதோ, இல்லையோ அவரைக் கண்டால் இன்றும் பலருக்குப் பயம்தான்.

செந்தாமரை :—அதனால் உலைப் பானை கொதித்து விடுமா?

பழனி :—என்ன அக்கா, இப்படிப் பேசுகிறாய்? அவர் வாய் திறந்து கேட்டால் பணமா கிடைக்காது.

செந்தாமரை :—இன்று காலை பத்து ரூபாய்க்குத் திண்டாடினார்.

கல்யாணி :—எனக்குத் தெரிந்திருந்தால் நான் அனுப்பி இருப்பேனே?

பழனி :—எனக்குத் தெரிந்திருந்தால் நான் இருபது ரூபாய் அனுப்பியிருப்பேன். ஒரு தடவை எனக்கு டிராம் பாஸுக்குப் பணம் இல்லாமல் திண்டாடியபோது இருபது ரூபாய் கொடுத்தார். இதை நான் இன்னம் திரும்பக்கூடக் கொடுக்கவில்லை, பாவம்.

இதைக் கேட்டதும் செந்தாமரைக்குக் கோபம் வந்தது. "என்னிடம் கேட்டிருந்தால் நான் கொடுத்திருப்பேனே" என்றாள்.

பழனி :—உன்னிடமா? ஹூம். எல்லாரிடமும் கேட்டும் கிடைக்காததால்தான் அவரிடம் கேட்டேன். அவரைப் பற்றி நீ இப்படிப் பேசக்கூடாது அக்கா.

விருந்து சாப்பிடும் போதெல்லாம் பாசுபதத்தின் சோர்வுற்ற முகமே நடனசுந்தரத்தின் மனக்கண் முன்னால் வந்து நின்றது. அதற்காக அவர் சாப்பாட்டைக் குறைத்துக் கொள்ளவில்லை. விருந்து சாப்பிடும்

போதெல்லாம் செந்தாமரைக்குத் தன்னுடைய வெற்றியே மனத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. பாசுபதத்தை விட அதிகமான செல்வாக்குள்ளவர்களிடம் தனக்குச் செல்வாக்கு உண்டென்பதை நினைத்துப் பூரிப்படைந்தாள்.

விருந்துக்கு மத்தியில் மீண்டும் பாசுபதத்தின் வீட்டிலிருந்து கடிதம் வந்தது. "பூஜை வேளையில் கரடி வந்த மாதிரி என்ன அவசரம் இந்தக் கடிதத்திற்கு? மேஜை மேல் கொண்டுவை" என்று வேலைக்காரியிடம் செந்தாமரை சொன்னாள். ரயில் வண்டியில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, எதிரில் பிச்சைக்காரர் நின்றுகொண்டு "பசிக்குது" என்று சொன்னால் சாப்பிடுகிறவர்களுக்கு எவ்வளவு கோபம் வருமோ அவ்வளவு கோபம் வந்தது செந்தாமரைக்கு.

இரவு படுக்கப் போகும்போது பாசுபதத்தின் கடிதத்தை எடுத்து நடனசுந்தரத்திடம் செந்தாமரை கொடுத்தாள். அதிலே ஒரு தந்தியும் கடிதமும் இருந்தன. அதை வாசித்துப் பார்த்ததும் நடனசுந்தரம் திடுக்கிட்டு, "ஆ! லட்சம் ரூபாயா?" என்றார்.

செந்தாமரை :—என்ன லட்சம் ரூபாயா? கடன் கேட்கிறாரா?

நடன :—இனிமேல் அவர் ஏன் நம்மிடம் கடன் கேட்கப் போகிறார்? லட்சம் ரூபாய் அவருக்குப் பரிசு கிடைத்திருக்கிறது.

செந் :—லட்சம் ரூபாய் பரிசா? பாசுபதத்திற்கா?

நடன :—ஆம்.

செந்தாமரை சிறிது நேரம் ஒன்றுமே பேசவில்லை. திடீரென்று "எனக்கு அப்பொழுதே தெரியும்" என்றாள்.

நடன :—என்ன தெரியும்?

செந் :—அவர் எவ்வளவு பெரிய ஆள்! அவருக்கு ஏதோ திடீரென்று கஷ்டம் வந்தால் அப்படியேவா

இருந்து விடுவார்? அவரைப் பற்றிக் குற்றம் சொன்ன வர்கள் இனி என்ன முகத்தோடு அவரிடம் பேசுவார் கள்? ஒருவருக்குக் கஷ்டம் வந்து விட்டால் ஒரேயடி யாகத் தாழ்த்திப் பேசுவது நம்ம ஆட்களுக்கே வழக்கம்.

நடன:—யாரு, நீயா பேசுகிருய்?

செந்:—பின்னே என்ன, எப்போ பார்த்தலும் அவருக்குக் கஷ்டம் வந்து விட்டது, கஷ்டம் வந்து விட்டது என்று சொன்னீர்களே, என்ன பேச்சு அது?

நடனசுந்தரத்தால் பதில் பேச முடியவில்லை. பாசுபதத்தைப் பற்றிச் செந்தாமரை பேசும் தோரணை பெரிய அதிர்ச்சியாய் இருந்தது. இனி ப்ாசுபதத்தின் சோர்ந்த முகத்தைத் தம் மனக்கண் முன்பு சித்தரிக்க முடியாதே என்பதை அவர் நினைத்தபோது அதைவிடப் பெரிய அதிர்ச்சியாய் அவருக்கு இருந்தது.

# பாஞ்சாலியின் ஏக்கம்

**மீ**னாட்சிசுந்தரத்திற்குச் சொர்ணம் செல்லக் குமாரி. கடைக் குட்டியானதால் ரொம்பப் பிரியமாய் வளர்த்தார். ஸ்கூல் பைனல்வரை படிக்க வைத்து, தஞ்சையில் நல்ல சௌகரியமான நிலைமையில் இருந்த கிருஷ்ணசாமிக்கு விவாகம் செய்து வைத்தார். கல்யாணமாகி ஐந்து வருஷங்களாகின்றன. நாலு வயதில் மணி என்ற பெயரோடு ஒரு பையன் இருக்கிறான். மணி என்ன கேட்டாலும் இல்லையென்று சொல்லாமல் அவன் தந்தை வாங்கிக் கொடுப்பார். மீனாட்சிசுந்தரத்திற்கும் பேரனிடம் அளவு கடந்த வாஞ்சை. சொர்ணம் சென்னைக்குத் தன் மகன் மணியோடு வந்து விட்டால் போதும், எப்பொழுதும் பேரனுடன் மீனாட்சிசுந்தரம் கொஞ்சிக்கொண்டிருப்பார்.

இந்தத் தடவை சென்னைக்கு வந்து ஒரு மாதமாயிற்று. அன்று புறப்படுவதாகத் திட்டம் போட்டிருந்தார்கள். மீனாட்சிசுந்தரமும் பாஞ்சாலியும் போட்டி போட்டுக்கொண்டு மகளுக்கும் மருமகனுக்கும் பேரனுக்கும் வெகுமதிகளை வாங்கிக் குவித்தார்கள். மகளுக்கு உயர்ந்த புடவைகளோடு மருமகனுக்கும் நல்ல ஜரிகை வேஷ்டிகள், அங்க வஸ்திரங்கள் எடுத்து வைத்தார்கள்.

பேரனைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. காலினால் மிதித்து ஓட்டக்கூடிய ஒரு சிறிய மோட்டாரைப் பேரனுக்கு வாங்கிக் கொடுத்தார்கள்.

ரயிலுக்குப் புறப்படுகிற நேரம் வந்தது. மீனாட்சிசுந்தரம் ரயில்வே ஸ்டேஷன் வரையில் கூடவே போனார். பாஞ்சாலியிடம் மகளும் மருமகனும் பேரனும் விடை பெற்றுக்கொள்ள வந்தார்கள். "பாட்டி, ரயிலில் ஏற வேண்டாம். என் மோட்டாரிலேயே எல்லாரும் போகலாம்" என்று சொன்னான் மணி.

பாட்டிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. "நீ பெரிய பையனுய் வந்ததும் உனக்குப் பெரிய கார் வாங்கித் தருகிறேன். அப்போ எல்லாரையும் கூட்டிக்கொண்டு போகலாம், கண்ணு" என்று கூறி, பேரனை எடுத்து முத்தமிட்டாள். மகள் விடை பெற்றுக்கொண்டாள். மருமகன் மறைவாக நின்றுகொண்டு, "நானும் போய்வருகிறேன்" என்று சொன்னுர்.

மாமியாரும் மருமகனும் எதிரெதிராக நின்று பேசிக்கொள்ளுவதில்லை. "மகாராசனுய்ப் போய் வாருங்கள்" என்று கூறிவிட்டு மருமகனைப் பார்த்தாள். இருதயம் நின்றுவிடும் போல பாஞ்சாலிக்கு பக் என்று ஒரு பதட்டம் ஏற்பட்டது. எதனுல் அந்தப் பதட்டம் ஏற்பட்டது? இவ்வளவுக்கும் மருமகன் முகத்தைப் பூராவாகப் பார்க்கவும் இல்லை. அரைகுறையாகத்தான் பார்த்தாள். மருமகன் பார்ப்பதற்கு விகாரமானவருமல்ல. அழகாய் இருப்பார். அதிலும் அன்று வெகுமதியாய்க் கிடைத்த ஜரிகை வேஷ்டியைக் கட்டிக்கொண்டு, ஒரு சட்டை அணிந்து, அதற்கு மேல் ஜரிகை அங்கவஸ்திரத்தையும் போட்டிருந்தபடியால் அவர் அழகு இன்னம் அதிகமாயிற்று. எனவே, அவர் சொரூபத்தில் ஏதோ விகாரம் ஒன்றைக் கண்டு அவளுக்கு அந்த அதிர்ச்சி ஏற்படவில்லை. வேறு என்ன காரணம் என்பதும் தெரியவில்லை. அவர் விடை பெற்றுக்கொண்டு போகும்போதுமட்டும் காரணமில்லாத ஒரு அதிர்ச்சி பாஞ்சாலிக்கு ஏற்பட்டது.

மாமியார் முகத்தில் திடீரென்று ஏற்பட்ட மாறுதலைக் கிருஷ்ணசாமி கவனிக்காமல் இல்லை. அவருக்கும் காரணம் புரியவில்லை. தன்னைப் பார்த்தவுடன் அப்படிப் பதறுவானேன் என்று யோசித்துக்கொண்டே ரயில்வே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார். மனைவியிடம் இதைச் சொல்ல வேண்டாமென்று நினைத்துக் கொண்டார்.

ரயிலில் வழியனுப்பிவிட்டுத் திரும்பி வந்த மீனுட்சிசுந்தரம் ரயில் வண்டிக்குள்ளும் பேரன் மோட்டார் ஓட்டும் பிரதாபத்தைப் பற்றி அளந்து கொண்டிருந்தார்.

"சௌக்கியமாய்ப் போய்ச் சேர்ந்து க்ஷேமமாய் இருக்க வேண்டும். மருமகனைப் பார்த்ததிலிருந்து காரண மில்லாமல் ஒரு பதட்டம் ஏற்பட்டிருக்கிறது. அரசமரப் பிள்ளையாருக்குப் பத்துத் தேங்காய் விடலை போடுவதாய் நேர்ந்திருக்கிறேன்" என்று பாஞ்சாலி கூறினாள்.

மீனாட்சிசுந்தரம், "உனக்குக் காரணமில்லாமல் பட படப்பு ஏற்படுவது இப்பொழுது வர வர அதிகமாய் இருக்கிறது. பத்துத் தேங்காய் என்ன, நூறு தேங்காய் வேண்டுமானாலும் விடலை போடு" என்றார்.

அன்றிரவு பாஞ்சாலிக்குச் சரியாகத் தூக்கம் வரவே இல்லை. இடையில் ஒரு கனவு கண்டாள். ஒரு காட்டில் தாங்கள் குடும்பத்தோடு போய்க் கொண்டிருப்பது போல வும், திடீரென்று ஒரு வேங்கைப் புலி தோன்றித் தங்களை நோக்கி வருவது போலவும் கனவு கண்டு உளறிக் கொண்டு விழித்தாள். அப்புறம் தூங்கவே இல்லை. பகவானைப் பிரார்த்தனை செய்தாள். குடும்பத்திற்கு எவ் விதக் கெடுதலும் வரக் கூடாதென்றும், தனது கணவர் சொல்லியபடி நூறு தேங்காய் விடலை போடுவதாகவும் அரசமரப் பிள்ளையாரை வேண்டிக் கொண்டாள்.

மகளும் மருமகனும் பேரனும் புதன்கிழமை இரவு புறப்பட்டுப் போனார்கள். சௌக்கியமாய்ப் போய்ச் சேர்ந் தோம் என்று வியாழக்கிழமை தந்தி கிடைத்த பின்பு தான் பாஞ்சாலிக்கு வயிற்றில் பால் வார்த்த மாதிரி இருந்தது. பிள்ளையாருக்கு நூறு தேங்காய்களைத் தயார் செய்யும்படி வேலைக்காரனிடம் சொன்னாள். மறுநாள் வெள்ளிக்கிழமை விடலை போட்டுவிட வேண்டுமென்று உத்தரவு போட்டாள்.

அன்றிரவு விருந்து பலமாய் இருந்தது. சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது தன்னுடைய மகிழ்ச்சியைப் புரு ஷனிடம் வெளியிட்டாள். அவர் சிரித்துக் கொண்டு, "நான்தான் நேற்றே சொன்னேனே? உனக்கு வரவர படபடப்பும் அர்த்தமில்லாத பயமும் ஏற்பட்டுக்கொண் டிருக்கின்றன. அப்படி விடக்கூடாது. எடுத்ததற்கெல்

லாம் பயப்படுவதென்றால் இருதயத்திற்கு ரொம்பக் கெடுதல். டாக்டர்கூட அன்று உன்னிடம் சொல்லிக்கொண்டிருந்தாரே!'' என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தார். அன்றிரவு பாஞ்சாலி நிம்மதியாய்த் தூங்கினாள்.

வெள்ளிக்கிழமை காலையில் எழுந்தாள். முதல்நாள் இருந்த நிம்மதியில்லை; மறுபடியும் காரணம் சொல்லத் தெரியாத பயம் தோன்றியது. புருஷனிடம் சொன்னால் ஏதாவது கிண்டல் செய்வாரென்று நினைத்துச் சொல்லவில்லை. மத்தியானம் சாப்பிட்டுவிட்டு வெற்றிலை போட்ட பின்பு, மாலையில் பிள்ளையாருக்குப் போடவேண்டிய விடலைக்குத் தேங்காய்கள் தயாராய் இருக்கின்றனவா என்பதை விசாரித்தாள். அப்புறம் கொஞ்சம் தூங்கலாம் என்று எண்ணிப் படுத்தாள்.

நன்றாய்த் தூங்கிக் கொண்டிருக்கும்போது, யாரோ ஆள் நடமாடுகிற சப்தம் கேட்டுத் திடீரென்று விழித்தாள். ஒருவரையும் காணவில்லை. முன் கட்டிற்கு வந்து திண்ணையைப் பார்த்தாள். தூக்கக் கலக்கம் இன்னம் போகவில்லை. அங்கே திண்ணையில் அவள் கண்ட காட்சி அப்படியே ஓர் அதிர்ச்சியை உண்டாக்கி, தூக்கக் கலக்கத்தை அந்த விநாடியே விரட்டி விட்டது. "ஆ'' என்று ஏக்கம் கொண்டாள். ஏனெனில், மருமகன் திண்ணையில் நின்று கொண்டிருந்தார்!

அப்பொழுது மாலை ஐந்து மணி இருக்கும். அவ்வளவு நேரத்திற்கு மருமகன் அங்கே வந்ததுதான் ஆச்சரியமாய் இருந்தது. ரயிலில் வந்திருந்தால் காலையில் வந்திருக்க வேண்டும். அந்த நேரத்திற்கு ஐந்து மணிக்கு வருவதென்றால் மோட்டாரில் வந்திருக்க வேண்டும். மோட்டாரில் வருவதென்றால் ரொம்ப முக்கியமான காரியமாய் இருக்க வேண்டும். முக்கியமான காரியமென்றால் தஞ்சையில் தம் மகளையும் பேரனையும் பற்றியதாய் இருக்குமோ என்றெல்லாம் யோசனைகள் ஒரு விநாடியில் தோன்றித்தான் அந்த ஏக்கத்தை ஏற்படுத்தின. உடனே சமாளித்துக்கொண்டு, "யார், மாப்பிள்ளையா? எப்போ வந்தீர்கள்?'' என்று ஜன்னல் வழியாகக் கேட்டாள்.

மாப்பிள்ளை பதில் சொல்லவில்லை. பாஞ்சாலிக்குத் திகில் அதிகமாயிற்று. "மருமகன் ஏன் பேசவில்லை? ஏதாவது கெட்ட சமாசாரமாய் இருக்குமோ?" என்று பயப்பட்டாள். மறுபடியும் கொஞ்சம் பலத்த தொனியில், "என்ன மாப்பிள்ளை, பேசாமல் இருக்கிறீர்கள்? ஊரில் சொர்ணமும் மணியும் சௌக்கியம்தானே?" என்று கேட்டாள்.

அதற்கும் பதிலில்லை. தலையை மட்டும் அசைத்தார். அந்த அசைப்பிலிருந்து சௌக்கியமா சௌக்கியமில்லையா என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. பாஞ்சாலிக்குத் திகில் முன்னைவிட அதிகமாயிற்று. "இதென்ன ஒன்றும் பேசமாட்டேன் என்கிறீர்களே? சொர்ணமும் மணியும் சௌக்கியமா இல்லையா? நீங்கள் எதற்காக இவ்வளவு நேரத்திற்கு அவசரமாய் வந்திருக்கிறீர்கள்? ஏதாவது பேசுங்களேன்!" என்று முன்னைவிட அதிகமான தொனியில் பேசிக்கொண்டு, மருமகனுக்கு எதிரே வருவதில்லை என்ற பழக்கத்தையும் மறந்து திண்ணைக்கு வந்தாள்.

மாமியார் வருவதைப் பார்த்த மருமகன் திண்ணையை விட்டு இறங்கினாரே யொழிய பதில் சொல்லவில்லை. மருமகன் வெளியே பார்த்து நடப்பதைக் கண்டு இன்னும் அதிகமாய்ப் பதறிப்போன பாஞ்சாலி, உடலெல்லாம் பதற, "போகாதீர்கள், போகாதீர்கள்! ஊரில் எல்லாரும் சௌக்கியமா என்பதைச் சொல்லி விட்டுப் போங்கள்" என்று கூச்சலிட்டாள்.

மருமகன் அப்பொழுதும் பேசவில்லை. பேசாதது மட்டுமல்ல, வீட்டை விட்டு வெளியேயும் போய்விட்டார். அதைப் பார்த்ததும், "அட கடவுளே! என்ன விபத்தோ தெரியவில்லையே!" என்று பெரிய கூச்சல் போட்டு, தனது இரு கைகளால் தன் தலையில் அடித்தாள். அவ்வளவுதான், அப்படியே மூர்ச்சை யடைந்து விழுந்தாள்.

அச்சமயம் மீனாட்சிசுந்தரம் வீட்டிற்குள் நுழைந்து கொண்டிருந்தார். மனைவி ஏதோ கூச்சல் போட்டதையும்

கீழே விழுந்ததையும் பார்த்தார். மனைவியைத் தூக்கி உள்ளே படுக்கையில் கிடத்தி டாக்டரை அழைத்துவர ஆள் அனுப்பினர். மனைவி முகத்தில் கொஞ்சம் தண்ணீரைத் தெளித்து வீசினர். 'கூச்சல் என்ன, ஏன் கீழே விழுந்தாள்' என்பது அவருக்குத் தெரியவில்லை. வீட்டிலுள்ள வேலைக்காரர்களுக்கும் தெரியவில்லை.

அவர் வீட்டிற்குள் வரும்போது ஐந்தேகால் மணி. டாக்டர் வந்து பார்த்து வேண்டிய சிகிச்சைகள் செய்து விட்டு ஆறு மணிக்குப் போனர். டாக்டர் போனதும் மீனாட்சிசுந்தரத்திற்கு ஒரு தந்தி வந்தது. தந்தியைப் பிரித்ததும் "ஆ" என்று அப்படியே சாய்ந்துவிட்டார்.

சிறிது தூரத்தில் போய்க்கொண்டிருந்த டாக்டரைத் திரும்பவும் கூட்டி வந்தார்கள். அந்தத் தந்தியில் அன்று மாலை ஐந்து மணிக்கு மருமகன் கிருஷ்ணசாமி மாரடைப்பினல் காலமானர் என்று எழுதி யிருந்தது.

